பாருங்கள்!

ஒரு அரை வில்லை

ஸன்லைட்தான்

இவ்வளவு சலவையும்

செய்து முடித்தது!

அதன் அதிகப்படியான நுரையே இதைச் சாதித்தது!



ஸன்லைட்

சோப்

பளிச்சென்று வெண்மையாக வெளுக்கிறது

S. 242-50 TM

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 16 இதழ் 19 டிசம்பர் 9, 1956 துன்முகி ௵ கார்த்திகை 24



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.





# சூ-என்-லாய் விஜயம்

பாரத நாட்டில் சீனப் பிரதமர் சூ - என் - லாய் சென்ற விடமெல்லாம் மக்கள் தங்கள் அன்பு கலந்த வரவேற்பை நல்கி வருகிறார்கள். சென்னையிலும் மக்கள் குதூகலத்துடன் தங்கள் அன்பார்ந்த வரவேற்பை அளித்துள்ளனர்.

பாரத நாட்டுக்குப் பல ஆசிய நாட்டுத் தலைவர்கள்விஜயம் செய்து, இந்தியப் பிரதமரின் நட்பையும் பாரத மக்களின் அன்பையும் பெற்று வருகின்றனர்.

சில நாட்களுக்கு முன் ஸவூதி அராபிய மன்னர் விஜயம் செய்தார். ஈரான் மன்னர் விஜயம் செய்தார். இந்தோனேசியப் பிரதமர் விஜயம் செய்தார். இப்போது திபேத்திலிருந்து தலாய் லாமாவும் பஞ்சன் லாமாவும் விஜயம் செய்திருக்கின்றனர். இன்னும் பர்மா, இலங்கை முதலிய பல நாடுகளின் பிரதமர்களும் தில்லிக்கு வந்து இந்தியப் பிரதமருடன் கலந்து பேசினர்.

இவ்வாறு ஆசியத் தலைவர்கள் இந்தியாவுக்கு விஜயம் செய்வதும், பாரதப் பிரதமர் அடிக்கடி ஆசிய நாடுகளுக்குச் சென்று வருவதும் மிகவும் போற்ற வேண்டிய காரியமாகும். ஏனெனில் பரஸ்பர உபசரிப்புகள் நட்பை வளர்க்கப் பெருந்துணையாக இருக்கின்றன. இந்த நட்பு ஆசிய நாடுகளின் சுதந்திரத்துக்குப் பெரும் பலமாகும். இதனால், இவ்வுபசரிப்புகளுக்கும் வரவேற்புகளுக்கும் பிரயாணங்களுக்கும் ஆகும் செலவை யாருமே குறை சொல்லமாட்டார்கள்; தவறாகவும் எண்ண மாட்டார்கள்.

நமது நாட்டின் வருமானத்தில் பெருந்தொகை ராணுவத்துக்காகச் செலவிடுகிறோம். ஏறத்தாழ இதே நிலை ஒவ்வொரு நாட்டிலும் நிலவுகிறது. 'ராணுவம் தற்காப்புக்காக வேண்டியிருக்கிறது' என்று யாரும் ராணுவத்துக்காகும் செலவைக் குறை கூறுவதில்லையல்லவா? ராணுவ பலத்தைப் போலவே உதவக்கூடியது ஆசிய நாடுகளின் பரஸ்பர நட்பு. ஆகவே ஆசிய நாடுகளின் நட்பை வளர்க்க உதவும் செலவுகளை வீண் செலவு என்று எப்படிக் கருதமுடியும்?

இந்தியா, சீனா, திபேத், இந்தோனேசியா, இலங்கை, பர்மா, அரபு நாடுகள் இவையெல்லாம் ஒன்று கூடினால் ஒரு மகோன்னத சக்தியை ஆசியா பெற்றுவிடும்.

எங்கே இப்படிப்பட்ட பெரிய சக்தி ஆசியாவில் உருப்பெற்று விடுமோ என்று மேல் நாடுகள் கவலைப்பட்ட வண்ணமாகவே இருக்கின்றன. ஆசிய நாடுகள் ஒன்று சேராமலிருக்கவும், பிரித்து விடவும் மேல் நாட்டார் செய்யும் முயற்சிகளும் தந்திரங்களும் ஓய்ந்தபாடாக இல்லை. பலவிதமாக வலைகள் வீசிப்பார்க்கின்றனர். மேல் நாடுகளின் வலையில் விழுவதற்கு நமது பாகிஸ்தான் நண்பர்கள் எப்பொழுதுமே தயாராக இருக்கிறார்கள். பாகிஸ்தானில் பிரதமர் பதவிக்கு வருகிறவர்கள் இந்த விஷயத்தில் ஒருவர்மேல் ஒருவர் போட்டி போடுகிறார்கள்.

எகிப்தின் மீது ஆங்கிலேயர் அநியாயமாகப் போர் தொடுத்தனர். உலக நாடுகளின் பெருங் கண்டனத்துக்கும் பிரிட்டனும் பிரான்ஸும் உள்ளாயின. உலகமெல்லாம் பிரிட்டனைக் கண்டித்த பிறகும் கூடப் பாகிஸ்தானுக்குப் புத்தி தெளிந்ததாகத் தெரியவில்லை. இது ஒரு பரிதாபமே அல்லவா?


சூ-என்-லாய்

இஸ்லாமிய மதத்துக்குக் காவலராகத் தாங்கள் தோன்றியிருப்பதாகப் பாகிஸ்தான் தலைவர்கள் சொல்லிக் கொண்டார்களே ? அவர்களது அந்த மதப் பற்று இப்பொழுது எங்கே போயிற்று ? ஆங்கில மோகத்துக்கு ஒரு மருந்தில்லை போலும்.

நமக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. சில நாட்களுக்கு நமது பாரதப் பிரதமர் நேருஜி பாகிஸ்தானுக்குப் பிரதம மந்திரியாகவும், ஜனாப் சுஹரவர்தி இந்தியாவுக்குப் பிரதம மந்திரியாகவும் இருந்து ஆட்சி நடத்தினால் நன்றாக இருக்கும். பாகிஸ்தானின் லாபம் பெரிதாகும். சுஹரவர்தியவர்களின் லாபம் பெரிதாக இருக்கும். புது யுகத்தைத் தோற்றுவிக்க வேண்டுமானால் புதுமுறைகளைத் தேடித்தானே ஆகவேண்டும்?

## திருடனின் தாயார்

குண்டு வீச்சால் நாசமாக்கப்பட்டுள்ள சூயெஸ் கால்வாயை உடனடியாகப் பழுது பார்ப்பதுதான் ஐ. நா.வின் முதல் வேலையாக இருக்க வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் இப்போது தன் சுய உரிமைக்காகப் போராடுகிறது. சூயெஸ் கால்வாயை இந்த மோசமான நிலைக்கு உள்ளாக்கியது யார் ? பிரிட்டிஷ் அரசாங்கம்தான் !

இதைப் படிக்கும் போது நமக்கு பிரபந்தத்தின் விளக்க நூல் ஒன்றில் உள்ள ஒரு பழைய கதை நினைவுக்கு வருகிறது என்று ராஜாஜி அவர்கள் ஒரு பத்திரிகைக்கு வேடிக்கையாக எழுதி யிருக்கிறார்.

ஒரு ஸ்திரீ அரசனிடம் போய் ஒரு வீட்டின் சொந்தக்காரரைப் பற்றிப் புகார் செய்தாள்.

“அரசனே ! என் மகன் கொல்லப்பட்டு விட்டான். நான் ஒரு அனாதை ஸ்திரீயாகி விட்டேன். தாங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். இதோ இந்த வீட்டுக்காரர் சரிந்து விழக்கூடிய ஈர மண்ணைக் கொண்டு தம் வீட்டைக் கட்டி யிருக்கிறார். என்னுடைய மகன் இவர் வீட்டில் புகுந்து திருடுவதற்காகக் கன்னம் இட்டான். ஈர மண் சுவர் என் மகன் கழுத்தில் சரிந்தது. அதில் அவன் அகப்பட்டுக் கொண்டு இறந்து விட்டான். நான் திக்கற்றவளாகி விட்டேன். எனக்கு நஷ்ட ஈடு தரவேண்டுமென்று இந்த அநியாய வீட்டுக்காரருக்கு உத்தரவு போடுங்கள்.”

பிரிட்டிஷ் சர்க்காரின் ஜீவ நாடியான சூயெஸ் கால்வாயைப் பற்றிக் கதையில் வரும் திருடனின் தாயைப் போல் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் புகார் செய்கிறார்கள்.

ஐக்கிய தேச சபையின் அங்கத்தினர் நாடுகளில் ஒன்றான பிரிட்டன் ஐ. நா. விதிகளையும் அதிகாரங்களையும் மீறி எகிப்தில் ராணுவ நடவடிக்கை மூலம் ஆக்கிரமிப்பு செய்திருக்கிறது. இதை ஐக்கிய தேச சபை இன்னமும் பொறுத்துக் கொண்டிருப்பது விந்தையே !

## வெளியேற வேண்டும்

ஐ. நா. துருப்புக்கள் எகிப்துக்குச் சென்றிருப்பது எகிப்து துருப்புக்களை அடக்குவதற்கல்ல; ஆங்கில பிரஞ்சு துருப்புக்களை வெளியேற்றுவதற்காகவே. இதை உணராமல் பிரிட்டிஷ் படைத் தலைவர்கள் இதுவரை வீண் கால தாமதம் செய்து வந்தார்கள். இதனாலெல்லாம் பழுதடைந்த பிரிட்டிஷ் கௌரவம் மேலும் குறையுமே தவிர சீர்ப்படப் போவதில்லை. மறுபடியும் பிரிட்டிஷார் உலகத்தின் நன்மதிப்பைப் பெற வேண்டுமானால் நியூ ஸ்டேட்ஸ்மன் பத்திரிகையில் சொல்லப்பட்டிருக்கும் வண்ணம் உடனே மறு பேச்சின்றி எகிப்து நாட்டிலிருந்து வெளியேற வேண்டியதுதான்.

இப்படி உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் மக்கள் எதிர்த்ததின் பயனாகவே பிடிவாதமாக இருந்த பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் பிடிவாதத்தைத் தளர்த்திக் கொண்டிருக்கிறார்கள். ஆங்கில சர்க்காரும் பிரஞ்சு சர்க்காரும் சேர்ந்து எகிப்திலிருந்து தங்கள் பிரிட்டிஷ்-பிரஞ்சு துருப்புக்களை வெளியேற்றி விடப் போவதாக பிரிட்டிஷ் மந்திரி செல்வின் லாயிட் பார்லிமெண்டில் அறிவித்திருக்கிறார். இந்த அளவுக்குத் திருப்தியே. ஆம், தோல்வியை எத்தனை நாள் மூடி மறைக்க முடியும் ? இப்பொழுது அது வெளியாகி விட்டது.

ஆயினும் பிரிட்டிஷ் மக்களுக்கு ஏற்பட்ட அவமானம் பெரும் அவமானம். புது மந்திரி சபை ஏற்பட்டால் ஒழிய இந்த அவமானம் நீங்காது. பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர் பெவின், சர்க்காரைப் பார்த்து, “வெற்றி கோஷங்களோடு எகிப்திலிருந்து பின்வாங்கினீர்கள். இந்தப் பரிதாபத்தில் நானும் பங்கு கொள்ளுகிறேன் !” என்று சூடு கொடுத்துப் பேசி யிருக்கிறார்.

எகிப்து சம்பந்தமான விவகாரங்கள் இத்துடன் முடிந்து போகவில்லை. பிரிட்டன்—பிரான்ஸ்—இஸ்ரேயில் ஆகிய மூன்று நாடுகளும் ஆக்கிரமித்துக் கொண்ட பகுதிகள் முழுதும் ஐ. நா. சபையின் வசம் சென்று விடப் போகிறது. சூயஸ் கால்வாயின் மராமத்துப் பொறுப்பும் ஐ. நா. விடம் சென்று விடும். வாய்க்காலும் அவர்கள் வசமாகிவிடும். இவ்விதம் எல்லாக் காரியங்களும் முடிந்த பிறகு வாய்க்காலை எகிப்து சர்க்காரிடம் ஒப்படைக்க வேண்டிய கட்டத்தில் மறுபடியும் சதிகள் ஆரம்பமாகப் போவது நிச்சயம். “வாய்க்காலை நாஸர் வசம் கொடுக்கலாகாது” என்று பலமான சர்ச்சைகள் ஆரம்பமாகும். அப்பொழுது எகிப்து சர்க்கார் வெற்றி பெறுவதுதான் உலகத்தில் நேர்மைக்குக் கிடைத்த வெற்றியாகும்.

---

**நவம்பர் மாதச் சிறுகதைப் போட்டியின் முடிவு அடுத்த இதழில் வெளியாகும்**

# அன்பு பாணங்கள் வீணாகும்

நமது பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு, அமெரிக்க ஜனாதிபதி ஐசன்ஹோவரின் அழைப்புக்கு இணங்க அடுத்த வாரம் அமெரிக்காவுக்குச் செல்லுகிறார். நேருஜியின் விஜயத்தை அமெரிக்கர்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவரது அமெரிக்கப் பிரயாணத்தை உலக மக்கள் நம்பிக்கையுடன் எதிர்பார்த்து வருகிறார்கள்.

அசுர ஆயுத பலம் கொண்ட வல்லரசுகள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து நிற்பதே, உலகத்தை அல்லல்படுத்திவரும் இன்றையப் பிரச்னைகளுக்கு முக்கிய காரணமாகும். இந்நிலையில் பாரத நாடு நடுநிலைமை வகிப்பது, உலகப் பிரச்னைகள் முற்றிப் பயங்கரமான போர்ப் பிரளயம் ஏற்படாமல் தடுப்பதற்குப் பேருதவியாக இருந்து வருகிறது.

உலக நீதியையும் ஜனநாயக தர்மத்தையும் வலியுறுத்திவரும் இந்தியா தனது நடுநிலைமைக் கொள்கையை விட்டுவிட்டு, இந்தக் கட்சிக்கோ அல்லது அந்தக் கட்சிக்கோ சாதகமாகத் துணை புரியும்படி செய்ய முயற்சிகள் நடந்து வருகின்றன. இரு கட்சியினரும் போட்டி போட்டுக்கொண்டு நேருஜி மீது அன்பு பாணங்களைப் பிரயோகம் செய்து வருகின்றனர். எனினும், அந்தப் பாணங்களால் பலன் ஏற்படாது. நேருஜி நடுநிலைமைக் கொள்கையிலிருந்து சிறிதும் பிறழ மாட்டார் என்பது நிச்சயம்.

தற்போது அமெரிக்க சர்க்காரின் நடவடிக்கைகளில் பாரத மக்கள் கண்ட நேர்மையானது இந்திய–அமெரிக்க நட்பைப் பலப்படுத்தியிருக்கிறது. இது, அமெரிக்க சர்க்காரும் மக்களும் மகிழ்ச்சியடைய வேண்டிய விஷயமாகும். ஆயினும், இந்த நட்பைப் பயன்படுத்திக் கொண்டு, இந்தியாவுக்கும் ருஷ்யாவுக்கும் உள்ள சிநேகத்தைக் குலைக்கச் செய்யும் முயற்சி வெற்றி பெறாது. அதற்கு நேருஜி இடம் கொடுக்கமாட்டார். எனவே, இவ்விஷயத்தில் பாரத மக்கள் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை.

ஒரு கட்சியைப் பலப்படுத்துவதற்கோ, பண உதவி கேட்கவோ, அல்லது ஏதாவது இராணுவ உடன்படிக்கை செய்து கொள்வதற்கோ நேருஜி அமெரிக்காவுக்குச் செல்லவில்லை. உலக மக்களை யுத்த பீதியிலிருந்து விடுவிக்கவே செல்லுகிறார்; உலக சமாதானத்துக்கு வழிகாட்டவே அங்கு செல்லுகிறார். நேருஜியின் இந்த அரும்பணி இறைவன் அருளால் வெற்றி பெறுமாக!

## மாட்டை அடிப்பானேன்?




வரிகள் மூலம் ஏற்கெனவே வசூலித்து வரும் கோடிக்கணக்கான ரூபாய்கள் வீணாகிக் கொண்டிருக்கும்போது இந்திய சர்க்கார் புது வரிகள் போடுவது என்னத்திற்கு?

# பாடம் புரியுமா?

பெரும்பாலான இன்ஷூரன்ஸ் கம்பெனிகளிலுள்ள சிப்பந்திகள் இத்தனை நாளும் மிகுந்த திருப்தியாகவும் சுறுசுறுப்பாகவும் வேலை செய்து வந்தார்கள். இன்ஷூரன்ஸ் தொழிலும் நாளுக்குள் நாள், வருஷத்துக்கு வருஷம் விருத்தியாகி வந்தது.

ஆனால் பாரத சர்க்கார் இன்ஷூரன்ஸை எடுத்துக் கொண்ட பிறகு இன்ஷூரன்ஸ் காரியாலயங்களில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்கள் வேலை நிறுத்தம் செய்யப் போகிறார்கள் என்று பேசி வருகிறார்கள். இதைப் பார்க்கும் போது, தொழில்களும் வியாபாரங்களும் சர்க்கார் ஏற்றுக் கொண்டால் பொது மக்களுக்கு லாபம் ஏற்படுவதற்குப் பதில் நஷ்டமே ஏற்பட்டு வருகிறது என்பது எளிதில் புலனாகிறதல்லவா? வேலை நிறுத்தம் என்றால் பொது மக்களுக்குத்தான் கஷ்டமும் நஷ்டமும் ஏற்படும். சர்க்கார் அதிகாரிகளுக்கு அதனால் ஒரு சங்கடமுமில்லை.

ஆனால் சர்க்கார் இன்ஷூரன்ஸ் சிப்பந்திகளைத் திருப்திப்படுத்தத் தும்பை விட்டு வாலைப் பிடித்த கதையாக ஒரு காரியம் செய்திருக்கிறார்கள். அவர்களுக் கெல்லாம் புது இன்ஷூரன்ஸ் திட்டம் கொண்டு வந்திருக்கிறார்கள். இதனால் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷனுக்கு முப்பது லட்சம் ரூபாய் அதிகப்படியாகச் செலவாகும் என்று சொல்கிறார்கள். இவ்வளவு செய்தும் இன்ஷூரன்ஸ் சிப்பந்திகள் திருப்தி யடைந்ததாகத் தெரியவில்லை. பின் சர்க்கார் ஏன் தங்களுக்கு நஷ்டமாகும் வகையிலும், சிப்பந்திகளுக்குத் திருப்தியளிக்காத வகையிலும் காரியங்கள் செய்கிறார்கள் என்பதுதான் புரியவில்லை.

ஆகவே இந்த இன்ஷூரன்ஸ் தேசஉடைமையாக்கியதிலிருந்து சர்க்கார் ஒரு பாடம் கற்றுக் கொண்டிருப்பார்கள் என்றே நினைக்கிறோம். அதாவது தேசிய மயத்தில் பலவித சங்கடங்கள் உண்டு என்பதை இப்போது நன்கு உணர்ந்திருப்பார்கள் என்று நம்புகிறோம். தேச உடைமையாக்கும் தங்கள் தீவிர உணர்ச்சியைத் தணித்துக் கொள்வார்கள் என்றும் எதிர்பார்க்கிறோம்.

# அஞ்சலி செய்கிறோம்

பேராசிரியர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி மறைந்து இந்த டிசம்பர் மாதம் ஐந்தாம் தேதியுடன் இரண்டாண்டுகள் பூர்த்தியாகி விட்டன. ஆசிரியரின் இலக்கிய சேவையைத் தமிழ் கூறும் நல்லுலகம் என்றென்றும் போற்றிப் பெருமை கொள்ளும். பாரதியாருக்குப் பின் நவீன தமிழ் வசன நடையைப் பெரிதும் வளப்படுத்தி வளர்த்த பெருமை பேராசிரியருக்கே உரியது. அரசியல், சங்கீதம், சிற்பம், இலக்கியம் முதலிய பல துறைகளிலும் பேராசிரியர் செய்துள்ள சேவை அபரிமிதமானது. சமுதாயத் தொண்டிலும் ஈடுபட்டு அவர் பல சிரிய பணிகளை நிறைவேற்றியதைப் பொது மக்கள் அறிந்தவையே.

ராஜாஜி தமது குருவாக மதிக்கும் பேராசிரியர் டேவிட்ஸ் முப்பத்தைந்தாண்டுக்குமுன் இந்தியாவை விட்டுச் சென்றபோது நடந்த பிரிவுபசாரத்துக்கு ராஜாஜி தலைமை தாங்கினார்.



தமிழில் பத்திரிகைகள் வெளிவருவதே அபூர்வமாக இருந்த காலத்தில், தமிழில் எழுதுவதும் தமிழைப் படிப்பதும் கௌரவக் குறைவாக எண்ணிய காலத்தில், பேராசிரியர் கல்கி, பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டார். தம்முடைய அதிசயமான எழுத்து வன்மையின் சக்தியினால் பல்லாயிரக்கணக்கான வாசகர்களைத் தோற்றுவித்தார். பத்திரிகையின் விற்பனையை ஆயிரம் பதினாயிரம் ஐம்பதாயிரமாகப் பெருக்கினார். முதன் முதலாகத் தமிழகத்தின் சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்டு பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் போன்ற மாபெரும் சரித்திர நவீனங்களை எழுதித் தமிழுக்கும், தமிழகத்தின் சரித்திரத்துக்கும் பெரும் புகழ் தேடித் தந்தார். பாடலுக்கு ஒரு பாரதி, கதைக்கு ஒரு கல்கி என்று தமிழ்ப் பெரு மக்கள் வியந்து பாராட்டும்படி பல கதைகள் எழுதித் தமிழ் இலக்கியத்தைச் சிறப்பித்தார்.

'கல்கி'ப் 'பத்திரிகையின் ஒப்பற்ற ஆசிரியராக விளங்கி அவர் ஆற்றியுள்ள சேவை மகத்தானது; நாம் மறக்க முடியாதது. பேராசிரியர் மறைந்து போனாலும் அவர் புகழ் தமிழ் நாட்டில் என்றென்றும் மறையாது. அந்த இலக்கிய மேதையை நினைவு கூர்ந்து அவருக்கு அஞ்சலி செய்வோமாக!

# கர்மவீரர் ராஜாஜி

நிதிமந்திரி சி. சுப்பிரமணியம்

ராஜாஜி அவர்களுக்கு இன்று எழுபத்தெட்டு வயது பிறக்கிறது. அவர்கள் வாழ்க்கைச் சரிதையை எழுதுவோமேயானால் ஏறக்குறைய நம் நாட்டுச் சரித்திரம் முழுவதும் பிரதிபலிக்கக் கூடியதாகவே இருக்கும் என்பதில் ஐயமில்லை. அவர்களுடைய பிறப்பு, வளர்ச்சி, படிப்பு, தொழில், சமூக சேவை, நாட்டுச் சேவை, நாட்டு நிர்வாகத்தில் பங்கு, இவைகளைப் பற்றி எல்லாம் எழுதினால் நம் நாட்டிலே அவ்வப்போது நிலவி வந்த நிலைமையை விளக்கும் சரித்திரமாகவே இருக்கும்.

ராஜாஜி அவர்களை முதன் முதலில் நான் சந்தித்தது, முப்பது ஆண்டுகளுக்கு முன். அப்போது நான் பள்ளி மாணவனாக இருந்தேன். எங்கள் ஊர் பொள்ளாச்சியிலே, கொங்கு வேளாளர் மகாநாடு என்று ஒரு மகாநாடு நடத்தினார்கள். அந்த மகாநாட்டுக்கு ராஜாஜி விஜயம் செய்து முக்கியமாக, மதுவிலக்கைப் பற்றியும், தீண்டாமை ஒழிப்பைப் பற்றியும் பிரசங்கம் செய்தார்கள். இது 1926-ல் என்று நினைக்கின்றேன். அதற்குப் பின் என் கல்லூரிப் படிப்பு முடிந்தது.

1932-ல் சுதந்திர இயக்கத்தில் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று விரும்பினேன். அச்சமயம் ராஜாஜி அவர்கள் சிறையில் இருந்து விடுபட்டுப் புதுப்பாளையம் ஆசிரமத்தில் இருந்து வந்தார்கள். நானும் சில நண்பர்களும் புதுப்பாளையம் சென்று ராஜாஜியைச் சந்தித்து நாங்கள் எந்த முறையில் சுதந்திர இயக்கத்தில் பங்கு எடுத்துக் கொள்வது என்பது பற்றி யோசனை கேட்டோம். "சிறை செல்வது அல்ல லட்சியம். தொடர்ந்து சுதந்திர இயக்கத்துக்கான பணிகளைச் செய்துவரவேண்டும். அதற்காகச் சிறை என்றால் அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும்" என்று எங்களுக்கு எடுத்துச் சொன்னார். அந்த நாளில் இருந்து ராஜாஜி அவர்களுடைய அரசியல் நடவடிக்கைகளை நான் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறேன்.

அவரை ஒரு சமூக உடல் நலம் குன்றாமல் காக்கும் ... *[see below]*

அவரை ஒரு கடமை உணர்ச்சி நிறைந்த நல்ல டாக்டருக்கு ஒப்பிட்டுச் சொல்வது தான் பொருத்தம் என்று நினைக்கிறேன். டாக்டர் என்றால் நோயாளிக்கு உள்ள நோயைத் தெரிந்து கொள்ளக்கூடிய சக்தி வேண்டும். அதற்குப் பின் அந்த நோயைத் தீர்ப்பதற்காகச் சிகிச்சை செய்யக் கூடிய அறிவும், அநுபவமும், ஆற்றலும் இருக்க வேண்டும். சிகிச்சை செய்வதிலே நோயாளியினுடைய விருப்பு வெறுப்புகளை அனுசரித்து மருந்து கொடுப்பது என்றால், நோய் குணப்படாது. நோயாளியும் சுகப்பட மாட்டான். ஆகவே, ஓரளவு கடின சித்தத்துடனேயே நோய்க்குத் தகுந்த கடுமையான சிகிச்சையையும் செய்வதற்குத் தயாராக இருப்பவர் தான் உண்மையான வைத்தியர். ராஜாஜி அவர்கள் நம் சமுதாயத்துக்கே ஒரு உண்மையான டாக்டராக அமைந்திருக்கிறார்கள். சமுதாயத்திலே தோன்றக்கூடிய குறைபாடுகளைத் தெள்ளத் தெளிவாக அறிந்து எடுத்துச் சொல்லக்கூடிய ஆற்றலைப் பெற்றவர்களாக விளங்கி வந்திருக்கிறார்கள்; வருகிறார்கள். அவ்வப்போது தோன்றக்கூடிய கோளாறுகள் மட்டுமல்ல, அவைகளின் விளைவாகப் பின்னால் வரக்கூடிய பெரும் நிலைமைகளையும் யூகித்துச் சொல்லக் கூடிய தீர்க்கதரிசனம் பெற்றவர்களாகவும் விளங்கி வருகிறார். அத்துடன் இந்தக் குறைபாடுகளை நீக்குவதற்கான சரியான வழியையும் நம் மக்களுக்கு எடுத்துக் காட்டி வந்திருக்கிறார்கள். இந்தப் பெருஞ் சேவையிலே விரோதம் வந்தாலும் பொருட்படுத்தாது சமுதாயத்தின் நலத்துக்காகத் தாம் செய்ய வேண்டிய கடமையை மனம் தளராது செய்து வரும் கர்ம வீரராக அவர்கள் இன்றைக்கு நாட்டிலே உலவுகிறார்கள்.

நாட்டிலே நடந்த சுதந்திர இயக்கங்களிலும் சரித்திரப் பிரசித்தி பெற்ற நிகழ்ச்சிகளிலும் நம் நாட்டில் பல பெரியோர்கள் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களில் ஒரு சிலரே அந்த இயக்கங்களையும் நிகழ்ச்சிகளையும் உருவாக்கியவர்கள். ராஜாஜி அவர்கள் தேசிய இயக்கங்களில் பங்கெடுத்

ராஜாஜியும் ரசிகமணி டி. கே. சி.யும். கீழே அமர்ந்திருப்பவர்கள்: கல்கிப் பத்திரிகையின் அதிபர் திரு சதாசிவம் அவர்களும் பேராசிரியர் கல்கியும்.



துக் கொண்டவர் என்று சொன்னால், அது அவர்களுடைய பெருமையைப் புரிந்துகொள்ளாததுடன் குறைத்துக் கூறியதாகவும் முடியும். பெரும் இயக்கங்களை உருவாக்கி நடத்தி மக்களுக்கு வழி காட்டினார்கள் என்பதே பொருத்தமாக இருக்கும். ஒரு சிலருக்கே தாங்கள் எடுத்துக் கொண்ட காரியம் வெற்றி பெற்று அதைப் பார்த்து மகிழும் பாக்கியம் கிடைக்கும்.

ராஜாஜி அவர்கள் நாட்டின் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டு அவர்கள் வாழ் நாளிலேயே நாடு சுதந்திரம் பெற்றதைக் காணும் பாக்கியம் பெற்றவர்கள். அத்துடன் மட்டும் நில்லாது, சுதந்திரம் பெற்ற பின் நம் நாட்டு மக்கள் அரசியல் சுதந்திரத்தின் முழுப் பயனையும், மற்ற எல்லாத் துறைகளிலும் உயர்வையும் அடைந்து நல் வாழ்க்கை நடத்துவதற்கான நிர்வாகத்திலும் தலைமை தாங்கக்கூடிய பேறும் பெற்றவர்கள்.

ராஜாஜி இன்று நிர்வாகத் துறையிலிருந்து ஒதுங்கி இருக்கிறார்: ஆனால் ஓய்வு எடுத்துக் கொண்டிருப்பதாகச் சொல்ல முடியாது. தம்முடைய எழுபத்தெட்டாவது வயதிலும், இன்றைக்கும் நம் சமுதாயத்தின் உண்மையான டாக்டராக, கடமை உணர்ச்சி நிறைந்த கர்மவீரராக விளங்கி வருகிறார்கள். அவர்கள் இன்னும் பல காலம் நம்முடன் இருந்து நமக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டும் என்று பிரார்த்திப்போம். பாரத நாட்டு மக்கள் மட்டும் அல்ல, உலகில் உள்ள பெரியோர்கள் எல்லாரும் ராஜாஜி அவர்கள் பல்லாண்டு வாழ வாழ்த்துவார்களாக!

# பாரதரத்னம் ராஜாஜி

நவரத்தின ராமராவ்

★ நமது அரும் பெரும் தலைவர் ராஜாஜி அவர்களுக்கு இன்று 78–வது ஜன்ம தினம் ஆகும். ராமன், கிருஷ்ணன், புத்தர், சங்கரர், காந்தியைப் போல் ஜயந்தி கொண்டாடத் தக்க அவதார புருஷர்கள் இந்தப் புண்ணிய பாரத பூமியில் அவ்வப்போது தோன்றி வருகிறார்கள். அத்தகைய மகா புருஷர்களின் வரிசையில் சேர்க்கத்தக்க புண்ணிய சிலர்களில் ராஜாஜியும் ஒருவர். அவர் இன்று நம்மிடையே வாழ்ந்து வருவது நம்முடைய பெரும் பாக்கியமாகும். அரசியல் துறையிலும் ஆத்மிகத் துறையிலும் ராஜாஜி செய்து வரும் பணிகள் ஒப்புயர்வற்றவையாகும். ராஜாஜி அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து பாரத மக்களுக்கும், இந்த வையகத்துக்குமே பெரும் சேவை செய்ய வேண்டுமென்று தேசப் பொது மக்களுடன் சேர்ந்து நாமும் பிரார்த்திக்கிறோம்.

அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக ராஜாஜியுடன் மிக நெருங்கிய நட்புக் கொண்டுள்ள ஸ்ரீ நவரத்ன ராம ராவ் ராஜாஜியைப்பற்றி எழுதியுள்ள அருமையான கட்டுரையை இப் பக்கத்தில் மிக்க மகிழ்ச்சியுடன் வெளியிட்டுள்ளோம். ராஜாஜிக்கு ஸ்ரீ ராம ராவைக் காட்டிலும் நீண்டகால நண்பர் உலகிலேயே வேறு யாருமில்லை எனலாம். ராஜாஜியுடன் சேலத்தில் வக்கீல் தொழிலை ஆரம்பித்த ஸ்ரீ ராம ராவ் பிறகு மைசூர் சென்று, சர்க்கார் உத்தியோகத்தில் அமர்ந்து, படிப்படியாகப் பதவியில் உயர்ந்து கைத்தொழில், வர்த்தக டைரக்டர் பதவியில் பணியாற்றிய பிறகு ஓய்வு பெற்றார். ஸ்ரீ ராமராவ் ஆங்கிலத்தில் அபார ஞானம் பெற்றவர். பிரஞ்சு, சம்ஸ்கிருதம், கன்னட பாஷைகளிலும் தேர்ச்சி பெற்றவர். கன்னடத்தில் சிறந்த பல நூல்களை எழுதிப் புகழ் பெற்றுள்ளார்.—ஆசிரியர்.

ராஜாஜியின் எழுபத்தெட்டாவது பிறந்த தினத்தன்று எனது உள்ளம் அன்பு மேலிட்டுப் பொங்கி எழும் நல்வாழ்த்துக்களுடன் அவரிடம் ஓடோடியும் செல்கிறது. இந்த மகா புருஷரின் அன்புதான் என் வாழ்க்கைக்கு வரப்பிரசாதமும் வழிகாட்டியும் ஆகும்.

முதன் முதலில் நான் அவரைப் பார்த்தபோது அவர் கூச்சம் நிரம்பிய, மெல்லிய உடலுடன் கூடிய சிறு பையனாக இருந்தார். பிறகு நாங்கள் இருவரும் பெங்களூர் செண்டிரல் காலேஜில் ஒரே வகுப்பு மாணவர்களானோம். ஆயிரம் மாணவர்களில் அவர் ஒருவர். குறைந்த பேச்சும், நிறைந்த சிந்தனையும் உடையவர். எப்போதும் மோன நிலையில் ஆழ்ந்த எண்ணங்களில் திளைப்பவர். தாம் கற்றதும் கேட்டதும் முளைவிட்டு வளர்ச்சி அடையும் நல்ல அறிவாற்றல் கொண்டவராக இருந்தார். காந்தம் போல அவரிடம் நான் இழுக்கப்பட்டேன். அவரது சங்கோச சுபாவத்தின் காரணத்தால் நான் அவரிடம் முதலில் நெருங்கச் சிறிது தயங்கினேன். ஆனால் பரஸ்பரம் நாங்கள் இருவருமே ஒருவரிடம் மற்றொருவர் இழுக்கப்பட்டது எனக்கு ஒரு தனி ஆனந்தத்தை அளித்தது. விரைவில் நாங்கள் இணைபிரியாத நண்பர்கள் ஆனோம். இருவரின் உள்ளங்களிலும் ஒரே விதமான எண்ணங்கள். ஒருவருக்குப் பிடித்தமான புத்தகங்களையே இன்னொருவரும் விரும்பிப் படிப்போம். இருவருக்கும் வாழ்க்கையில் ஒரேமாதிரி லட்சியங்கள். ஒருவரை ஒருவர் பார்க்கும்போதெல்லாம் சொல்லிச் சொல்லித் தீராத அளவுக்கு, எங்கள் சம்பாஷணை முடிவில்லாமல் போகும். நேரம் போவதே தெரியாது! இதன் பலனாகப் பல நாட்கள் ஹோட்டலில் சாப்பாடு 'கோவிந்தா' ஆகி விடுவதும் உண்டு.

எங்களுடைய பேராசிரியர் 'டெய்ட்' என்பவருக்கு எங்கள் இருவரிடமும் விசேஷ அன்பு உண்டு. உயர்ந்த இலக்கியத்தில் எங்களுக்கு ருசியைக் காணச் செய்த அவரை எங்கள் குருவாக இன்றுவரையிலும் நாங்கள் மதிக்கின்றோம். ஒருநாள் எங்கள் காலேஜைச் சேர்ந்த விடுதி ஒன்றில் நாங்கள் இருவரும் சேர்ந்து இருப்பதற்கு ஒரு பிரத்தியேக அறை கிடைத்து விட்டது. ஏழு அடி நீளம், ஏழு அடி அகலம் கொண்ட இந்த அறை கிடைத்த அந்த நாள் முதல் நாங்கள் தினம் இருபத்து நாலுமணி நேரமும் இணைபிரியாத நண்பர்கள் ஆனோம். விடுமுறை நாட்களிலும் ஒருவரோடு ஒருவர் கூடவே இருப்போம். சில சமயம் நான் ஹொசூருக்குச் சைக்கிளில் கால் கடுக்கப் போவேன். அந்தக் காலத்து சைக்கிள்கள் 'குஷன் டயர்'களும் கனத்த 'பிரேம்'களும் கொண்டவை. சில சமயம் அவர் ஹெஸர் கட்டாவுக்கு வருவார்.

அங்கு என்னுடைய தந்தை உத்தியோகம் பார்த்து வந்தார். விடுமுறை நாட்களில் நாங்கள் இருவரும் கையோடு கை கோத்துக் கொண்டு வயல் வெளியிலும், தோப்பு நிழலிலும், ஏரிக்கரையிலும் ஒரு ஷேக்ஸ்பியர் அல்லது மில்டன் போன்ற மனத்துக்குப் பிடித்த புத்தகமும் கையுமாக அலைந்து திரிந்து பேசிப் பேசி அடைந்த ஆனந்தத்தை நான் எப்படிச் சொல்வேன்? இப்படி ஒட்டிக் கிடந்த எங்கள் இருவரையும் பற்றி எங்கள் பெற்றோர்கள் என்னதான் நினைத்தார்களோ, எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு மட்டும் அந்த நாளின் நினைவு எப்போதும் என் வாழ்வில் வாடாது நின்று கமழ்கிறது.

இதர பையன்களைப் போல நாங்களும் எங்கள் எதிர்காலத்தைப் பற்றிக் கோட்டை



ராஜாஜி, கவர்னர் ஸ்ரீபிரகாசா, கட்டுரை ஆசிரியர் திரு நவரத்தின ராமராவ்.

கட்டினோம். இருவரும் வக்கீல்களாக வேண்டியது. ஒரே ஊரில் தொழில் செய்ய வேண்டியது. இதுவரை இருந்ததைப் போலவே இன்னமும் கடைசிவரை இணை பிரியாது இருக்க வேண்டியது என்றெல்லாம் முடிவு செய்து கொண்டோம். இருவரும் சென்னைச் சட்டக் கல்லூரியில் சேர்ந்தோம். சட்டப் படிப்பின் போதும் இருவரும் சேர்ந்தே வாழ்ந்தோம். வக்கீல் பட்டம் வாங்கினதும் நான் சேலத்துக்கு விரைந்து ஓடினேன்; என் சொந்த ஊரான பெங்களூரைவிடச் சேலமே என்னைக் கவர்ந்து இழுத்தது; அங்கல்லவா எனக்காக ராஜாஜி காத்துக் கொண்டிருக்கிறார்? இதுவரை நாங்கள் கட்டினகோட்டைப் படியே எல்லாம் நடந்து வந்தன. தொழிலைத் தொடங்கியதுமே ராஜாஜியின் பெயர் பிரபல்யம் அடைய ஆரம்பித்து விட்டது. தொழிலில் இதர மேதைகளை இந்த இளம் மேதாவி மிஞ்ச ஆரம்பித்து விட்டார். எனக்கோ ஊரும் வேறு; பாஷையும் வேறு. பணம் சம்பாதிப்பதோடு கூட ஒரு பாஷையையும் கற்க வேண்டியிருந்தது. இருந்தும் வக்கீல் தொழிலில் நானும் சோடையாகப் போய் விடவில்லை. ஆனால் இந்தச் சமயத்தில் நாங்கள் இருவரும் கட்டிய கோட்டை மணக் கோட்டையாகப் போய் விட்டது. நாங்கள் ஒருவரிடமிருந்து ஒருவர் பிரிய நேர்ந்தது. நான் எனது சொந்த ஊராகிய மைசூருக்குத் திரும்ப வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அங்கு சர்க்கார் உத்தியோகம் ஒன்றை நான் ஏற்கவேண்டியதாயிற்று. ராஜாஜியோ தாம் தமக்கு வகுத்துக் கொண்ட வழியிலேயே தமக்கே உரித்தான உறுதியுடன் தொடர்ந்து போனார். தமது தொழிலின் சிகரத்தை எட்டிப் பிடித்து அதன் மகத்தான பலன் கைக்குக் கிட்டும் தறுவாயில் தாய் நாட்டுக்குப் பணி புரிய அழைப்பு வந்தது. தாம் மீட்டதையெல்லாம் அடியோடு துறந்து சுதந்திரப் போரில் உறுதியுடன் இறங்கி விட்டார். அன்று தொட்டு அவரது வாழ்க்கையும், அந்த வாழ்க்கையோடு பின்னிக் கிடந்த கஷ்டங்களும், சோதனைகளும் பிறகு கடைசியாகச் சாதித்த சாதனைகளும் இந்திய சரித்திரத்தின் ஒரு பகுதியாகும். நான் இப்போது சொல்ல விரும்புவது, சுதந்திரப் போர் உச்ச நிலையிலிருந்த அந்த நெருக்கடியான காலத்தில் கூட ராஜாஜி என்னுடைய நினைவை மட்டும் மறந்ததில்லை.

இந்த விருத்தாந்தத்தில் என்னைக் குறித்துத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு வருவதை உணர்கிறேன். ஆனால் ராஜாஜியைப் பற்றி அறிந்து தெரிந்து உணர்ந்து பேச எனக்கு என்ன அதிகாரம் என்பதையும் நான் சொல்ல வேண்டும் அல்லவா?

** ** **

என் வாழ்நாளில் கீர்த்தி மிக்க பிரமுகர்களை, அதாவது அந்தந்த நாட்டு மக்கள் மதித்து வணங்கும் மகத்தான தேசத் தலைவர்கள் பலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்களது கீர்த்திக்குக் காரணங்களாகத் திகழும் நல்ல அம்சங்களை நன்கு உணரவும் நான் முயன்றிருக்கிறேன். பொதுவாக அந்த அம்சங்களில் நான் கண்டது அறிவு, தைரியம், நல்லொழுக்கம், தேசப் பற்று, தியாக உணர்ச்சி இவைதான். என் வாழ்நாளில், மனித சுபாவத்தை எண்ணி யெண்ணிப் பெருமைப் படச் செய்யும் புருஷர்களையும், பெண்மணிகளையும் நான் பார்த்திருக்கிறேன். ஆனால் ராஜாஜியை விட உயர்ந்தவர் எனக் கருதக்கூடிய இன்னொருவரை நான் பார்த்ததில்லை. அவரைக் காட்டிலும் தெளிவான அறிவோ, ஊடுருவிப் பார்க்கும் சக்தியோ படைத்த வேறு ஒருவரையும் நான் சந்தித்ததில்லை.

சிலருக்குப் புலப்படாதது அவருக்குப் பளிங்குபோலத் தெரியும். மந்தகபாவங்களின் போக்கு அவர் மனத்துக்குப் பிடிக்காது. அசமஞ்சங்களுக்கு அவர் அருகே இடம் கிடையாது. தைரியத்துக்கு அவரே உறைவிடம். உறுதி கொண்ட உள்ளம் படைத்தவர். ஒளிதரும் மங்கா விளக்கு. அபாண்டத்துக்கு அறவே பயப்பட மாட்டார். அதிக்கிரமத்துக்கு அடங்க மாட்டார். கொள்கையென்று வரும்போது விட்டுக் கொடுக்க மாட்டார். மகாத்மா காந்தியிடமிருந்து கருத்து வேற்றுமை ஏற்பட்டதும் அவரிடம் அதைப் பகிரங்கமாகத் துணிந்து சொன்னார். முக்கியமான விஷயங்களில் ஓரிரு சமயம் காந்தியடிகளை தமது அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்ளும்படி செய்திருக்கிறார். கண்ணை மூடிக்கொண்டு காந்தியடிகளைப் பின்பற்றினார் என்று ராஜாஜியைப் பற்றி யாராவது சொன்னால் அது அபத்தமாகும். குருட்டுச் சீடராக ராஜாஜியால் இருக்கவே முடியாது. ராஜாஜி ஒரு அசல்; அது எப்படி நகல் ஆக முடியும்? மகாத்மாஜியிடம் அளவற்ற அன்பும் மதிப்பும் அவருக்கு இருந்தன. ஆனால் காந்தியடிகளின் அபிப்பிராயங்களை அலசிப் பார்த்துச் சரி யென்று பட்ட பிறகுதான் அவைகளை ஒப்புக் கொள்வார்.

வாழ்க்கையில் எல்லாவிதச் சூழ்நிலைகளிலும் நான் ராஜாஜியைப்பார்த்திருக்கிறேன். பலப்பல மனோநிலைகளிலும் பார்த்திருக்கிறேன். சோகத்தில் அடிபட்டிருந்ததைக் கண்டிருக்

கிறேன். அன்னிய ஆட்சியின் அதிகாரம் அவரை நிழல் போலத் தொடர்ந்து துன் புறுத்தி நீண்ட சிறைவாசங்களால் அவரது உடல்நலம் சிதைந்து போனதைப் பார்த் திருக்கிறேன். மன்னர்கள் வந்து முடி வணங்க மக்களெல்லாம் கூட்டம் கூட்டமாக ஆர வாரிக்க அவரை கவர்னர் ஜெனரலாகப் பார்த்திருக்கிறேன். எந்தச் சூழ்நிலையிலும் பாதிக்கப்படாத, கஷ்டம் வரும் போது கலங் காத, வெற்றி வரும் போது பெருமை கொள்ளாத வேறு ஒரு மனிதரை நான் என் வாழ்நாளில் பார்த்ததில்லை. கீதையில் சொல்லப்பட்ட 'ஸ்திதப்ரக்ஞன்' இதோ இங்கு நம்முடன் வாழ்ந்து வருகிறார்.

தீவிரமான வாழ்க்கை வாழ்ந்து பெரிய புகழையும் சம்பாதித்துப் பிறர் தோல்வி கண்ட துறைகளில் எல்லாம் வெற்றி பெற்ற ஒருவருக்கு விரோதிகளும், அவரைப் பற்றி அபாண்டமாகச் சொல்லுபவர்களும் உலகில் ஏற்படுவது சகஜம். ஆனால் ராஜாஜி யைப் பற்றி அவரது தைரியம், அவரது ஒழுக்கம், அவரது தேசாபிமானம், அவரது மாசற்ற வாழ்க்கை, சத்தியத்தினின்றும் பிறழாத நேர்மை இவைகளைப் பற்றிக் குறை கூறிக் காதும் காதுமாகப் பேசவும் யாரும் கேட்டதில்லை.

ஆயிரம் ஆயிரம் அற்பத்தனங்கள் நிறைந்த இந்த மண்ணில் திறந்தவெளி யெல்லாம் வந்து தாக்கும் வெப்பத்தின் நடுவே தமது வாழ்க்கையாகிய மாசற்ற ஒரு வெண்மலரை ஏந்திச் செல்கிறார் ராஜாஜி.

** ** **

இவ்வாறு ஒரு அரசியல் மேதையாக ராஜாஜி இருந்திராவிட்டால் அவர் இலக்கிய மகா மேதையாகத் திகழ்ந்திருப்பார். அவரது ஆங்கிலத் தமிழ் நூல்கள் நமது நாட்டில் என்றும் நிலைத்திருக்கும். பெரிய பதவிகளில் தாம் இருந்ததைவிட ராமாயணம், மகா பாரதம் இந்த இரு காவியங்களையும் 'கல்கி' பத்திரிகையின் வாயிலாகக் குழந்தைகளுக்குச் சொல்லும் வாய்ப்பு கிடைத்ததையே தமக்குக் கிடைத்த பெரும் பாக்கியமாகக் கருதுவதாக ராஜாஜி சமீபத்தில் கூறினார். என்னுடைய தாய்மொழி தமிழ் அல்ல. ராஜாஜியின் தமிழ் அவரது ஆங்கிலத்தைப் போல அவ்வளவு தெளிவும் அழகும் அழுத்தமும் கொண்டு இருக்குமாயின் தமிழ் எழுத்தாளர் கூட்டத் தில் அவரது ஸ்தானம் இமயம்போல் வெகு உயர்ந்ததாக இருக்க வேணும்.

கேட்போரைத் தம் பக்கம் திருப்பும் விசேஷ சக்தியுள்ள பேச்சாளர் ராஜாஜி. வெறும் சொல் அலங்காரத்தினாலும் அடுக்குச் சொற் களினாலும் வருகிற சக்தியல்ல இது. அவரு டைய சிந்தனையிலும் பேச்சிலும் உள்ள தெளிவுதான் இந்தச் சக்திக்குக் காரணம். இவையெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும். நல்ல மனிதனுக்கு விளக்கம் ராஜாஜி. அவர் கருணை உள்ளம் படைத்தவர். தூய வாழ்க்கை வாழ்பவர். ஆகவேதான் பாரதமக்கள் யாவ ரும் அவரைப் போற்றுகிறார்கள்; எல்லாம் வல்ல ஆண்டவன் அவருக்கு நீண்ட ஆயுளையும் நல்ல ஆரோக்கியத்தையும் அருள வேண்டும் என்று இன்று பிரார்த்தனை செய்கிறார்கள்.

சென்ற பதினைந்து தினங்களாகச் சென்னை நகரின் பல பகுதிகளிலும் நமது கவர்னர் ஸ்ரீ பிரகாசாவுக்குப் பிரிவு உபசார வைபவங்கள் நடந்த வண்ணம் இருக்கின்றன. ஒவ்வொரு உபசார விருந்திலும் தமிழ்ப் பெரு மக்களின் பேரன்பை ஸ்ரீ பிரகாசா எவ்வளவு தூரம் கவர்ந்து விட்டார் என்பதும், ஸ்ரீ பிரகாசா எவ்வளவு பேரன்பு தமிழ் மக்களிடம் கொண்டிருக்கிறார் என்பதும் புலனாகிறது.

முதலில் சென்னை நகர ஷெரீப் ஸ்ரீ காஸ்டல் ஓர் இனிய பிரிவு உபசார விருந்து நிகழ்த்தினார். இவ் வைபவத்தில் ஸ்ரீ காஸ்டல், முதல் முறையாக ஷெரீப் உடையில் தோன்றி ஸ்ரீ பிரகாசாவுக்குப் பிரிவுபசாரம் நல்கினார்.

ராஜாஜியின் தலைமையில் சென்னை நகரப் பிரமுகர்கள் ஓர் இனிய தேநீர் விருந்துபசாரம் நடத்தினார்கள். ராஜாஜி அவர்கள், பிரதம நீதிபதி பி. வி. ராஜமன்னார், ஸ்ரீ சி. சுப்ரமணியம், ஸ்ரீமதி அம்புஜம்மாள், ஸ்ரீ முத்தையா செட்டியார் முதலிய பல பிரமுகர்கள் தங்கள் அன்பையும் நன்றியையும் தெரிவித்துக் கொண்டார்கள். ஸ்ரீ பிரகாசா தமிழ்நாட்டு மக்கள் அனைவருக்கும் தமது நன்றியையும் அன்பையும் தெரிவித்துக் கொண்டார்.

சென்னை சர்க்கார் சார்பில் நடந்த வைபவத்தில் சென்னை மந்திரிகளுக்குத் தமது நன்றியைத் தெரிவித்தார்.

சென்னை நகரில் காந்தி மகானுக்கு நிர்மாணித்துள்ள ஞாபகார்த்தத்தைப் போல் வேறெங்குமே இவ்வளவு சிறந்த முறையில் நிர்மாணிக்கப் படவில்லை என்று பாரத மக்கள் கூறுகிறார்கள். இதற்கெல்லாம் காரணம் நமது சென்னை கவர்னர்தான். ஞாபகார்த்தம் எழுப்பிய தோடல்லாமல் மாதந் தோறும் பிரார்த்தனைக் கூட்டங்கள் நடைபெறவும் மிகுந்த சிரத்தை யெடுத்து உதவினார். இதற்கெல்லாம் ராஜாஜி சென்ற பிரார்த்தனைக் கூட்டத்தில் நன்றி செலுத்தினார். ஆனால் கவர்னர் ஸ்ரீ பிரகாசாவோ, "சென்ற முப்பத்து நான்கு ஆண்டுகளாக ராஜாஜியையே எனக்குத் தலைவராகவும் குருவாகவும் கொண்டு அவரையே பின்பற்றி வந்திருக்கிறேன். அவரது ஆசியினாலேயே நான் சென்னையில் பல காரியங்கள் செய்ய முடிந்தது!'' என்று நெஞ்சம் தழுதழுக்கக் கூறினார்.

இப்படிப் பல இடங்களில் நடைபெற்ற பிரிவு உபசார நிகழ்ச்சிகளை இரு பக்கங்களிலும் காணலாம். எதிர்ப் பக்கம்: 1. காந்தி மண்டபத்தில் ராஜாஜியும் ஸ்ரீ பிரகாசாவும். 2. திருவிழிமிழலை சகோதரர்களின் நாகஸ்வரமும், நீடாமங்கலம் ஸ்ரீ ஷண்முக வடிவேலின் தவிலும் நடைபெறுகிறது. 3. கீதை பாராயணத்துக்குப் பின்னர் ஸ்ரீமதி எம். எஸ். துதிகீதங்கள் பாடுகிறார். 4 ராஜாஜி கவர்னருக்கு நன்றி செலுத்துகிறார்.

இந்தப் பக்கத்தில்: 1. ஷெரீப் ஸ்ரீ காஸ்டல் தம்பதிகள். ஸ்ரீ காஸ்டல் ஷெரீப் உடையில் இடது ஓரம் நிற்கிறார். 2. சென்னை நகரப் பிரமுகர்கள் உபசரிப்பு. 3. சென்னை நகரப் பிரமுகர்களின் அன்புப் பரிசை ராஜாஜி வழங்குகிறார். 4. சென்னை சர்க்கார் சார்பில் முதன்மந்திரி காமராஜ் அன்புக் காணிக்கையை அளிக்கிறார்.



# உங்கள் புதிய நாணயங்கள்




## 1957 ஏப்ரல் 1௨ முதல்

தற்போதைய, புதிய நாணயங்கள் இரண்டும் வாங்கவோ கொடுக்கவோ செல்லுபடியாகும். இந்த இரண்டு நாணயங்களில் எதைக் கொடுத்தாலும் யாரும் மறுக்கக் கூடாது.

நாணய மாற்றுப் பட்டியலில் ஒரு குறிப்பிட்ட நாணயத்திற்குச் சமமான மற்ற நாணயம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு மேலாக கேட்கவோ கொடுக்கவோ கூடாது.

உங்களிடம் இருக்கும் நாணயங்களுக்கு ஏற்றவாறு தற்போதைய அல்லது புதிய நாணயத்தையோ அல்லது இரண்டையும் சேர்த்தோ கொடுக்கலாம்.

- நீங்கள் உண்மையிலேயே பணம் கைமாற்றும்போது மட்டுமே இந்த நாணய மாற்றுப் பட்டியலை உபயோகியுங்கள்.
- சரியாக கணக்கிட்டுப் பார்க்கும் சந்தர்ப்பங்களில் குறித்த நாணயத்திற்குச் சமமான மற்ற நாணயத்தைக் கண்டுபிடிக்க, 100 நயா பைசா கொண்டது ஒரு ரூபாய் அல்லது 16 அணா அல்லது 64 காலணா அல்லது 192 பை என்ற விகிதத்தில் கணித்துக் கொள்ளவும்.
- உண்மையிலேயே பணம் கைமாற்றும்போது மட்டுமே நாணய மாற்றுப் பட்டியலில் குறிப்பிட்டுள்ளதுபோல பின்னம் நீக்கி பூர்தமாக்கி (ரவுண்டிங்) கொடுக்க வேண்டும்; அதாவது ½ நயா பைசாவையும் அதற்குக் குறைவாயுள்ளதையும் தள்ளிவிட்டு அதற்கு மேலுள்ளதையே ஒரு நயா பைசா என்று பூர்தமாக்கிக் கொள்ளவேண்டும்.

DA 56/122



## எளிதில் கவனம் வைக்க

| | | | |
|---|---|---|---|
| 1 ரூபாய் | ... | ... | 100 நயா பைசா |
| 8 அணா | ... | ... | 50 நயா பைசா |
| 4 அணா | ... | ... | 25 நயா பைசா |
| 3 அணா | ... | ... | 19 நயா பைசா |
| 2 அணா | ... | ... | 12 நயா பைசா |
| 1 அணா | ... | ... | 6 நயா பைசா |
| ½ அணா | ... | ... | 3 நயா பைசா |

# நாணய மாற்றுப் பட்டியல்

(எந்த ஒரு லேவாதேவியிலும் நாணயங்களை ரொக்கமாகக் கொடுத்து மாற்றவேண்டியபோது அதற்குச் சமமான மற்ற நாணயங்கள்)

| அணா | பை | நயா பைசா | அணா | பை | நயா பைசா | அணா | பை | நயா பைசா | அணா | பை | நயா பைசா |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 3 | 2 | 4 | 3 | 27 | 8 | 3 | 52 | 12 | 3 | 77 |
| 0 | 6 | 3 | 4 | 6 | 28 | 8 | 6 | 53 | 12 | 6 | 78 |
| 0 | 9 | 5 | 4 | 9 | 30 | 8 | 9 | 55 | 12 | 9 | 80 |
| 1 | 0 | 6 | 5 | 0 | 31 | 9 | 0 | 56 | 13 | 0 | 81 |
| 1 | 3 | 8 | 5 | 3 | 33 | 9 | 3 | 58 | 13 | 3 | 83 |
| 1 | 6 | 9 | 5 | 6 | 34 | 9 | 6 | 59 | 13 | 6 | 84 |
| 1 | 9 | 11 | 5 | 9 | 36 | 9 | 9 | 61 | 13 | 9 | 86 |
| 2 | 0 | 12 | 6 | 0 | 37 | 10 | 0 | 62 | 14 | 0 | 87 |
| 2 | 3 | 14 | 6 | 3 | 39 | 10 | 3 | 64 | 14 | 3 | 89 |
| 2 | 6 | 16 | 6 | 6 | 41 | 10 | 6 | 66 | 14 | 6 | 91 |
| 2 | 9 | 17 | 6 | 9 | 42 | 10 | 9 | 67 | 14 | 9 | 92 |
| 3 | 0 | 19 | 7 | 0 | 44 | 11 | 0 | 69 | 15 | 0 | 94 |
| 3 | 3 | 20 | 7 | 3 | 45 | 11 | 3 | 70 | 15 | 3 | 95 |
| 3 | 6 | 22 | 7 | 6 | 47 | 11 | 6 | 72 | 15 | 6 | 97 |
| 3 | 9 | 23 | 7 | 9 | 48 | 11 | 9 | 73 | 15 | 9 | 98 |
| 4 | 0 | 25 | 8 | 0 | 50 | 12 | 0 | 75 | 16 | 0 | 100 |

**உங்களுக்குத் தேவைப்படும் - வைத்திருங்கள்**

# ராஜாஜியின் சிநேகதர்மம்

**கல்கி**

ராஜாஜி தமது வாழ்க்கையில் கைக்கொண்டு ஒழுகும் சிநேக தர்மத்தைப் பற்றி இங்கே கொஞ்சம் சொல்லுதல் பொருத்தமாயிருக்கும்.

"ஒரு தடவை சிநேகிதரானால் வாழ்நாள் முழுதும் சிநேகிதர்" என்பது ராஜாஜி கடைப்பிடிக்கும் சிநேக தர்மம். அவரால் சிநேகம் செய்யப்பட்டவர்களை ஒரு நாளும் அவர் மறப்பதில்லை.

அரசியல் வேற்றுமைகளோ வாழ்க்கைத் தரங்களில் மாறுபாடுகளோ, சிநேகத்தைப் பாதிக்க அவர் இடங்கொடுப்பதில்லை.

சேலத்தில் இளம் வக்கீலாயிருந்த காலத்தில் ஸர் டி. விஜயராகவாச்சாரியாருடன் அவருக்கு நெருங்கிய நட்பு உண்டாயிற்று. அந்த நட்பு நாளது வரையில் நீடித்திருக்கிறது. ஸர் டி.வி.யைத் தவிர, அவருடைய குடும்பத்தார் எல்லாருமே ராஜாஜியைத் தங்கள் உற்ற பந்துவாகவே நாளது வரையில் கருதி வருகிறார்கள்.

ஒரு தடவை நண்பர் ஆனவர்கள் தம்மை விட்டுப் போக முயற்சித்தாலும் அதற்கு ராஜாஜி இலேசில் இடங்கொடுப்பதில்லை.

ஸ்ரீ ஈ. வே. ராமசாமியாரும் ராஜாஜியும் ஒரு சமயம் உற்ற நண்பர்களாயிருந்தார்கள். அரசியல் வாழ்க்கையிலும் பரிபூரணமாக ஒத்துழைத்தார்கள்.

ஒரு சமயம் தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டியில் ஏதோ ஒரு பிரேரணை வந்தது. அதை ராஜாஜி விரும்பவில்லை. "நாயக்கர் இந்தப் பிரேரணையைத் தாங்கள் எதிர்த்துப் பேச வேண்டும்!" என்றார். "ஆகட்டும்; ஆனால் என்ன காரணங்களுக்காக எதிர்க்கச் சொல்கிறீர்கள்?" என்று ஸ்ரீ ஈ. வே. ரா. கேட்டார். "முதலில் எதிர்த்துப் பேசுங்கள். அப்புறம் காரணங்களைச் சொல்கிறேன். இப்போது நேரமில்லை" என்றார் ஆச்சாரியார். நாயக்கர் பிரேரணையை எதிர்த்துப் பேச ஆரம்பித்தார். பேசப் பேச, பிரேரணைக்கு எதிரான வாதங்கள் எல்லாம் ஸ்ரீ ராமசாமி நாயக்கருக்குத் தோன்றிக் கொண்டேயிருந்தன. தோன்றியதையெல்லாம் சொல்லிக் கொண்டே போனார். அவருடைய பேச்சின் பயனாகப் பிரேரணை தோற்றும் போயிற்று.

பிறகு, ஸ்ரீ ஈ. வே. ராமசாமியார், "சரி, பிரேரணைதான் தோற்று விட்டதே; இப்போதாவது காரணங்களைச் சொல்லுங்கள்!" என்று கேட்டார்.

"நீங்கள்தான் எல்லாக் காரணங்களையும் சொல்லி விட்டீர்களே? அவைதான் என் மனத்திலும் இருந்தன!" என்று சொல்லி விட்டார் ராஜாஜி.

இவ்வளவு அந்யோந்யமாயிருந்தவர்கள் விதி வசத்தினால் பிற்காலத்தில் அரசியலில் வட துருவத்தையும் தென் துருவத்தையும் போல் அகன்று மாறுபட்டார்கள். ஆனாலும் அரசியல் வேற்றுமை சிநேகத்தைப் பாதிக்க ராஜாஜி விடவில்லை. எப்போதாவது கோயமுத்தூர்ப் பக்கம் போனால் ஈரோட்டில் இறங்கி ஸ்ரீ ராமசாமியாரைச் சந்தித்துவிட்டுத்தான் போவார். இதைப் பற்றி 'பரிசுத்த' காங்கிரஸ்வாதிகள் சிலர் வீண் புகார் கூறுவதை அவர் இலட்சியம் செய்வதில்லை.

காலஞ் சென்ற ஸர் டி. சிவஞானம் பிள்ளை அவர்களைப் பற்றி நேயர்கள் பலர் அறிந்திருப்பார்கள். பல காலம் டெபுடி கலெக்டர் உத்தியோகம் பார்த்தார். உத்தியோகம் விட்டு நீங்கிய பிறகு அரசியலில் பிரவேசித்தார். ஜஸ்டிஸ் கட்சியில் சேர்ந்து சட்டசபை சென்று இரட்டையாட்சியில் மூன்று வருஷம் மந்திரியாகவும் இருந்தார். அடுத்த தேர்தலிலே தோல்வியடைந்து சில காலத்துக்கெல்லாம் காலமானதும் நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.

சேலத்தில் ஸ்ரீ டி. சிவஞானம் பிள்ளை டெபுடி கலெக்டராயிருந்த போது அவருடன் ஸி. ஆர். நட்புக் கொண்டார். ஸ்ரீ சிவஞானம் பிள்ளையின் குழந்தைகள் ஸி. ஆர். வீட்டிலேயே வளர்ந்தார்கள். அவர்களுக்குள் அவ்வளவு நெருங்கிய சிநேகிதம்.

சில மாதங்களுக்கு முன்பு நான் இராஜபாளையம் சென்றிருந்தபோது கேள்விப்பட்ட உணர்ச்சிமயமான ஒரு சம்பவத்தைச் சொல்லுகிறேன்.

இராஜபாளையத்தில் ஸ்ரீ ராமச்சந்திரம் பிள்ளை என்று ஒரு பெரிய பண்ணையார் இருக்கிறார். ராஜாஜி காங்கிரஸ் பிரசாரத்துக்காகப் பல வருஷங்களுக்கு முன்பு இராஜபாளையம் சென்றிருந்த போது, பண்ணையார் வீட்டுக்கு அவரை அழைத்துச் சென்றார்கள். சிறிது நேரம் எல்லாருமாகப் பேசிக் கொண்டிருந்த பிறகு, "பண்ணையார்! உங்கள் வீட்டு ஸ்திரீகள் எங்கே இருக்கிறார்கள்?" என்று கேட்டார் ஸி. ஆர்.

இராஜ பாளையத்து ராஜாக்களின் வீட்டில் கோஷாமுறை அமுலில் இருக்கிறது. இது காரணமாகப் பண்ணையார் வீட்டிலும் ஏறக்குறைய அப்படியே.

பண்ணையார், ஸ்திரீகள் வசித்த தனி வீட்டைச் சுட்டிக் காட்டினார். வி.ஆர். எழுந்து விரைவாக அந்தப் பக்கம் போனார். எல்லாருக்கும் ஒரே வியப்பு. சற்றுப் பொறுத்து அவருடன் கூடவே பண்ணையாரும் போனார்.

வி. ஆர். வருவதை வீட்டுக்குள்ளிருந்து பார்த்த பண்ணையாரின் மனைவி, ''அப்பா!'' என்று இரைந்து கூப்பிட்டுக் கொண்டே விரைந்து வெளியே வந்து அவருக்கு நமஸ்கரித்தாள். ஆச்சாரியார் அந்த அம்மாளுடைய க்ஷேம லாபங்களை விசாரித்த பிறகு, பண்ணையாரைப் பார்த்து, ''பண்ணையார்! தங்கள் மாமனார் ஸர் டி. சிவஞானம் பிள்ளை காலமாகி விட்டார் என்று தங்கள் மனைவியை அலட்சியம் செய்ய வேண்டாம். இந்தக் குழந்தை எனக்கும் மகள்தான். ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்றார். பிறகு பண்ணையாரின் மனைவிதான் குழந்தைப் பிராயத்தில் பல வருஷங்கள் ராஜாஜி வீட்டிலேயே வளர்ந்தது பற்றிக் கணவருக்குத் தெரிவித்தார்.

சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னால் நடந்த இந்தச் சம்பவத்தைப் பற்றி இராஜபாளையத்து நண்பர் ஒருவர் இன்னமும் நீங்காத அதிசயத்துடன் எனக்குச் சொன்னார். அவருடைய மனத்தில் மேற்படி சம்பவம் அவ்வளவாகப் பதிந்து போயிருந்தது.

ராஜாஜி கடைப்பிடிக்கும் சிநேக தர்மத்துக்கு இன்னும் ஓர் உதாரணம் சொல்ல விரும்புகிறேன். ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் எப்போதும் காங்கிரஸ் வாதியா யிருந்ததில்லை. சில காலம் ஜஸ்டிஸ் கட்சியில் இருந்ததுண்டு; உத்தியோகமும் பார்த்ததுண்டு. ஆயினும் சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு ரஸிகமணியும் ராஜாஜியும் சந்தித்து ஒரு நாள் இலக்கியம்—கவிதை சம்பந்தமாகப் பேசியவுடனே நெடுங்காலத்து நண்பர்களைப் போல் நெருக்கமாகி விட்டார்கள்.

**''புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்''**

என்னும் வள்ளுவர் பெருமான் வாக்குக்கு ரஸிகமணி—ராஜாஜியின் நட்பு ஒரு உதாரணம் என்று சொல்லலாம்.

மகாத்மா காந்தி சென்னைக்கு விஜயம் செய்திருந்தபோது, ரஸிகமணியை மகாத்மாவுக்கு ராஜாஜி அறிமுகம் செய்து வைத்தார். அப்போது, ''அறுபது பிராயத்துக்குப் பிறகு இவரோடு நான் சிநேகமானேன். எனினும் இவர் தான் இன்றைக்கு என் சிநேகிதர்கள் எல்லாரிலும் அத்தியந்த சிநேகிதர்'' என்றார். இந்த உதாரணங்களிலிருந்து நட்பு விஷயத்தில் ராஜாஜியின் இதயப் பண்பு எத்தகையது என்பது ஒருவாறு வெளியாகிறதல்லவா?

* * * * * * * *

[28-12-47 'கல்கி' இதழில் வெளியானது]

# அழகப்பரின் அதிசய சாதனைகள் 4

## பொறி இயற்கை வளம் பெருக

அந்த நகரில் உள்ள ஆற்றங்கரை விநாயகருக்கு யார் நூற்றெட்டுக் குடம் தண்ணீர் எடுத்து அபிஷேகம் செய்கிறாரோ, அவர் மகாராஜாவாக விளங்குவார் என்று ஜோஸியர்கள் சொல்லி வந்தார்கள்.

ஆனால், ஜோஸியர் கூறியதை யாரும் நம்பவில்லை. கஷ்டப்பட்டு நூற்றெட்டுக் குடம் தண்ணீர் எடுத்து அபிஷேகம் செய்துவிட்டுப் பிறகு ஏமாந்து போவதற்கு அவர்களில் யாரும் விரும்பவில்லை.

ஆனால் ஒருவர் மட்டும் தாம் மகாராஜாவாக ஆக வேண்டும் என்னும் ஆசையினால் தேக சிரமத்தையும் பாராமல் ஆற்றங்கரைப் பிள்ளையாருக்கு அபிஷேகம் செய்வதற்கு முன் வந்தார்.

ஒன்று, பத்து, முப்பது, ஐம்பது என்று நூற்றேழு குடம் தண்ணீர் விநாயகப் பெருமானுக்கு, அவர் மனம் குளிர அபிஷேகம் செய்தாகி விட்டது.

கடைசியில் ஒரே ஒரு குடம்தான் பாக்கி. அபிஷேகம் செய்தவர் அரசனாவதற்கு வேண்டிய அறிகுறி எதுவும் தோன்றவில்லை. கஷ்டப்பட்டதற்குப் பலன் இல்லாமல் போய் விட்டதே என்ற ஏமாற்றம் ஏற்பட்டு விட்டது.

அதனால் அவர் மிகுந்த ஆத்திரத்துடன் நூற்றெட்டாவது குடத்தைப் பிள்ளையார் தலையில் போட்டு உடைத்தார்.

அவ்வளவுதான்! சிரமம் எடுத்துக் கொண்டு அபிஷேகம் செய்தவர் ஏமாறவில்லை. பிள்ளையார் பிரத்யட்சமானார்.

"நீ மகாராஜாவாக ஆகக் கடவாய்!" என்று வரம் தந்தார்.

அபிஷேகம் செய்தவர் நம்ப முடியாத அந்த அற்புதக் காட்சியைக் கண்டு, விநாயகர் தந்த வரத்தைக் கேட்டு ஆச்சரியத்தில் மூழ்கிப் போனார்.

"ஆனால் நூற்றெட்டாவது குடத்தை என் தலையில் போட்டு உடைத்ததால் என் முடிக்கு எவ்வித ஆபத்துமில்லை. உன் முடியையே நீ நொறுக்கிக் கொண்டாய். ஒரு காலத்தில் நீ மாத்திரம் அல்ல, இந்த உலகில் தோன்றும் மகாராஜாக்கள் எல்லாருமே முடி இழந்து விடுவார்கள்" என்று ஆற்றங்கரைப் பிள்ளையார் திருவாய் மலர்ந்து சாபம் கொடுத்து விட்டு மறைந்தார்.

பிள்ளையாரின் சாபம் பலித்து விட்டது! பாரதத்தில் இருந்த அறுநூறுக்கு மேற்பட்ட ராஜாக்கள் முடி இழந்தார்கள். இந்திய நாடு சுதந்திரம் பெற்றது. எல்லாரும் இந்த நாட்டு மந்திரிகளாகும் தகுதியைப் பெற்று விட்டார்கள். மந்திரிகள் எல்லோரும் கூடித் திட்டங்கள் வகுத்துப் பாரத தேசத்தின் இயற்கை வளத்தைப் பெருக்கவும் தொழில் வளம் சிறக்கவும் பாடுபட்டு வருகிறார்கள். தொழிற் கல்லூரிகளைத் திறக்கிறார்கள். தொழில் நிபுணர்களை வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்கிறார்கள். இதெல்லாம் போதவில்லை. தனி நபர்களின் ஊக்கத்தாலும் முயற்சியினாலும் தொடங்கப்படும் பலப் பல தொழிற் கல்லூரிகளும் நாட்டுக்குத் தேவைப்படுகின்றன.

பிள்ளையார் தலையில் தண்ணீர்க் குடத்தை உடைத்த மகாராஜன் திருநாமம் நீடூழி வாழட்டும். அவனால் அல்லவா இவ்வளவு மாறுதல்களும் முன்னேற்றங்களும் இந்தியாவில் நிகழ்ந்து வருகின்றன!

அதனால் அல்லவா, டாக்டர் அழகப்பர் காரைக்குடியில் மிகப் பெரிய கல்வி ஸ்தாபனம் அமைத்து அதன் மூலம் இந்த நாட்டு



மணியம் —




மக்களை அறிவிலும் ஆற்றலிலும் தகுதி உள்ளவர்களாக மாற்றி வருகிறார்?

அவருடைய பொறி இயற் கல்லூரியைப் பார்த்து விட்டுப் பாலிடெக்னிக் கலாசாலைக்குக் கிளம்பினோம். அழகப்பா பொறி இயற் கல்லூரிக்குச் சமீபத்திலேயே பாலிடெக்னிக் கலாசாலையின் பெரிய கட்டடம் இருக்கிறது.

"இதுதான் பாலிடெக்னிக் கலாசாலை" என்றார் என்னுடன் வந்த அதிகாரி.

அழகப்பா பாலிடெக்னிக் கலாசாலைக்குள் போவதற்கு முன்னால் இந்த உலகில் பொறி இயற் கலை வளர்ந்த அதிசயமான வரலாற்றைச் சிறிது நினைவுபடுத்திக் கொள்வோம்.

## பொறி இயலின் கதை

ஆதி மனிதன் காட்டிலும் மேட்டிலும் வாழ்ந்து ஒவ்வொரு கணமும் மிகுந்த ஆபத்தான வாழ்க்கையைத் தான் நடத்தி வந்தான். ஏதோ சந்தர்ப்பவசத்தால் கிடைக்கும் ஆகாரத்தைப் புசித்து வந்தான். ஆடு மாடுகள், பறவைகள் இன்னும் பலவகையான

மிருகங்கள் முதலியவைகளுடன் காட்டு மரங்களின் இலைகளையும், கிழங்குகளையும் தான் நம்பி வாழ்ந்து வந்தான். காற்றுக்குப் பின் மிக அவசியமான குடி தண்ணீர் சில இடங்களில்தான் இருந்து வந்தது. அப்படி நல்ல தண்ணீர் ஓடிய ஆற்றின் கரையில் ஆதி மனிதர்கள் கூட்டமாக வாழ்ந்து வந்தார்கள். பெரிய மரங்களின் கிளைகளிலும், மலைக் குகைகளிலும் மன அமைதி இல்லாமல் மிகுந்த பயத்துடன் வசித்து வந்தார்கள். காலப் போக்கில் எப்படியோ தங்கள் கைகளை உபயோகிக்கக் கற்றுக் கொண்டார்கள்.

மனிதன் எங்கேயாவது அதிக நாள் வசித்து வந்தான் என்று சொல்ல முடியாது. காரணம் அவனுக்கு ஒரே இடத்தில் ஆகாரம் கிடைப்பதில்லை. அதனால் ஆகாரம் கிடைக்கும் இடங்களைத் தேடித் தேடி அலைந்தான். ஆகாரம் கிடைத்தால் சீதோஷ்ணம் ஒத்து வருவதில்லை. சீதோஷ்ணம் ஒத்து வந்தால் ஆகாரம் கிடைப்பதில்லை. இவ்வாறு இயற்கையுடன் போராடிச் சிறுகச் சிறுக சீதோஷ்ண நிலைமைக்கு ஏற்றவண்ணம் ஒரே இடத்தில் வாழுவதற்குத் தன்னைப் பழக்கிக் கொண்டான்.



லெப்டினென்ட் கர்னல்
எஸ். பால் பி. இ., எம். ஐ. இ.,

பல நூற்றாண்டுகளுக்குப் பின்தான் தீயின் சக்தியைப் புரிந்துகொண்டு அதைத் தன் வாழ்க்கைக்குச் சௌகரியமாக உபயோகிக்கத்தெரிந்து கொண்டான். பிறகு உணவுப் பயிர்கள் வளர்ப்பதற்கும், அதற்குத் தண்ணீர் பாய்ச்சவும் பயின்றான். மிருகங்களைப் பழக்கி அதன் சக்தியை உபயோகிக்கத் தெரிந்து கொண்டான். வண்டிகள் செய்து அதில் மிருகத்தைப் பூட்டி ஓட்டினான். தரையில் வண்டிவிட ஆரம்பித்தது போலத் தண்ணீரில் கட்டு மரம் கட்டி விட்டான். பிறகு தோணியைக் கண்டு பிடித்தான். அது பாய் மரமாக, கப்பலாக வளர்ந்தது. இந்த வளர்ச்சிக்குப் பிறகுதான் உணவுகளைச் சேமித்து வைத்துக் கொண்டு உணவுக் கஷ்டம் இல்லாமல் வாழத் தெரிந்து கொண்டான். இதனால் மனிதனின்வாழ்வு உயர்ந்தது.

இவ்வாறு வாழ்க்கையை உயர்த்திய முதல் மனிதன்தான் ஆதி பொறி இயல் நிபுணன்; இன்ஜினீயர். கையில் கல்லை எடுத்து எறிந்த மனிதன், அதைக் கவண் கயிற்றில் வைத்து இன்னும் வேகமாக எறியக் கண்டு பிடித்தான். அந்தக் கவண் கயிற்றைக் கண்டு பிடித்தவன்தான் முதல் இன்ஜினீயர். ஈட்டி, வில், வேல், வாள் முதலிய ஆயுதங்களைக் கண்டவர்கள் ஆதி பொறி இயல் நிபுணர்கள்.

## பழையகாலப் பொறி இயல்

எகிப்து நகரில்தான் பொறி இயல் நல்ல முறையில் வளர்ந்து வளம் பெற்றிருந்திருக்கிறது. கல்லே இல்லாத இறந்த வெளியில் எத்தனையோ மைல்களுக்கு அப்பாலிருந்து கற்களைக் கொண்டு வந்து கற்பனை செய்து காண முடியாதபடி 'பிரமிட்'கள் கட்டியிருக்கிறார்கள். இதை நிர்மாணித்தவர்கள் எவ்வளவு பெரிய இன்ஜினீயர்களாக இருந்திருக்க வேண்டும்? சீனப் பெருஞ்சுவரை எத்தனை லட்சம் மக்கள் கட்டியிருக்க வேண்டும்! ஒரு மைல் நீளமா, இரண்டு மைல் நீளமா? நூறு மைல்களா, இருநூறு மைல்களா? இரண்டாயிரத்து ஐந்நூறு மைல் நீளம் அல்லவா? அந்தப் பெருஞ் சுவர் இன்னும் அழியாமல் இருக்கிறதே! ஆகா! எப்பேர்ப்பட்ட பொறி இயல் சாதனை! பாபிலோன் நகரில் உள்ள தொங்கும் தோட்டம் அதிசயமான பொறி இயல் கலையின் சிகரமாக விளங்குகிறது. இத்தாலிய நாட்டில் இருக்கும் பைசா கோபுரம், நமது நாட்டில் உள்ள விண் மறைக்கும் கோயில்கள், ஒரே கல்லில் குடைந்தெடுத்த மாபெரும் ரதங்கள், இன்னும் பர்மா, சயாம் முதலிய இடங்களில் உள்ள ஆலயங்கள் எல்லாம் பழைய இன்ஜினீயரிங் கலையின் சிறப்புக்கு இன்றும் எடுத்துக் காட்டாக நிற்கின்றன.

அங்கோர் வாட் என்னும் இடத்தில் உள்ள அரண்மனைக் கட்டடங்கள் அபூர்வமான இன்ஜினீயரிங்சாதனைகள். சுண்ணாம்பும், சிமெண்டும் இன்றியே ஒரு கல்லை இன்னொரு கல்மேல் பொருத்தி இணையற்ற முறையில் அழகுமிக்க அரண்மனைகளைக் கட்டியிருக்கிறார்கள். ஒரு கல்லுக்கு மேல் இன்னொரு கல்லை அமைத்திருக்கும் விந்தையைப் பார்த்துப் பொறி இயல் உலகமே வியக்கிறது. கிரேக்கர்கள், ரோமானியர்கள் அந்தக் காலத்தில் போட்ட சாலைகள் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னும் அழிவில்லாமல் உபயோகத்தில் இருக்கின்றன. தமிழகத்தில் ராஜராஜன் காலத்தில் காவேரியில் கட்டிய கல் அணை, சிதம்பரத்துக்கு அருகில் உள்ள வீர நாராயண ஏரி எல்லாம் வியக்கத்தக்க பொறி இயல் சாதனைகள். இவையாவும் நவீன என்ஜினீயரிங் உலகம் பார்த்துப் பார்த்து மலைக்கும் அபூர்வமான பொறி இயல் அதிசயங்கள்.

## நவீன பொறி இயல்

1700-ம் ஆண்டுக்குப் பின்தான் இயந்திரங்களை இயக்கும் பொறி இயற்கலையை மனிதன் பயின்றான். பொறி இயற் கலை உயர்ந்து வளர ஆரம்பித்து விட்டது. 1869-ம் ஆண்டுக்குப் பின் நிலக்கரியை உபயோகித்து நீராவியை உண்டாக்கி அதன் சக்தியால் இயந்திரங்களை இயக்க ஆரம்பித்தனர். இயந்திரப் பொறி இயல் கலைகள் வளர்ந்தன. தொழிற்சாலைகள் பெருகின. மக்கள் சுக வாழ்வு வாழ ஆரம்பித்தனர். மக்கள் சமுதாயம் வேகமாக உயரத் தொடங்கியது.

இதுவரை இருந்து வந்த சாலைகளை அமைக்கும் பொறி இயல், கட்டடம் கட்டும் பொறி இயலுடன் இயந்திரங்களை இயக்கும் பொறி இயற் கலையும் சேர்ந்து வளரத் தொடங்




# பார்த்து வாங்குங்கள்.

இந்த மாதிரி

# இணாம் பரிசுக் கூப்பன்

நீங்கள் வாங்கும்






## ஓ.கே. வனஸ்பதி

**டின்களில் உள்ளதா என்று நன்கு கவனித்து வாங்குங்கள்**

1 பவு., 2 பவு., 5 பவு., 10 பவு., லீவர்–லிட் டின்களில் கிடைக்கின்றன.

**உங்கள் அருகிலுள்ள 'ஓ.கே.' வியாபாரி உங்களுக்கு உதவி செய்ய இருக்கிறார்**

குடும்பத்திலுள்ள பெண்கள் கவனிக்கவும்: இந்தப் பரிசுத் திட்டம் உங்கள் லாபத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உங்களுக்குத் தேவையான ஒரு பூரண ஸெட் பாத்திரங்களை நீங்கள் இணாமாகப்பெறும்வரை இது நீடிக்கும். டின்னில் கூப்பன் இருக்கிறதா எனக் கவனியுங்கள். இல்லையென்றால், ''ஏன் இல்லை''? என்று கடைக்காரரிடம் விசாரியுங்கள்.




தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ் - 1

EP

கின. 1831-ம் ஆண்டு மின்சார சக்தியைக் கண்டு பிடித்தார் மைக்கேல் பாராடே என்னும் நிபுணர். அதற்குப் பின்னர் மின்சாரப் பொறி இயற் கலையும் சேர்ந்து பொறி இயற் கலை மேலும் மேலும் ஓங்கி வளர்ந்து வளம் பெற்று விட்டது.

புதுப் புது விஞ்ஞானிகள் தோன்றிப் புதிய புதிய விஷயங்களைக் கண்டு பிடிக்கும் போது புதுப் புது பொறி இயற் கலைகள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. பொறி இயற் கலைகளில்தான் எத்தனை எத்தனை வகைகள்!

இயற்கை வளங்களை எடுத்து ஆளுவதற்கான இன்ஜினியரிங் கலைகள், நிலக்கரி எடுக்கும் கலை, கல் எண்ணெய் கண்டு பிடிக்கும் கலை, இரும்புத் தாதுக்களும், இன்னும் பல அதிசயமான கனி வளங்களையும் கண்டு பிடிக்கும் பொறி இயல்.

விண்ணை முட்டும் கட்டடம் கட்டும் கலை, மிகப் பெரிய சாலைகள் அமைக்கும் கலை, தண்ணீரின் சக்தியைப் பிடித்து உபயோகிக்கும்கலை, சுகாதாரப் பொறி இயல், மின்சாரப் பொறி இயல், செய்திகளை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு அனுப்பும் அதிசயப் பொறி இயல், இயந்திரக் கலை, விமானப் பொறி இயல், மோட்டார்ப் பொறி இயற்கலை, ரஸாயனப்பொறி இயல், விவசாயப் பொறி இயல், கப்பல்கட்டும் பொறி இயல், ராணுவப் பொறி இயற்கலை இப்படி இன்னும் எத்தனையோ பொறி இயற் கலைகள் இருக்கின்றன.

இந்தியாவில் இவ்வளவு பொறி இயலுக்கும் வேண்டிய கல்லூரிகள் இல்லை. இருக்கும் ஒரு சில பொறி இயற்கூடங்களிலும் போதிய வசதிகள் இல்லை. மேலே கூறிய அவ்வளவு இன்ஜினியரிங் கலைகளுக்கான கல்லூரிகள் இல்லாவிட்டாலும் சமுதாய வாழ்க்கைக்கு மிக அவசியமான கட்டடம் கட்டும் கலை, சாலை அமைக்கும் கலை, இயந்திர சம்பந்தமான கலை, மின்சாரக் கலை, நீர்ச் சக்தியை இயக்கும் கலை முதலியவைகளாவது அவசியம் வேண்டும். அந்தக் கலைகளில் சிறந்த நிபுணர்களும் வேண்டும். அவர்களுக்குத் துணை புரியத் தொழில் தெரிந்தவர்களும் வேண்டும்.

அதற்காகத்தான் டாக்டர் அழகப்பர் பொறி இயல் நிபுணர் பட்டம் பெறும் பொறி இயற் கல்லூரியும், பொறி இயற் கலைப் பத்திரம் வழங்கும் பாலிடெக்னிக் கலாசாலையும் சேர்த்து நடத்துகிறார்.

பொறி இயற் கலைப் பத்திரம் வழங்கும் கல்லூரிதான் பாலிடெக்னிக் என்பது. 1955-ம் ஆண்டு இக்கல்லூரியையும், 1953ம் ஆண்டில் அழகப்பா பொறி இயற் கல்லூரியையும் பாரதத்தின் ஜனாதிபதி பாபு ராஜேந்திர பிரஸாத் திறந்து வைத்தார்.

இந்தக் கல்லூரியின் பிரின்ஸ்பல் ராவ் பகதூர் லெப்டினெண்ட் கர்னல் எஸ். பால்

## வாழ்க, ராஜாஜி!

கொடைவள்ளலும் தொழிற் கலைகளின் அபிவிருத்திக்காக இணையற்ற தொண்டு புரிந்து வருபவருமான டாக்டர் அழகப்ப செட்டியார், ராஜாஜியின் பிறந்த தினத்தை யொட்டி சென்ற ஆண்டு அவருக்கு எழுதியுள்ள கடிதத்தைக் ''கல்கி'' வாசக நேயர்களுக்காக மிகுந்த மகிழ்ச்சியுடன் வெளியிட்டுள்ளோம்:

அன்பார்ந்த ராஜாஜி அவர்களுக்கு,

நமது பாரத பூமியில் அவதரித்த தலைசிறந்த மகான்களில் ஒருவரான தங்களுக்கு, தங்கள் பிறந்த நாளையொட்டி மிகத் தாழ்மையுடன் எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். நோய் காரணமாகப் படுத்த படுக்கையிலிருந்து இந்தக் கடிதத்தைத் தங்களுக்கு எழுதுகிறேன். இந்த வாழ்த்துக் கடிதத்தை அனுப்புவதில் எனக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில அறிவுச் சுடர்களாம் சரித்திரத்தின் ஏடுகள் ஒளிவீசித் திகழ்கின்றன. ஜனக் கூட்டத்தின் மிரட்டலையோ, தலைவர்களின் எதிர்ப்பையோ, பண்பட்ட, விசுவாசமுள்ள சீடர்களின் ஆதரவின்மையையோ சிறிதும் பொருட்படுத்தாது தங்களுடைய உயர்ந்த லட்சியங்களைக் கைவிடாமல் உறுதியுடன் நின்ற வீரர்களால்தான் சரித்திரம் சிறப்பை அடைந்திருக்கிறது. உங்களுடைய சாதனையும் அப்படித்தான். நம் நாட்டில் எல்லோருக்கும் மேலான தலைவரிடம் தங்களுக்குள்ள கருத்து வேற்றுமையைக் கூடத் தாங்கள் மறைத்ததில்லை. தங்களுடைய அத்தகைய தைரியமும் நேர்மையும் சரித்திரம் கண்ட உண்மை. ''சரித்திர ஏடுகளில் ஒளிவீசும் இடம் வேண்டாம். தொண்டுதான் முக்கியம்'' என்ற எண்ணத்துடனேயே தாங்கள் அடக்கத்துடன் துன்பங்கள் நிறைந்த கரடுமுரடான பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டீர்கள். ஏனெனில், இறைவன் அருளிய உங்களுடைய விவேகமானது தன்னலமற்ற அந்தப் புனிதமான பாதையில்தான் உங்களைச் செலுத்தியது.

ஸாக்ரடீஸ் உண்மை பேசத் துணிந்தார் என்பதற்காக, அவருக்கு விஷ பானத்தைக் கொடுத்தார்கள். நம்முடைய அந்தராத்மாவின் குரலுக்குச் செவி சாய்த்ததற்காக ஏசுநாதரைச் சிலுவையில் அடித்தார்கள். சகிப்புத் தன்மையையும் அன்பையும் உபதேசித்ததற்காக அஹிம்சா மூர்த்தி சுட்டுக் கொல்லப் பட்டார். தாங்கள் அத்தகைய தனிச் சிறப்பு வாய்ந்த வீரர்களின் திருக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். உங்கள் காலத்தில் நான் வாழ்ந்துவருவதை எண்ணிப் பரவசமும் பெருமகிழ்ச்சியும் அடைகிறேன்.

எல்லாம் வல்ல இறைவன் தங்களுக்கும், தங்கள் மூலம் மானிட வர்க்கத்தின் இன்றைய சந்ததிகளுக்கும், வருங்கால சந்ததிகளுக்கும், குறிப்பாக, இந்திய தேசத்து நண்பர்களுக்கும் அருள் புரிவாராக.

சென்னை
7-12-55

அன்பும் மதிப்பும் உள்ள
அழகப்பன்

பி. இ., எம். ஐ. இ., அவர்கள். இவர் கிண்டி பொறி இயற் கல்லூரியின் பிரின்ஸ்பலாக இருந்து ஓய்வு பெற்றவர். அபாரமான தொழில் ஞானம் உள்ளவர். தொழிற் கல்வி மூலம்தான் இந்த நாட்டையும் நாட்டு மக்களையும் உயர்த்த முடியும் என்ற உயர்ந்த லட்சியத்தைக் கொண்டவர். ராஜாஜி அவர்களின் கல்வித் திட்டத்தை, அதாவது சிறு வயதிலேயே தொழிற் கல்விக்கான அஸ்திவாரம் அமைக்கும் ஆரம்பக் கல்வித் திட்டத்தை வன்மையாக ஆதரிப்பவர்.

இந்தக் கல்லூரியில் ஆண்டு ஒன்றுக்கு நூறு மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். மூன்று ஆண்டுகளில் அவர்களைச் சிறந்த தொழில் நிபுணர்களாக்கிப் பொறி இயல் அத்தாட்சிப் பத்திரம் கொடுத்து அனுப்பி வைக்கிறார்கள். நமது நாட்டில் இது போன்ற பாலிடெக்னிக் கல்லூரிகள் ஒவ்வொரு தாலூக்காவிலும் ஒவ்வொன்று உடனே ஆரம்பிக்க வேண்டும். ஒவ்வொரு பொறி இயலுக்குமே ஒரு பாலிடெக்னிக் கலாசாலை வீதம் இருந்தால் கூட நல்லதுதான்.

செல்வம் மிகுந்த புண்ணியவான்கள் டாக்டர் அழகப்பரைப் போல ஆரம்பக் கல்வியிலிருந்து ஆறு கல்லூரிகள் வரை ஆரம்பித்து நடத்தா விட்டாலும் தங்கள் தங்கள் மாவட்டத்தில் ஒரு பாலிடெக்னிக் கலாசாலையாவது நடத்த முன்வரக் கூடாதா? தமிழ் நாட்டின் உயர்வுக்காகப் பொது நலத் தொண்டாற்றி வரும் கழகங்கள் இருக்கின்றனவே, அவைகள் இந்தக் காரியத்தைத் துணிந்து செய்ய முன்வரக் கூடாதா?

ஐந்தாண்டுத் திட்டம், பத்தாண்டுத் திட்டம் என்றெல்லாம் ஏட்டில் இருப்பதைக் காரியத்தில் நிறைவேற்றுவதற்குத் தொழில் நிபுணர்கள் அவசியம். இப்பொழுது இருந்தே பாலிடெக்னிக் கல்லூரிகளையும், பொறி இயற் கல்லூரிகளையும் ஏற்படுத்தினால்தான் எதிர் காலத்திலாவது திட்டங்களை நிறைவேற்றலாம். ஒரே ஊரில் போட்டி போட்டுக் கொண்டு பாலிடெக்னிக் கலாசாலைகள் ஆரம்பிப்பதைவிட பாலிடெக்னிக்கோ, பொறி இயற் கல்லூரியோ இல்லாத ஊர்களில் ஆரம்பித்தால் நாட்டுக்கு மிகவும் நல்லது.

டாக்டர் அழகப்பர் தமிழ் நாட்டில் மட்டுமல்லாது கேரள நாட்டிலும் ஒரு பாலிடெக்னிக் கலாசாலை நடத்தி வருகிறார். திருச்சூருக்கு எட்டு மைல்களுக்கு அப்பால் உள்ள அழகப்பா நகரில்தான் அழகப்பா பாலிடெக்னிக் கலாசாலை இருக்கிறது.

கேரள நாட்டைச் சேர்ந்தவர்கள் கெட்டிக்காரர்கள். யார் யாரிடம் என்ன என்ன திறமை இருக்கிறதோ அதைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்தவர்கள். தங்கள் நாட்டில் ஒரு பொறி இயற் கல்லூரியும் ஆரம்பிக்கும்படி டாக்டர் அழகப்பரைக் கேட்டுக்கொண்டு வருகிறார்கள். அதற்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்வதாக உறுதி கூறி உற்சாக மூட்டுகிறது கேரள சர்க்கார். நாட்டு நலனில் அக்கறை கொண்ட சர்க்கார் என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்?

இந்த விவரங்களை யெல்லாம் அழகப்பா பொறி இயற் கல்லூரியிலும், அழகப்பா பாலிடெக்னிக் கலாசாலையிலும் உள்ள பல பொறி இயல் நிபுணர்களுடன் அளவளாவும் போது புரிந்துகொள்ள முடிந்தது.

பாலிடெக்னிக் கலாசாலையும் அதற்குள்ளே சொல்லிக் கொடுக்கும் விஷயங்களையும் சாதாரணமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியாது. சுருக்கமாகச் சொன்னால் அழகப்பா பொறி இயற் கல்லூரியில் நடக்கும் அவ்வளவு காரியங்களும் இந்தப் பாலிடெக்னிக் கலாசாலையில் நடைபெறுகின்றன என்று சொல்லி விடலாம். சில பகுதிகளை மட்டும் நுணுக்கமாக ஆராயாமல் விட்டுவிடுகிறார்கள். அவ்வளவுதான். பொறி இயற் கல்லூரியில் பட்டப் படிப்புக்கு நாலு ஆண்டுகள் படிக்க வேண்டும். இண்டர்மீடியட் என்னும் இடை வகுப்பில் தேறி இருக்க வேண்டும். பாலிடெக்னிக் கலாசாலையில் இடம் பெறுவதற்கு எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்திருந்தாலே போதுமானது. அத்துடன் மூன்று ஆண்டுகள் படிப்பு முடிந்த உடனேயே பாலிடெக்னிக் மாணவர்களுக்குப் பொறி இயல் அத்தாட்சிப் பத்திரம் வழங்கி வருகிறார்கள்.

அழகப்பா பொறி இயற் கல்லூரியையும், பாலிடெக்னிக் பகுதியையும் பார்த்துவிட்டு வந்த பிறகும், அங்குள்ள மாணவர்களின் உற்சாகமான மலர்ந்த முகங்களும், அவர்களுக்குப் பொறி இயற் கலையைக் கற்றுக் கொடுக்கும் பொறி இயல் நிபுணர்களின் கடமை உணர்ச்சியும் இன்னும் என் கண் முன்னே தோன்றிக் கொண்டிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் மேலே இந்தக் கல்லூரியின் ஸ்தாபகர் டாக்டர் அழகப்பரின் அன்பு நிறைந்த விசாலமான இதயம் என்னை எங்கேயோ அழைத்துச் சென்று விடுகிறது.

"மாணவர்கள் டாக்டர் அழகப்பரைப் போலவே தாங்கள் சம்பாதிக்கும் பொருளை நல்ல தர்ம காரியங்களுக்குக் கொடுக்கும் பண்பைக் கற்றுக்கொள்ள வேண்டும். இதோ டாக்டர் அழகப்பர் ஒரு உயிருள்ள புத்தகமாகவே இருக்கிறார். எப்படி ஒரு மனிதன் மிகச் சிறந்த காரியங்களுக்குத் தர்மம் செய்யலாம் என்பதை அவருடைய வாழ்க்கையில் இருந்து படித்துக் கொள்ள வேண்டும். டாக்டர் அழகப்பரிடம் இருக்கும் தன்னம்பிக்கையும், தளரா ஊக்கத்தையும் எல்லோரும் பெறுவதற்கு முயல வேண்டும்" என்று ராஜாஜி அவர்களே கூறி இருக்கும் போது அதற்கு மேல் டாக்டர் அழகப்பரைப் பற்றி நான் என்ன சொல்லப் போகிறேன்?

** ** **

அழகப்பரின் அதிசய சாதனைகளினால் வளர்ந்த இரண்டு கல்லூரிகளையும், மின்சார ரஸாயன ஆராய்ச்சிச் சாலையையும் பார்த்து விட்டோம். இன்னும் நாலு கல்லூரிகளையும் சின்னஞ் சிறு பாலர்களுக்கான மாண்டிசோரி பள்ளிக்கூடத்தையும் நாளைக்குப் பார்க்கலாம்.

பொறி இயற் கல்லூரிகளையும், ஆராய்ச்சிக் கூடத்தையும் போல அவைகளை யெல்லாம் நின்று நிதானமாகப் பார்ப்பது அவ்வளவு சாத்தியமில்லை. ஒரே நாளிலேயே அவைகளைப் பார்த்துவிட வேண்டியதுதான். ஆகவே அவைகளைச் சற்று அவசரமாகவே பார்ப்பதற்குத் தயாராக இருங்கள். (தொடரும்)

இந்த வித்தியாசத்தைக் கவனியுங்கள் :

# வெண்மையான ஆடைகளை அதிவெண்மையாக்குகிறது

சாதாரண சோப்பினால் சுத்தம் செய்த பின் உங்களுடைய வெண்மையான ஆடைகளுக்கு டினோபால் உபயோகிப்பதால், நீங்கள் எவ்வித தோற்றமளிக்கின்றீர்கள் எனப் பாருங்கள். வெண்மையான ஆடைகளைப் பிரகாசமாகவும். பளபளப்பான வெண்மையுடனும் வைக்கச் செய்யும் பிரத்தியேகமான தொருகுணம் டினோபாலிலடங்கியுள்ளது.





## டினோபால்

“டினோபால்” என்பது ஜே. ஆர். கெய்கி, எஸ். எ. பாஸல், ஸ்விட்ஸர்லாந்த், அவர்களுடைய ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்.

அமால்கமேடட் கெமிக்கல்ஸ் அண்ட் டைஸ்டப்ஸ் கோ. பிரைவேட் லிட்.,
பி. ஓ. பாக்ஸ் 965, பம்பாய்.

# வானவில்



மதிவாணன்

பூந்தாமை வேகமாக நடந்து கொண்டிருந்தாள். நிச்சயமாக இன்னும் சற்று நேரத்தில் மழை வருவதற்கான அறிகுறி தென்பட்டது. அதற்குள்ளாக அவள் எஞ்சியுள்ள பாதியை — அதுதான் அவளுடைய ஊர் — அடைவதென்பது முடியாத காரியம். நகரத்திலிருந்து இரண்டு மைல் தூரந்தான் வந்திருக்கிறாள். இன்னும் இரண்டு மைல்களுக்குக் குறையாமல் இருக்கிறது.

பூந்தாமை வேகமாக நடக்க முயன்றாள். ஆனால் அவள் இடுப்பிலிருந்த கனமான, புதிய தகரப் பெட்டி அவளைப் பின்னுக்கு இழுத்தது. மழை வேறு 'வந்தேன் வந்தேன்' என்று மிரட்டியது. மாலை நேரமும் மங்கிக் கொண்டு வந்தது. அந்தச் சாலையில் மழைக்காக ஒதுங்க வேண்டுமென்றால் மரத்தடியைத் தவிர வேறு வீடு வாசலோ, சத்திரம் சாவடியோ ஒன்றுமே கிடையாது.

பூந்தாமை யாராவது தெரிந்தவர்கள் வருகிறார்களா என்று பின்னால் திரும்பிப் பார்த்தாள். அப்படி ஒருவரும் வருவதாகத் தெரியவில்லை. எதிரே மட்டும் தூரத்தில் ஒரு வண்டி. அதுவும் கூரையில்லாத பார வண்டி வந்து கொண்டிருந்தது. நல்ல கட்டான உடலைக் கொண்ட அழகிய இளைஞன் ஒருவன் அதை ஓட்டிக் கொண்டு வந்தான். அந்த வாலிபனைத் தவிர வேறு யாரும் அந்த வண்டியில் இல்லை.

வண்டி பூந்தாமையை நெருங்கியதும், "என்ன பூவு! எங்கே இப்படித் தனியே போயிட்டு வர்றே?" என்றான் அந்த வண்டியை ஓட்டிக் கொண்டு வந்தவன். அவன் அவளுடைய ஊரைச் சேர்ந்தவன்தான். அவள் வசிக்கும் தெருவிலேயே வசிப்பவன். அவளுக்கு உறவு முறையில் மச்சானாக வேண்டும். அவன் பூந்தாமையைப் 'பூவு' என்றுதான் கூப்பிடுவான்.

அவனுடைய கேள்விக்குப் பூந்தாமை, "கடைத் தெருவுக்குப் போய்த் துணிமணி வளையல், பவுடர், பெட்டி எல்லாம் வாங்கி வந்தேன், மச்சான்! சின்னப் பிள்ளையிலே போனது. இன்னைக்குத்தான் அப்பா மனசு வந்து போகச் சொன்னாரு. துணையோடுதான் போனேன். ஆனால் அவங்களெல்லாம் சினிமாப் பார்க்கத் தங்கிட்டாங்க. நான் மட்டும் தனியாக வந்து விட்டேன். ஊர் போகிறதுக்குள்ளே மழை வந்துடும் போல இருக்குது" என்று பதில் கூறினாள்.

உளியன்—அவன்தான் வண்டியோட்டி வந்தவன்—ஒருமுறை வானத்தைப் பார்த்து விட்டு, "பூவு! நீ வீடு போகிறதுக்குள்ளே தெப்பலா நனைஞ்சு போயிடுவே. அப்புறம் உடம்புக்குக் காய்ச்சல் வந்துடும். நீ இங்கேயே நில்லு. நான் நொடியிலே திரும்பி வரேன்" என்று கூறி விட்டுச் சாட்டையைச் சொடுக்கினான்.

கால் மணி நேரத்தில் உளியன் திரும்பி வந்தான். அவன் வண்டியில் ஒரு தாழங் குடை இருந்தது. பூந்தாமை உளியனைப் பற்றிப் பலவாறு எண்ணினாள். தனக்காக அவன் மிக்க சிரமப்படுவதாக நினைத்தாள்.

உளியன் வண்டியை நிறுத்தி மூக்கணாங் கயிற்றைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, "சீக்கிரம் வண்டியில் ஏறி உட்காரு, பூவு!" என்றான். பூந்தாமை வண்டியில் பெட்டியை வைத்து விட்டுத் தானும் சிரமமில்லாமல் ஏறி வைக்கோலின் மேல் ஒய்யாரமாக உட்கார்ந்து கொண்டாள்.

உளியன் வேகமாக வண்டியை ஓட்டினான். அரை மைல் தூரம் வந்தவுடன் இலேசாகத் தூறல் விழுந்தது. சற்று நேரத்தில் பெருந் தூறலாக விழ ஆரம்பித்தது. உடனே உளியன், "இந்தா, பூவு! இந்தத் தாழங் குடையைப் பிடிச்சுக்கோ. உனக்காகத்தான் ஒருவரிடம் இரவல் வாங்கி வந்தேன்" என்று கூறி விட்டுத் தன் தலையின் மேல் துண்டை விரித்துப் போட்டுக் கொண்டான்.

தன்னிடம் குடையைக் கொடுத்து விட்டு அவன் மழையில் நனைகிறானே என்று எண்ணிய பூந்தாமை, "மழையில் நீ நனையும் பொழுது எனக்கு எதற்குக் குடை? வேண்டுமென்றால் இருவருமே பிடித்துக் கொள்ளலாம்" என்றாள். இதைக் கூறும் போது அவள் கண்களில் அசாதாரணமான ஒளி வீசியது.

அவள் கூறியதைக் கேட்ட உளியன் இளம் புன்னகை ஒன்றை உதிர்த்து விட்டு, "என்ன பூவு! இன்னும் சின்னப் பிள்ளையாக வெள்ளை மனசோடு இருக்கிறாயே. வயது வந்த ஒரு ஆணும் பெண்ணும் சாதாரணமாக ஒருவரை ஒருவர் பார்த்தாலேயே தப்பர்த்தம் செய்து, இல்லாத பொல்லாத கதையெல்லாம் கட்டி விடுவார்களே! அப்படி இருக்க ஒரே குடையில் நாம் இரண்டு பேரும் போகிறதை யாராவது பார்த்து விட்டால், அவ்வளவுதான்" என்று கூறினான்.

அவன் கூறியதைப் பூந்தாமை புரிந்து கொண்டாலும் வீம்புக்காக, "ஏன் மச்சான்! சின்ன வயசிலே ஒரு தடவை இப்படித் தானே மழையில் அகப்பட்டுக் கொண்டோம்? அப்பொழுது ஒரு சின்ன சம்பங்கிக் குடையில் நாம் இருவரும் வரவில்லையா? அதைப் பார்த்து ஏன் ஒருவரும் ஒன்றும் சொல்லவில்லை?" என்று கேட்டாள்.

அவள் கேள்விக்கு அவன் பதில் சொல்வதற்குள் தூறல் வலுத்து மழையாகப் பெய்யத் தொடங்கியது. உளியன் ஒரு ஆலமரத்தடியில் வண்டியை நிறுத்தினான். இன்னும் ஒரு மைல் தூரமும் இந்த மழையில் போவதென்பது பெரிய நீர்வீழ்ச்சிக்குள் போவது போல் தான் இருக்கும். இந்தச் சிரமத்தை அறிந்த உளியன் மாட்டை அவிழ்த்து மரவேரில் கட்டி



நவம்பர் 6ல் இந்திய சர்க்கார் செய்தி விளம்பர இலாக்காவின் ஆதரவில் இரண்டாவது ஆண்டு புத்தகக் கண் காட்சி நடந்தேறியது. புது தில்லியில் நடைபெற்ற இந்த விழாவுக்கு உப-ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் தலைமை வகித்துப் பல பரிசுகள் வழங்கினார். டாட்டா கமர்ஷியல் அச்சகத்துக்கு வழங்கிய, அச்சுக் கலைக்கான பரிசை மேற்படி அச்சகத்தின் ஜெனரல் மானேஜர் திரு ராமு பெற்றுக் கொள்வதைப் படத்தில் காணலாம்.

விட்டு வண்டிக்குக் கீழே வைக்கோலைப் போட்டு உட்காருவதற்குத் தயார் செய்தான். பிறகு பூந்தாழையிடம், "பூவு! நீ குடையைப் பிடித்துக் கொண்டு உட்காரு. நான் வண்டிக்குக் கீழே ஓண்டிக்கறேன்!" என்றான்.

"வேண்டாம், மச்சான்! நாம் இரண்டு பேருமே குடையைப் பிடிச்சுக்கிட்டு உட்கார்ந்துக்கலாம்!" என்றாள் பூந்தாழை.

அவள் கூறியதை எவ்வளவோ மறுத்தான் உலியன். ஆனால் பூந்தாழை ஒரே பிடிவாதம் செய்தாள். அவள் பிடிவாதத்துக்காகக் குடையைப் பிடித்துக் கொண்டு அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்தான். உடனே மடியிலிருந்து ஒரு சுருட்டையும் தீப்பெட்டியையும் கையில் எடுத்துக் கொண்டு அவளை அர்த்த புஷ்டியோடு பார்த்தான். அவன் நோக்கத்தையும் அதை நிறைவேற்ற அவன் தயங்குவதையும் கண்ட பூந்தாழை, "பரவாயில்லே, மச்சான்! நீ தாராளமாய்ப் பற்றவை" என்றாள்.

அவள் அப்படிக் கூறியதும் அவனுக்குச் சிறிது ஆச்சரியம் ஏற்பட்டது. புகை பிடிப்பதைப் பூந்தாழை கொஞ்சங் கூட விரும்பமாட்டாள். அவளுடைய தந்தையைக்கூடப் புகை பிடிப்பதை வேண்டாம் என்று கேட்டுக் கொண்டாள். அப்படிப் பட்டவள் அவள் பக்கத்திலிருந்தே புகை பிடிப்பதற்குத் தனக்கு அனுமதிக்கிறாளே என்றுதான் அவன் ஆச்சரியப்பட்டான். எல்லாம் மழையால்தான் என்று எண்ணியபடியே தீக்குச்சியைக் கிழிக்கும் பொழுது உழைத்து உரமேறிய அவனுடைய முரட்டுக் கரம் பூந்தாழையின் மென்மையான கரத்தில் பட்டு விட்டது.

அடுத்த கணம் பூந்தாழையின் உடலில் மின்னல் போல் ஒரு வித உணர்ச்சி பாய்ந்தோடியது. உலியனைப் பற்றி இதுவரை ஏற்படாத ஒருவித எண்ணம் அவள் உள்ளத்தில் ஏற்பட்டது. அவன் கேள்விக்குக்கூட அவளால் பதில் சொல்ல முடியவில்லை. தொண்டையில் ஏதோ ஒன்று அடைப்பது போல் இருந்தது. அப்படியே மௌனமாக அமர்ந்திருந்தாள். உலியன் சுருள் சுருளாக விட்ட புகையில் ஏதோ ஓர் தனி இன்பம் கண்டு கொண்டிருந்தான்.

மழையின் வேகம் சிறிது சிறிதாகத் தணிந்தது. இப்பொழுது சிறு தூறல்கூட இல்லை. வானத்தில் மேகம் கலைந்து போயிருந்தது. இலேசாக மஞ்சள் வெயிலும் காய்ந்தது. உலியன் வண்டியைப் பூட்டி மெதுவாக ஓட்டினான். வண்டி பள்ளத்திலும் மேட்டிலும் 'கடக்' 'முடக்' என்று சத்தமிட்டபடியே சென்று கொண்டிருந்தது.

பூந்தாழை கீழ் வானத்தைப் பார்த்தபடியே வண்டியில் அமர்ந்திருந்தாள். அவள் எதிரே ஒரு வானவில் அழகாகக் காட்சி அளித்தது. அதைக் கண் கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்தாள்.

அவள் எத்தனையோ தடவை வான வில்லைப் பார்த்திருக்கிறாள். ஆனால் இன்று மட்டும் அதில் ஏதோ ஒரு புதுமையைக் கண்டாள். ஏதோ ஓர் அற்புதத்தை, இதற்குமுன் காணாத அதிசயத்தைக் கண்டாள். அதைப் பார்க்கும் பொழுது இதற்கு முன் ஏற்படாத ஒருவித ஆனந்தம் ஏற்படுவதை உணர்ந்தாள்.

சற்று நேரத்தில் வானவில் மங்கி மறைந்து போயிற்று. அதே சமயத்தில் அவள் உள்ளத்திலிருந்தும் ஏதோ ஒன்று இறங்கிப் போவதாகத் தெரிந்தது. "இந்த வானவில் என்றென்றும் ஏன் இப்படியே நிலைத்திருக்கக் கூடாது?"—இப்படி நினைத்தாள் பூந்தாழை.

"என்ன பூவு! ஊர் எல்லை வந்தது தெரியவில்லையா? நீ இறங்கிக் குடையை எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் போ. நான் வண்டியைப் பண்ணையில் கொண்டுபோய் விட்டு விட்டுப் பெட்டியை எடுத்துக் கொண்டு உங்கள் வீட்டுக்கு வரேன்" என்றான்.

பூந்தாழை வண்டியிலிருந்து இறங்கி உலியனை ஒரு தரம் நிமிர்ந்து பார்த்தாள். அவன் முகத்தில் பேரமைதி நிலவியது. அவனிடம் விடைபெற்றுக் கொண்டு தன் வீட்டை நோக்கி நடந்தாள் பூந்தாழை. வீட்டை அடைந்த அவள் உள்ளே யாரோ சில புதியவர்கள் பேசும் அரவம் கேட்டதும் திண்ணையின் ஒரு புறத்தில் மறைந்து நின்று கொண்டாள். அவளுடைய தந்தையின் பேச்சுக் குரல் தெளிவாகக் கேட்டது. உற்றுக் கேட்டாள். "....என் மகளைப் பற்றிக் கவலையே பட வேண்டாங்க! நான் யாரை ஏற்பாடு செய்தாலும் அவளுக்கு மனப்பூர்வமாக மாலை போடுவாள். அவள் யாரையாவது கட்டிக்கணும் என்று நினைச்சிருந்தால் எப்பவோ என்னிடம் சொல்லி இருப்பாளே! அப்படி ஒருத்தனும் கிடையாது. எங்கள் சொந்தக்காரப் பையன் கூட ஒருத்தன் இருக்கான். அவனிடம் அவள் அதிகமாகப் பழக மாட்டாள்...."

அந்தச் சொந்தக்காரப் பையன் உலியன் தான் என்பதைப் பூந்தாழை அறிந்து கொண்டாள். அவளுக்குத் தன் தந்தையின் மேல் கோபம் கோபமாக வந்தது. என்றுமே ஒருத்தர் ஒரே நிலையில் இருப்பதென்பது என்ன நிச்சயம்? இவருக்கு ஏன் அது தெரியவில்லை? இப்படிப் பலவாறு பூந்தாழை எண்

-ணிக் கொண்டிருக்கும் பொழுது உள்ளே இருந்தவர்களெல்லாம் விடைபெற்றுச் சென்று விட்டார்கள்.

இதுதான் சமயமென்று பூந்தாழை வீட்டுக்குள் சென்றாள். மகளைக் கண்ட தந்தை மகிழ்ச்சி பொங்க, "ஏன், அம்மா! இந்தமழையில் எப்படி வந்தே? சாமான் ஒன்றும் வாங்கவில்லையா?" என்று பல கேள்விகளைக் கேட்டார். பூந்தாழை தான் வந்த விதத்தையும் உளியன் செய்த உதவியையும் மிகைப் படுத்திக் கூறினாள்.

தம் மகளின் சாமர்த்தியமான பேச்சைக் கேட்டுத் தந்தை பூரித்துப் போனார். தாயற்ற பெண்ணை வளர்த்து, ஆளாக்கித் தக்க இடத்தில் மணம் முடிக்கப் போகிறோமே என்ற பூரிப்பு வேறு சேர்ந்து கொண்டது. தம் மகள் கள்ளமற்றவள் என்று எண்ணியபடியே அவள் முகத்தைப் பார்த்து, "பத்திரமாய் வந்தவரைக்கும் சரி, நான் பண்ணையார் வீடு வரைக்கும் போய்விட்டு வரேன்" என்று கூறிவிட்டு வெளியே போனார்.

பூந்தாழை விளக்கை ஏற்றி வைத்து விட்டுச் சுவர் ஓரத்தில் உட்கார்ந்தாள். அவள் சிந்தனை பலவாறாகச் சிறகடித்துப் பறந்தது. தந்தையார் தீர்மானமாகத் திருமணத்துக்கு ஏற்பாடு செய்து விட்டார். தம் மகள் பூந்தாழை, யாரையும் நேசிக்கவில்லை என்ற காரணம்தான் அவர் அவளை ஆலோசிக்காமல் ஏற்பாடு செய்தது. அவர் மீதும் தவறு இல்லை. கள்ளமின்றிப் போன பெண் ஒரு காதலை வரித்துக் கொண்டு வருவாள் என்பது அவருக்கு எப்படித் தெரியும்?

பூந்தாழை குழம்பினாள். 'உளியன் மச்சான் வரட்டும், அவரைக் கேட்டே எல்லா யோசனையும் செய்யலாம்' என்று தீர்மானித்தாள். அப்பொழுது பெட்டி சகிதம் உளியன் அங்கே வந்து சேர்ந்தான்.

வரும்பொழுதே, "என்ன உலகம்! சீச்சீ, மகா மோசம்" என்று உலகத்தைச் சபித்துக் கொண்டே வந்தான் உளியன்.

உளியன் இவ்வாறு முணுமுணுத்ததைக் கேட்ட பூந்தாழை, "ஏன் மச்சான்! ஏன் இப்படி உலகத்தைத் திடீரென்று வெறுக்க ஆரம்பிச்சுட்டே?" என்று கேட்டாள்.

"பின்னே என்ன பூவு! இப்படி மழை வருமென்று தெரிந்தும் வண்டியைப் பூட்டுகிறது என்றால் இலேசான காரியமா? அவுங்க அவுங்க கஷ்டம் அனுபவிச்சால்தானே தெரியும்?" என்றான்.

பூந்தாழை, "ஏன் மச்சான்! பண்ணையாரு கோவிச்சுக்கிட்டாரா? என்னாலேதானே மச்சான் நீ டவுனுக்குப் போகாமல் திரும்பி வந்தே?" என்றாள்.

"அப்படி ஒண்ணுமில்லே, பூவு! உன்னிடம் சொல்கிறதைப் பற்றி என்ன! நம்ப கோடி வீட்டுச் செல்லாத்தாள் இருக்காளில்ல...?"

"ஆமாம், ஆமாம். செல்லாத்தாளை எனக்கு நல்லாத் தெரியுமே!..."

"அவளும் இன்றைக்கு டவுனுக்கு வருகிறதாகச் சொன்னாள். முன்னாலே போயி வட்டக் கரையிலே இரு. நான் வண்டியைப் பூட்டிக் கொண்டு பின்னாலே வருகிறதாகச் சொன்னேன். செல்லாத்தாள் வருகிறதாகச் சொன்னதால்தான் மழையைக்கூட லட்சியம் செய்யாமல் வண்டியைப் பூட்டினேன். ஆனால்








சென்ற நவம்பர் 18-ம் தேதி சென்னை தியாகராய நகரிலுள்ள சீக்கியர் ஆலயத்தில் குரு நானக்கின் பிறந்த தின விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ராஜாஜி பிறந்த தின விழாவில் கலந்து கொண்டார். சென்னையிலுள்ள சீக்கியர்கள் ராஜாஜியை அன்புடன் வரவேற்று, அவர்கள் மதசம்பிரதாயப்படி தலையில் பரிவட்டம் சுற்றி உபசரித்தகாட்சியை மேலே காணலாம். இந்த வைபவத்தில் ராஜாஜி பேசிய போது பின்வருமாறு கூறினார்:

''நான் பிறந்துள்ள வைணவ மதத்துக்கும் சீக்கிய மதத்துக்கும் வித்தியாசமே இல்லை. இருவருமே ஒரே ஹரியைத்தான் வழிபடுகிறோம். உங்களுடைய 'கிரந்தசாகிப்பை'த் தமிழில் மொழி பெயர்த்தால் அது தமிழ் மக்களுக்குப் புனித கிரந்தமாக விளங்கும். ஆழ்வார்களின் பாடல்களைப் பஞ்சாபி மொழியில், மொழிபெயர்த்தால் சீக்கியர்களுக்கு ஒரு புனித கிரந்தமாக விளங்கும். ஆனால் நாம் இதுகாறும் எதைப் போற்றி வணங்கிப் பழக்கப்பட்டிருக்கிறோமோ அதையே இப்பொழுதும் போற்றி வணங்கி வருகிறோம்.''

செல்லாத்தாள் மழை வருமென்று எண்ணிப் புறப்படவே இல்லையாம். எப்படி இருக்கிறது நியாயம்....?''

''அது சரி மச்சான்! என்னை வழியிலே நிற்க வைத்து விட்டு நொடியிலே வரேன் என்று கூறி விட்டு வடகரைக்குப் போய் வந்தாயே, அது எதற்காக?''

''அதுவா? நீ மழையிலே நனை வாயே, ஒரு குடையை யாரிடமாவது வாங்கிக் கொடுத்து அனுப்பலாம் என்று எண்ணித்தான் உன்னை நிற்கச் சொன்னேன். ஆனால் வடகரைக்குச் செல்லாத்தாள் வரவில்லை என்று தெரிந்ததும் எனக்கு மட்டும் டவுனுக்குப் போகப் பிடிக்கல்லே. உன்னிடம் சொல்கிறதைப் பற்றி என்ன பூவு! நானும் செல்லாத்தாளும் ஒருத்தர் மேல் ஒருத்தர் ஆசைப் பட்டுட்டோம். இரண்டு பேருமே மணம்புரிந்து கொள்கிறதாக முடிவு செய்திட்டோம். அது வரல்லே என்றதுமே எனக்கு என்னமோபோல் ஆகிவிட்டது.''

''.........''

''ஏம் பூவு, பேசமாட்டேங்கறே?''

''ஒன்னுமில்லே மச்சான்! அப்பாவை எதிரே பார்த்தாயா?.....''

இப்பொழுது பூந்தாழை குரலில் இலேசாக நடுக்கம் இருந்தது.

''மாமாவைத்தானே? பார்த்தேனே? பண்ணையார் வீட்டுக்குப் போகிறதாகச் சொன்னுங்க. உனக்கு அடுத்த மாதக் கடைசியிலே கல்யாணமாம். இன்றைக்குத்தான் நிச்சய தார்த்தம் செய்தாங்களாம். நான் மட்டும் உன் கல்யாணத்துக்கு வர மாட்டேன், பூவு!''

''ஏன் மச்சான் வரமாட்டே?'' என்று அவள் கேட்கவில்லை. கேட்கும் நிலையிலும் அப்பொழுது அவள் இல்லை. உளியனே தொடர்ந்தான்.

''ஏன் என்று கேட்கிறியா? உன் கல்யாணத்துக்கு முன்பே என் கல்யாணம் நடந்திடும். அப்பொழுது நான் மட்டும் எப்படி வரமுடியும்? செல்லாத்தாளும் அல்லவா சேர்ந்து வருவாள்!'' என்று கூறி, அவளிடம் விடைபெற்றுச் சென்று விட்டான்.

உளியன் போன திசையை வெறிக்க வெறிக்கப் பார்த்தாள் பூந்தாழை. அவள் உள்ளத்திலிருந்து ஆழ்ந்த பெருமூச்சு ஒன்று வெளிப்பட்டது. அப்பொழுது அவளுக்கு மாலையில்பார்த்த வானவில்லின் நினைவு வந்தது.

இயற்கையாக வானத்தில் எத்தனையோ வானவில்கள் தோன்றித் தோன்றி மறைந்திருக்கின்றன. இனியும் தோன்றித் தோன்றி மறையும். அதே போல் பூந்தாழையின் வாழ்விலும் ஒரு வானவில், ஆனந்த பரவசமூட்டும் அற்புத வில் தோன்றியது. அதைப் போலவே சற்று நேரத்தில் மறைந்து போயிற்று. ஆனால் இனி அது தோன்றுமென்று கனவுகூடக் காண முடியாது.

# வாட்டர்ப்ரூப், தானாக சாவி கொடுப்பது, டயலில் தேதி காட்டுவது



ஒரு கடிகாரத்தில் நல்ல தோற்றம், நேர்மையான ஓட்டம் இவைகளைத் தவிர மேலும் ஏதாவது நீங்கள் விரும்பினால், டியூடர் பிரின்ஸ் ஆயிஸ்டர்டேட் அல்லது அதன் இணை பிரின்ஸஸ் ஆயிஸ்டர்டேட்டை பாருங்கள். இவற்றின் யந்திரங்கள் ஈரம், தூசி, அழுக்கு, எண்ணெய் புகாமல் சீராகப் பாதுகாப்புடையவை. ரோலெக்ஸ் பேடண்டட், 'ரோட்டர்' யந்திர விசையின்மூலம் தானாக சாவி கொடுத்துக் கொண்டு, நேர்மையாக ஓடும். இருகடிகாரங்களும் டயலில் அன்றாடம் தேதி தெளிவாகக் காட்டுகின்றன. இயல்பாகவே பிரதிதினமும் நள்ளிரவில் தேதி மாறிவிடும்.



R-736

## அவை ரோலெக்ஸ் தயாரிப்புகள்

அதிநுட்பமான நேரங்காட்டும் கடிகாரத் தயாரிப்பில் ரோலெக்ஸ் அடைந்துள்ள அரை நூற்றாண்டு அனுபவத்தைப் பிரதிபலிப்பவை இந்த டியூடர் கடிகாரங்கள். எமது டியூடர் கடிகாரங்களின் எல்லா இனங்களையும் வந்து பாருங்கள். நேரில் வர இயலாதவர்களுக்கு படப் புத்தகம் அனுப்புவோம்.



# டியூடர்

கடிகாரங்கள்
ரோலெக்ஸ் (ஸ்விட்ஸர் லாந்து) தயாரிப்புகள்

அங்கீகாரம் பெற்ற டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

**மெஸர்ஸ் பி. ஆர். & சன்ஸ், பிரைவேட் லிமிடெட்**

**மவுண்ட் ரோடு, மதராஸ்**

ரோலெக்ஸ் வாட்ச் கம்பெனி (ஈஸ்டர்ன்) பிரைவேட் லிட்., பம்பாய்

## 4. பாழ் மண்டபத்திலே!

மார்க்கபந்து தன் வீட்டுக்கு வந்திருந்த மேல் அதிகாரி துரையுடன் அளவளாவிக் கொண்டிருந்தார். ரயில் தண்டவாளங்களுக்கெல்லாம் பீடை என்பதை அந்த வருஷ விசேஷ பலன்கள் எப்படி அறிவிக்கின்றன என்பதைத் துரையிடம் சாங்கோபாங்கமாக அலசிக் கொண்டிருந்தார். துரையும் அதை வெகு சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

ஆவிபொங்கும் காப்பிக்கோப்பை களைக் கையில் வைத்துக் கொண்டு சின்னத்துரை பணிவுடன் அவர்கள் முன்னால் வந்து நின்றான்.

மார்க்கபந்துவின் முகத்திலே அம்மாளின் முகத்தைக் காட்டிலும் இளமை இருந்தது. வாட்டசாட்டமான உடல் அமைப்பு. கட்டுக்குலையாத தோற்றம். மடிப்புக் கலையாத காக்கி உடைகள் அணிந்திருந்தார். தலை மட்டும் முன்புறம் வழுக்கையாக இல்லாவிட்டால் அவரை முப்பது வயதுக்கு மேல் ஒருவரும் மதிக்க மாட்டார்கள். அவர்கள் தட்டுக்களைக் காலியாக்கும் வரை சின்னத்துரை காத்திருந்தான். பிறகு காப்பியைப் பணிவுடன் மேசை மீது வைத்து விட்டுத் திரும்பினான்.

அவன் திரும்பியபோது ஒரு அதிசயம் உள்ளே நிகழ்ந்திருந்தது. திருமதி மார்க்கபந்து அபூர்வமாகக் கட்டிலை விட்டு இறங்கி நடந்து வந்து முற்றத்தைப் பார்த்துக் கொண்டிருந்த தாழ்வாரத்தில் கல்லுரலுக்குப் பக்கமிருந்த மணை



# காதலன்

யில் அமர்ந்திருந்தாள். கீழே முற்றத்தில் அவன் அருகே அந்தரங்கமாகப் பேசும் பாவனையில் இன்னொரு நடுத்தர வயசுப் பெண்மணி உட்கார்ந்திருந்தாள்.

சின்னத்துரை குடியிருக்கும் பகுதிகளில் அந்தப் பெண்மணி இருப்பவள் அல்ல. இதற்கு முன்பு அவன் அவளைப் பார்த்ததில்லை. அண்டை அயலில் ரயில்வே சிப்பந்திகளுக் கென்று இருக்கும் வீடுகளில் இருப்பவளாக இருக்கலாம் என்று சின்னத்துரை ஊகித்துக் கொண்டான். இயல்பாக அவனுக்குப் பிறர் பேசுவதை ஒட்டுக் கேட்கும் வழக்கம் கிடையாது. என்றாலும், குழாயடியில் தட்டுக்கள் கழுவிக் கொண்டிருந்த அவன் செவிகளில் அவர்கள் சம்பாஷணை விழாமல் இருக்கவில்லை. அவர்கள் உரத்துப் பேசவில்லை என்றாலும் கூட, அவனுடைய கவனத்தை அவர்கள் பேச்சு சட்டென்று கவர்வதாகவே இருந்தது.

''ஏதோ சோற்றுக்கில்லாதது பிழைத்துப் போகட்டும் என்றால் இப்படியாம்மா.....?'' என்று அந்தப் பெண்மணி முகத்திலே கையை வைத்துக் கொண்டு அரை குறைக் குரலில், அதாவது பாதி இரகசியமாகவும் பாதி வெளிப்படையாகவும் அதிசயித்தாள்.

'' என்னமோ, அமிர்தம்! வயசுப்பெண்களை வேலைக்கே வைக்கக் கூடாது. இத்தனை நாள் அறியாததாகத்தான் இருந்தது. இப்பத்தான் கொஞ்ச நாட்களாக எனக்



குப் பிடிக்கவில்லே. ஐயா அறையிலே இவளுக்கென்ன வேலே?......''

தெரிந்தும் தெரியாமலும் ஒலித்த அம்மாளின் கீச்சுக்குரல் சின்னத்துரையின் சப்தநாடிகளேயும் அப்படியே நிற்க வைத்தது ஒரு கணம்.

ஐயா அறையிலே இவளுக்கென்ன வேலே..! பானுவா?......

தட்டுக்களேத் தேய்த்துக் கழுவுவது போல் பாசாங்கு செய்து கொண்டு சின்னு அவர்கள் சம்பாஷணேயைக் காதைத் நீட்டிக் கொண்டு மேலும் கவனித்தான்!

''இல்லீங்களாம்மா?.... ஒரு வீட்டிலே வேலேக்கு இருக்கிறோம்; நம்ம வேலே உண்டு, நாம் உண்டுன்னு போக வேண்டாமா? நானே பார்த்துக்கிட்டிருந்திருக்கிறேங்கம்மா! சும்மாத் தலே சீவுகிறதும், சேலேயை இழுத்து விட்டுக் கொள்கிறதுமா இருக்கும். இல்லாட்டி, இந்தக் கொல்லே வாசற்படியிலேயே வந்து நிற்கும்....'' என்முள் அமிர்தம்.

''அதென்னவோ எனக்குக் 'கருக்' என்றது; நிறுத்தி விட்டேன். சனியன்கள்!'' என்று வேப்பங்காயைக் கடித்துத் துப்புவதைப் போல அம்மாள் கூறிமுடித்தாள்.



பளீரென்ற வாள் வீச்சுப்போல் உண்மை புலனயிற்று, சின்னத்துரைக்கு.

....சீச்சீ....!

மா—ப, மா—ப.....! மனசுக்குள் அவன் சொல்லிச் சொல்லிப் பார்த்துக் கொண்டபோது,'மார்க்கபந்து, மார்க்கபந்து' என்று எதிரொலி செய்தது அவன் நெஞ்சுத் துடிப்பு.

அந்த வழுக்கைத் தலேயா 'அன்பே பானு' என்று பானுவை அழைத்திருக்கிறுன்? அவனு தோப்புக்குள்ளிருந்து கடிதம் வீசிக் காதல் புரிபவன்? வேறு எப்படி இருக்கமுடியும்? வீட்டுக்கு அடுத்தாற்போல் மறு புறம் இருந்த கட்டடம் தான் காரியாலயம். ஆட்கள் எவரேனும் அதற்குள் பானு வேலேயிலிருந்து நீக்கப்பட்ட செய்தியைச் சொல்லியிருக்கக் கூடுமல்லவா? அவள் வீட்டை விட்டுப் போய்விடுமுன் எப்படிச் செய்தி தெரிவிப்பது? வேறு பின் எப்படி இருக்க முடியும்? அசட்டுத்தனமாய்ப் போட்டுவிட்டுச் சமாளித்திருக்கிறுன்!

சின்னத்துரையின் மூளே இப்படித் தான் 'விருவிரு' என்று துப்புத் துலக்கியது. கசப்பு என்ணெய் தொண்டையில் உருண்டு மாட்டிக் கொண்டாற் போல் அவன் சிரமப்பட்டான். அந்த வினாடியிலேயே அவன் உள்ளத்தில் அம்மாளின் மீதிருந்த வெறுப்பு சரிந்து, ஐயாவின் மீது மாறியது. அவரிடம் அந்த அற்ப நேரமாக அவன் காட்டிய பணிவும் மரியாதையும் அலட்சியமாக முறுகி அந்த வெறுப்புக்கு நெடி ஏற்றியது. அம்மாளிடம் அநுதாபமும் பரிவும் பிறந்தன. பானுவை நினேத்தாலோ விருப்பும், வெறுப்பும், கசப்பும், இனிப்பும் அநுதாபமும், ஆத்திரமுமாக உள்ளத்திலே மோதிக் கொண்டு வந்தன.

பானு கதாநாயகி. மார்க்கபந்து 'வில்லன்'. வில்லனும் கதாநாயகியும்காதலர்களாக எங்கேயாவது இருக்கமுடியுமா? கதாநாயகனன்றே காதலனக இருந்து, வில்லன் குறுக்கிட வேண்டும்?

கதாநாயகி அவனேயன்றே பேரன்புடன் காதலிக்க வேண்டும்?

அந்தக் கணமே பானுவைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து, ''நீ என்னேக் காதலிக்கிருயா, அந்த வழுக்கைத் தலே அயோக்கியனிடம் காதல்நாடகம் ஆடுவாயா?'' என்று கேட்க வேண்டும்போல் சின்னுவின் உதடுகள் துடித்தன.

அடுப்பில் வைத்த ரஸம் பொங்குவதைப் போல அவன் உள்ளமும் பொங்கி வழிந்தது. சிரமப்பட்டு அவன் அடக்கிக் கொண்டான்.

வேலேகளே அப்போதைக்கு முடித்து விட்டு அவன் அம்மாளிடம் வந்து நின்றுன். இன்னமும் அம்மாள் முற்றக் குறட்டிலேயே உட்கார்ந்திருந்தாள். அமிர்தம் விடைபெற்றுக் கொள்ளாமல் ஏதோ அவசர அழைப்பின்பேரில் வீட்டுக்கு எழுந்து போயிருந்தாள்.

''என்னப்பா? வேலே எல்லாம் ஆகிவிட்டதா?'' என்று வீட்டு அம்மாள் விசாரித்தாள்.

''ஆச்சு: நான் வீட்டிலே சொல்லக்கூட இல்லே ..ஹி.. இப்போது போய்விட்டுக் காலேயிலேயே வந்து விடுகிறேனே?......'' என்று தலேயைச் சொறிந்து கொண்டான் சின்னத்துரை.

''போகிறியா?....தினமும் இரவு இங்கே தங்கணும். இப்படிப் போகக் கூடாதே!...'' என்முள் அம்மாள்.

# பிரகாசமான கண்ணைக்கூசாத வெளிச்சத்திற்கு...

ஆர்ஜெண்டா உங்களுடைய கண்களுக்கேற்றது. ஏனெனில் இதன் உட்புறம் ஸிலிகாவினால் பூசப்பட்டுள்ளதால் வெண்மை நிறத்துடன் ஒரே பிரகாசமாக எரிந்து, கண்களுக்குக் கூசாத, மிருதுவான வெளிச்சத்தைத் தருகின்றன.

இந்த பல்புகள் எரியாமல் இருக்கும்பொழுதுகூட நீங்கள் இதை பார்த்தவுடன் ஆர்ஜெண்டா பல்பு என்று தெரிந்து கொள்வீர்கள். ஏனெனில் ஆர்ஜெண்டா பல்புகள் வெண்மை நிறத்துடன் பார்ப்பதற்கு வசீகரமாக இருக்கின்றன.





## பிலிப்ஸ் ஆர்ஜெண்டா

என்று கேளுங்கள்

கண்ணைக்கூசாத பல்பு



எல்லா சோதனைகளிலும்
தேர்ச்சி பெற்ற
ஆதர்ச டூத் பிரஷ்
இன்றே வாங்குங்கள்-
அதன் குணாங்
களை தெரிந்து
கொள்ளுங்கள்




எல்லா
கடைகளிலும்
கிடைக்கும்

இந்தியாவிலேயே மிக்க
அனுபவம் வாய்ந்த டூத் பிரஷ்
தயாரிப்பாளர்கள்

---

சுலேகா

பேனாக்கள்

திருப்திகரமான
சேவைக்கு




*Sole Distributors :*

PENMAN'S INDUSTRIAL
SERVICES

KANDIVLI, BOMBAY (S. D.)

---



இருமலை

நிறுத்த

பெப்ஸ்

உபயோகியுங்கள்

ஜலதோஷம், இருமல், தொண்டைப்புண் பிராங்கைடிஸ், இன்ப்ளுயன்ஸா இவைகள் அபாயத்திற்கிடமான உபாதைகள். பெப்ஸ் மூலம் சுவாச அடைசலை அகற்றுங்கள். பெப்ஸிலுள்ள குணமளிக்கும், மருந்து சத்துகள், இருமலை உடனே நிறுத்தி, ரணத்தை ஆற்றுகின்றன. மேலும் தீங்கிழைக்கும் கிருமிகளை நாசம் செய்து, உங்கள் சுவாசப்பைகள், தொண்டை இவைகளுக்கு இதமளிக்கின்றன. டாக்டர்கள் பெப்ஸை சிபாரிசு செய்கின்றனர். குழந்தைகளும், வயோதிகர்களும் உபயோகிக்கலாம். தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதில் இல்லை.

PEPS




பெப்ஸ் தொண்டை
மார்பு உபாதைகளுக்கு
சமனமூட்டும் வில்லைகள்.

FPY-43-TAM

---

சோல் ஏஜண்டுகள் :

தாதா அண்டு கம்பெனி

86, லைனியப்ப நாயக் தெரு, சென்னை-3

'' அதெல்லாம் இல்லே; இன்றைக்குப் பாருங்கள், நான் ஏதோ விசாரித்துப் போகலாமென்றுதான் வந்தேன். காலே யிலே 'டாண்'ணு விடியும்போது வந்துடுவேன். இப்பொழுது....எனக்கு ஒரு காரியமா அசலூருக்குப் போகவேண்டி யிருக்கிறது...'' என்று ஒரு பொய்யை நழுவ விட்டான். பானு அவன் வீட்டுக்குத் தானே போயிருக்கப் போகிருள்? வேறு அவளுக்கு வீடேது? அவள் பாட்டி இருந்த வீடுதான் குட்டிச்சுவராக இடிந்து கிடக்கிறதே? உடனே போய் அவளைப் பார்க்க வேண்டும்; எல்லாம் தெளிவாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆத்திரம்தான் அவனுக்கு.

''சரி, போ, காலேயில் வந்துவிடு..''

சின்னத்துரை தலையைச் சுழற்றி ஆட்டிவிட்டு முற்றத்தில் தெருப்பக்கம் இருந்த வாசல் வழியாகவே நடந்தான்.

யோசிக்க யோசிக்க அவனுக்கே புரியவில்லே. பள்ளிக்கூட நாட்களில் கூட்டு வட்டிக் கணக்கைப் போடக்கூட அவன் மூளே இத்தனை குழம்பியது இல்லே. மேலும் அந்தக் குழப்பத்திலே சோர்வும் அலுப்புமே உண்டாகும். காவேரியின் குதித்து ஆனந்தமாகத் துளே வதையோ, ஜோராகச் சினிமா பார்க்கப் போவதையோ நினைத்துக் கொண்டால் அந்தக் குழப்பம் அந்தப் புரியாத வட்டிச்சனியன்களுடன் அவன் மூளையை விட்டே மறைந்துபோகும். இப்போதோ புதுவிதமான குழப்பமாக இருந்தது. ஏதோ ஒன்று நெஞ்சினின்றும் எழும்பி வந்து அவன் மூளையைப் பேயாட்டம் ஆட்டி விட்டாற் போலிருந்தது. வட்டிக் கணக்கைப் போல் அவள் எப்படிப் போனல் என்ன என்று எண்ணி விடவே அவனல் முடியவில்லே.

விடுவிடென்று வீட்டுப் பக்கம் வந்த அவனுக்கு ஒரே ஏமாற்றம். வாயிற் கதவைப் பூட்டிக் கொண்டு அவனுடைய அம்மா மடத்தில் புராணம் கேட்கப் போயிருந்தாள். பானு அங்கு வந்ததாகவே தெரியவில்லே. தெருக் கோடிக் குட்டிச் சுவர்ப் பக்கம் சொந்த இடமென்று பானு குடித்தனம் செய்யப் போய் விட்டாளோ என்று அங்கும் போய்ப் பார்த்தான். வாசல் மண் திண்ணேயில் இருந்த புழுதி அகத்தமெல்லாம் கூட்டிச் சுத்தம் செய்யப்பட்டிருந்தது. ஆனல் ஒட்டைக் கதவிலே பழைய பூட்டும் தொங்கியது. சின்னத்துரை தெருவிலிருந்து திரும்பி நடந்தான்.

ஏழைப் பெண்தான். அவனுக்கும் அவளுக்கும்தான் ஜோடி, பொருத்தம். உத்தியோகமும் காசுச் செருக்கும் அவளைப் பலி வாங்க அவன் இடம்




காட்டுப்புற சேவகனி:- என்னய்யா, உங்க கிட்டே இருபதாம் நம்பர் நூல் இருக்குதா?

கொடுப்பதாவது? அவளைப் போல ஒரு அழகான பெண் போயும் போயும் ஒரு வழுக்கை மண்டையை எப்படிக் காதலிக்க முடியும்?

'அன்பே பானுவாம்! இனிச் சந்திக்கும் இடம் ஆற்றங்கரைப் பாழ் மண்டபம், தினம் வந்து போவேன்' என்று வெட்கமில்லாமல் தெரிவிக்கிருனே?... அயோக்கியன்!

விடுவிடென்று நடந்து சின்னத்துரை ரயில் பாதையோடு செல்லும் சாலேக்கு வந்து விட்டான். இடதுபுறம் காவேரியின் உயர்ந்த கரை. வலது புறம் ரயில் பாதைக்கப்பால் தென்னந் தோப்புக்களும் வெற்றிலேக் கொடிக்காலும் நெல் வயல்களுமாக நீளப் பசுமை கொழிக்கும் காட்சி. இன்னும் தூரப் போகப் போகக் காவேரிக்கும் ரயில் பாதைக்கும் இடையே உள்ள இடை வெளி அகன்று ரயில் பாதை தொலேவுக்குப் போய் விடும். அந்த இடை வெளியில் இருந்த கப்பிச்சாலேயும் ரயில் பாதையுடன் ஜோடியாக வளேயும். திருச்சி பஸ் செல்லும் சாலே அது. இருட்டும் வேளே சமீபித்து விட்டது. அந்திக் கன்னியின் மின்னும் பட்டாடையிலே ஆடும் வெண் மலர் மாலேயைப் போல வானிலே ஒரு நாரைக் கூட்டம் வரிசையாகப் பறந்து சென்றது. அண்ணந்து பார்த்த சின்னத்துரை பின்னல் சாலேயில் பஸ் வரும் ஒலி கேட்டு ஒதுங்கி நின்ருன். நீலகிரியிலிருந்து வரும் பஸ் அது. மணி ஆறரை

இருக்கும். பானு எங்கே போயிருப்பாள்? விர்ரென்று பஸ் அவனைக் கடந்து போயிற்று. அவனும் ஆற்றங்கரையோடு நடந்தான். படித்துறைக்குச் சமீபம் வந்த போது அவன் நெஞ்சு துடிக்கும் சந்தர்ப்பம் நேர்ந்தது.

பானு இடுப்பிலே குடத்துடன் காவேரி மேட்டிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தாள். கிணற்றுச் சுவரிலே எண்ணற்ற தடவைகள் இடிபட்டு இடிபட்டு நசுங்கிப் பிதுங்கிய செப்புக் குடம் அவள் இடுப்பிலே வீற்றிருந்தது.



எத்தனை நாட்களாகவோ அந்தக் குடத்துடன் தோழமை பூண்டிருந்த பச்சைப் புள்ளிகளை ஒரளவு அகற்ற முயன்று அதில் அவள் வெற்றியும் பெற்றிருந்தாள் என்று சொல்ல வேண்டும்.

'இந்த வேளையிலே இந்தப் படித்துறைக்கு அவள் ஏன் காவேரித் தண்ணீர் எடுக்க வருகிறாள்? கடிதம் தன் கையில் அகப்பட்டதாகக் காட்டிக் கொள்வதா? காட்டிக் கொள்ளாமல் மெதுவாகப் பேச்சுக் கொடுத்து உளவறிந்து கொள்ளலாமா?'

சின்னத்துரை கேள்விகளுடன் நிணறித் திண்டாட அவள் இடம் வைக்கவில்லை. அவனைப் பார்த்துவிட்டு ஏதோ புதுமையைக் கண்டாற் போல் அவள் சிரித்தாள். அந்தச்சிரிப்புஅவன்நெஞ்சை எப்படிக் கிளுகிளுக்க வைத்தது?

"ஓ? அதற்குள்ளாகவா வேலையை விட்டு விட்டீர்கள்?" என்றாள் பானு.

"ஏன்? நான் ஏன் வேலையை விடுகிறேன்?" என்றான் சின்னத்துரை.

அவள் அப்படி ஏன் கேட்டாள் என்று அவனுக்குப் புரியவில்லை.

"இல்லை, மாமி போகச் சொல்லி விட்டார்களோ என்று பார்த்தேன்!" என்றாள் அவள்.

"மாமி என்னை எதற்குப் போகச் சொல்லுகிறார்கள்? நான் என்ன? யாருக்கேனும்...." விடுவிடென்று பதிலளிக்க எடுத்தவன் சட்டென்று தன் நாவைக் கடித்துக் கொண்டான். ஆனால் அவள் விடவில்லை.

"ம்? யாருக்கேனும்?...." என்றாள் விற்புருவங்களைச் சுளித்துக் கொண்டு.

"அதிருக்கட்டும், படுகைப் பக்கம் பாழ் மண்டபத்திலே...."

சின்னத்துரை அவள் முக மண்டலத்தில் சட்டென்று நிழலோடி மாறுவதைக் கவனித்தான்.

"என்ன அந்த மண்டபத்திலே?...." என்று கேட்டவளுக்குக் குரல் இலேசாக நடுநடுங்கியது. சின்னத்துரைக்கு முன்பு அடக்கிக் கொண்ட சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது.

(தொடரும்)

## "கல்கி" டிஸம்பர் மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் "கல்கி"யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விடவேண்டும்.

கதைகளைத் திரும்பப் பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும், குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

போதிய தபால் தலைகளுடன் கூடிய தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைப் பரிசுக் கதை வெளியான பிறகு திருப்பி அனுப்பி விடுகிறோம்.


LUX

கேள்வியின் கடிதம்

# சிக்கனங்கள் பலவிதம்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

பெண்கள் எப்பொழுதும் தாராளமாகச் செலவு செய்கிறார்கள் என்று ஆண்கள் குற்றம் சாட்டுவதைப் பற்றி எழுதியிருக்கிறாய். அதற்காக நாம் குறைப்பட வேண்டாம். அவர்களுக்குப் பாவம், பூசணிக்காய் பறி போவது தெரியாது. கடுகு காணுமென்று கணக்குப் பார்ப்பார்கள்! கறிகாய் பிஞ்சாக இருக்கிறதென்று அரையணு கூடக் கொடுத்தால் கோபிப்பார்கள். அவர்கள் உபயோகமற்ற சாமான்களை அதிக விலை கொடுத்து வாங்குவார்கள். ஒருவேளை அவர்களைக் காப்பி போடச் சொல்லிப் பார்த்தால், ஒரு வாரத்துக்கு ஆகும் காப்பிப் பொடி, சர்க்கரை எல்லாம் ஒரு வேளையில் தீர்ந்துவிடும்.

பொருள் சிக்கனம் எவ்வளவு அவசியமோ அதைவிடப் பேச்சுச் சிக்கனம் அவசியமானது. வேடிக்கையான சில பேச்சுக்கள் வினையாக முடிந்து விடும். தினமும் நாம் ஒருவரிடம் தமாஷாகப் பேசுவதை ரஸித்துக் கொண்டிருப்பார்கள். ஒருநாள் குற்றமாகி விடும். அன்று அவர்கள் உடல் நிலை சரியில்லாமல் இருக்கும்; அல்லது வேறு விஷயங்களில் மனம் பாதிக்கப்பட்டிருக்கும்; பசியாக இருந்திருப்பார்கள். இவைகளையெல்லாம் அறியாமல் விளையாட்டாகப் பேசினால் விபரீதம்தான்.

நாம் அடிக்கடி ஒருவரை ஒருவர் சந்தித்துப் பேசுவது ரஸமாக இருக்க வேண்டுமெனக் கருதுகிறோம். எனவே பிறருடைய வாழ்க்கையில் நடந்த கேலிக்கு இடமான சில சம்பவங்களை வர்ணித்து வந்தவர்களிடம் பேசி விடுகிறோம். நாம் சொல்லும் விஷயத்தை அவர்களிடம் சொல்ல மாட்டார்களென்று வேறு நினைத்து விடுகிறோம். இது அநேகமாக எல்லாரும் செய்யும் தவறு. மனித சுபாவம் உடனே சொல்லும்படி தூண்டுவது மட்டுமல்ல, இன்னும் கூட்டி அலங்கரித்துக்கூடச் சொல்லத் தோன்றும். ஒருவரைப் பற்றி இன்னொருவரிடம் சொல்லாமல் இருப்பவர்கள் ஞானிகளாக, மகான்களாகத்தான் இருக்க வேண்டும். அல்லது மேதைகளாக இருக்க வேண்டும். இவர்களின்றிச் சாதாரணமாகப் பழகுபவர்களிடம் கொஞ்சம் சிக்கனமாகவே பேசிப் பழகுவோமே. அல்லது நல்லதை மட்டும் பேசுவோம்.



இவைகளெல்லாவற்றையும் விட, அவகாசத்தை, பொன்னான நேரத்தைச் சிக்கனமாக உபயோகிப்பது நல்லதல்லவா? வம்புப் பேச்சு, சோம்பல், தூக்கம் இவைகளில் பொழுதைச் செலவு செய்வது விரயம்தானே. இன்றியமையாத பொழுதை நல்ல உபயோகத்துக்கு நமக்கோ, பிறருக்கோ நன்மை பயக்கும் அளவில் திறமையாக உபயோகித்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

தற்காலத்து மாணவ, மாணவிகளுக்கு நோட்டுப் புத்தகங்கள் உபயோகிக்கச் சிக்கன முறை தேவை. என்றூரும் பெண்கள் கழுத்து வரை நோட்டுப் புத்தகங்களை அடுக்கிக் கொண்டு போகும் காட்சி, பெற்றோர்கள் அதற்காகச் செலவு செய்யும் பெருந் தொகையை எடுத்துக் காட்டி, கவலைப்படும்படி இருக்கிறது.

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் படிக்க வேண்டும் என்பதற்காக எவ்வளவு சிரமப்பட்டுப் படிக்க வைக்கிறார்கள்? சிலர் தங்கள் வருவாய்க்கு மிதமிஞ்சியே குழந்தைகளின் படிப்புக்காகச் செலவழிக்கிறார்கள். சிலர் கடன் பட்டும் குழந்தைகளைப் படிக்க வைக்கிறார்கள். இவைகளெல்லாம் நன்கு தெரிந்து கொண்ட பிறகாவது மாணவ மாணவிகள் நோட்டுப் புத்தகங்களைச் சிக்கனமாக உபயோகிக்க முன் வருவார்களா?

**கா**ந்திஜி ஒரு பக்கம் எழுதியிருக்கும் காகிதங்களைச் சேர்த்து வைத்திருப்பாராம். அடிக்கடி மௌன விரதம் இருக்கும்போது பிறருடன் பேச வேண்டிய முக்கிய விஷயத்தை எழுதிக் காட்ட அவைகளை உபயோகிப்பாராம். கடிதங்களில் குண்டூசி இருந்தால் அதைச் சேமித்து வைப்பதும் அவர் வழக்கம்.

இதே போல்தான் துணிமணிகள் விஷயத்திலும். தேவைக்கும் மேலே வீண் ஆடம்பரமாக எடுத்து, அவசியம் இல்லாத வேளைகளில் உடுத்திக் கொள்ளுதல் கூடாது.

சிலர் திறந்த குழாயை மூடுவதேயில்லை. இதனால் குழாய்த் தண்ணீர் குறைவாக வரும் இடங்களில் இன்னும் தண்ணீர் குறைந்து போகுமே! சில பிரதேசங்களில் குடி தண்ணீரைப் பசும் பாலைப் போல் விலை கொடுத்து வாங்குகிறார்கள் என்பதும் நம் சிந்தையில் கொள்ள வேண்டும்.

சோம்பலினாலும் அஜாக்கிரதையினாலும் ஏற்படும் சிறிய தவறுகளை நீக்கினால் எவ்வளவோ செலவை மிச்சப்படுத்தலாம்!

ஒரு சிநேகிதி வீட்டுக்குப் போயிருந்தேன். வீட்டில் முன் பக்கம் ஒருவருமில்லை. சிநேகிதி குடும்பத்துடன் கடற்கரைக்குப் போயிருந்தாள். வேலைக்காரி மட்டும் இருந்தாள். நான் முன் கூடத்தில் காலை வைத்ததும், "இருண்ட மாலை நேரத்தில் இந்தக் காரிகை வருவதேன்?" என்ற குரல் கேட்டது. எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

பிறகு கவனித்தால், ரேடியோவில் நாடகம் நடக்கிறது என்பதை அறிந்தேன். சிநேகிதி காலையில் திறக்கும் ரேடியோவை இரவுதான் மூடுவது வழக்கம். கேட்பது கூட முக்கியமில்லை என்று வேலைக்காரி சொல்ல அறிந்து கொண்டேன்.

இப்படிக்கு,
பூமாதேவி

# பால் குடிக்கும் நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்

சீக்கிரம் மறுதடவை எனக்கு ருசி வாய்ந்த க்ளாக்ஸோ கொடுக்கும் வேளை வந்துவிடும். அதை எவ்வளவு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன் தெரியுமா! க்ளாக்ஸோ பரிசுத்தமான பால்-உணவு. குழந்தைகளின் எலும்புகளும் பற்களும் உறுதியாய் வளர விடமின்-டியும், இரத்தம் வளம்பெற இரும்புச்சத்தும் இதில் அடங்கியுள்ளன. என் நல்ல காலம் எங்கம்மா எனக்கு க்ளாக்ஸோவையே கொடுக்கிறாள். என் பெருமையை நானே சொல்லிக்கொள்ளக் கூடாது-என்றாலும், என்னால் ஒருவருக்கும் தொந்தரவு கிடையாது. நான் மிகவும் சந்தோஷமாயும் திருப்தியாயுமிருக்கிறேன். சிறந்த பால்-உணவாகிய க்ளாக்ஸோ எனக்கு புகட்டி என்னை ஒழுங்காக பேணி வளர்த்ததே இதற்குக் காரணம்.

நான் சிபாரிசு செய்வது க்ளாக்ஸோ

**Glaxo**

குழந்தைகளின் பரிசுத்தமான
பால் உணவு




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (பிரைவேட்) லிட்., பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • புது டில்லி



# செல்லக் குழந்தை

டிப்டி கலெக்டர் ராமகிருஷ்ணன் மனைவிக்கு எறும்பு என்றால் பிடிக்காது. கண்டால் நசுக்கி விடுவாள்.

"அம்மா! எறும்பைக் கொல்லலாமோ?" என்றான் குப்பு.

"கடிக்கிற எறும்பைக் கொல்லலாம்" என்று சமாதானம் சொன்னாள் அவன் தாயார். குப்புவுக்கு முன் பிறந்த மூன்று குழந்தைகள் பிறந்து பிறந்து இறந்து போயின. அதனால் குப்பு ரொம்பச் செல்லமாக வளர்ந்த குழந்தை. குப்பு என்று பெயர் வைத்ததற்குக் காரணம் சொல்லுகிறேன். ஒரு வீட்டில் குழந்தைகள் பிறந்து பிறந்து செத்துப் போனால், பிறகு தங்களுக்கு வேண்டாம் என்று பிறந்த குழந்தையைக் குப்பையில் போடுகிற மாதிரி போட்டு எடுத்துக் கொள்வார்கள். இதை ஒரு சடங்காகச் செய்வார்கள். அப்படிச் செய்தால் யமன் ஏமாந்து போவான். வேண்டாம் என்று தள்ளி விட்ட குழந்தையிடம் அவன் வரமாட்டான் என்று பெற்றோர்கள் முன்னாளில் இப்படிச் செய்து வந்தார்கள். அப்படிக் குப்பையில் போட்டு எடுத்த குழந்தைக்குக் 'குப்பன்' என்று பெயரும் வைப்பார்கள். இப்படித்தான் நம் டிப்டி கலெக்டர் ராமகிருஷ்ணன் குழந்தைக்குக் குப்பு என்று பெயர் வைத்தார்கள்.

கடித்தால் கொல்லலாம் என்று தாயார் சொன்ன தருமத்தைக் குப்பு ஒப்புக் கொண்டு விளையாடப் போய் விட்டான்.

"என் குழந்தைகளை யாரோ கொன்று வருகிறார்கள். போனவர்கள் திரும்பி வருவ இல்லை. இதை விசாரியுங்கள்" என்று தாய் எறும்பு தன் துப்பறியும் எறும்புகளை வெளியே அனுப்பிற்று.

பாழியினின்று அந்த எறும்புகள் தம்முடைய குல நாற்றத்தை மோந்து கொண்டே இங்குமங்கும் சென்றன. கடைசியில் டிப்டி கலெக்டர் வீட்டில் தான் தம்பிகள் மாண்டார்கள் என்று கண்டு கொண்டன. யார் கொன்றது என்றும் கண்டு கொண்டு விட்டன. எல்லாம் மோந்து மோந்து தெரிந்து கொண்டன. திரும்பிப் போய்த் தாய் எறும்புக்குத் தெரியப்படுத்தின.

"அப்பா! எறும்பைக் கொல்லலாமா?" என்று குப்பு தகப்பனாரைக் கேட்டான். அவனுக்கு மறுபடியும் சந்தேகம் வந்து விட்டது.

"நீ கொல்லக்கூடாது. சேவகனுக்குச் சொன்னால் அவன் கொன்று விடுவான்" என்றார் அவர்.

"கொன்றால் பாவமில்லையா?" என்றான்.

"சேவகன் கொன்றால் நாம் சொல்லித் தானே கொல்லுகிறான். அவனுக்குப் பாவமில்லை" என்றார்.






# ராஜாஜி



"நமக்குப் பாவமா?" என்றான் பையன்.

"நாம் கொல்லவில்லையே! நமக்கு ஏது பாவம்?" என்றார் டிப்டி கலெக்டர்.

"நாம் சொல்லித் தானே–" என்று பையன் என்னவோ சொல்ல ஆரம்பித்தான்.

"சரி, நீ போய் அம்மாவைச் சமையல் ஆச்சா, கேட்டு விட்டுவா" என்று அனுப்பி விட்டார்.

தாயெறும்பு பக்கத்துப் பாழியிலிருந்த தன் நண்பன் நாகப் பாம்பிடம் அழுதது.

"என் மக்களை இந்த சுப்பம்மாள் வதம் செய்தாளே. நீதான் அவளைத் தண்டிக்க வேண்டும்" என்றது.

"சரி, பார்க்கிறேன்" என்று சொல்லி விட்டுப் பாம்பு புறப்பட்டது.

ராமகிருஷ்ணன் வீட்டுப் புழக்கடையில் ஒரு பொந்தில் பதுங்கியிருந்தது.

"அம்மா! பாம்பு கடித்தால் செத்துப் போவோம் என்கிறானே வேலு: அது உண்மையா?" என்றான் குப்பு.

"செத்துப் போகிற பேச்செல்லாம் யார் உனக்குச் சொன்னது? பாம்பு நம்மைக் கடிக்காது" என்றாள்.

"கடித்தால்?" என்றான் குப்பு.

"அது விஷம். பாம்பு யாரையாவது கடித்தால் செத்துத்தான் போவான். பாம்பண்டை போகலாகாது" என்றாள் சுப்பம்மா.

"அம்மா! நம் வீட்டில் பாம்பு இருக்கிறதாமே!" என்றான் குப்பு.

"யார் உனக்குச் சொன்னது? வேலுவா?" என்றாள்.

"இல்லையம்மா. பக்கத்து வீட்டு சேஷு சொன்னான். அவன் பார்த்தானாம்" என்றான் குப்பு.

"சேஷு குறும்புப் பயல்! நீ போய் விளையாடு" என்றாள் சுப்பம்மா.

அன்று ராத்திரி சுப்பம்மா கனவு கண்டாள். தன் ஒரே குழந்தை குப்புவைப் பாம்பு கடித்து விட்டதாகவும், அவன் செத்துப் போனதாகவும் கனாக் கண்டாள். "ஓ" என்று கத்திக் கொண்டு எழுந்தாள். "என்ன? என்ன?" என்றார் ராமகிருஷ்ணன்.

"கெட்ட கனவு ஒன்று கண்டேன்" என்று சுப்பம்மா அதைப் புருஷனிடம் சொன்னாள். அடுத்த காலை எழுந்து கோயிலுக்குப் போய்ப் பிரார்த்தனை செய்து பிரசாதத்துடன் திரும்பி வந்தாள். பகல் முழுதும் பயந்து கொண்டே கழித்தாள். மிக வேதனைப் பட்டாள்.

பதுங்கியிருந்த பாம்பு நல்ல பாம்பு. சுப்பம்மா சங்கடப்பட்டதைப் பார்த்தது. 'மகன் இறந்த வேதனையை இவள் முழுதும் அனுபவித்து விட்டாள். போதும் இந்தப் படிப்பு. தவிர அடுத்த ஜென்மத்தில் இவள் ஒரு தாய் எறும்பாகப் பிறக்கப் போகிறாள். தன் மக்களையும் இழப்பாள்' என்று பாம்பு திரும்பிப் போய் விட்டது.



"எனக்கு அந்தப் பையனைக் கடிக்க மனம் வரவில்லை, அக்கா!" என்று தாய் எறும்பிடம் பாம்பு சொல்லிற்று. காரணத்தையும் சொல்லிற்று.

"அப்படியானால் என் எறும்புகளே போய் ஏதாவது செய்ய வேண்டும். நன்றாகக் கடித்தால்தான் என்னுடைய துக்கம் ஓரளவு தணியும்" என்றது எறும்பு.

தன் க்ஷத்திரியக் கூட்டத்தை அனுப்பிற்று. எறும்புகளில் ஒவ்வொரு காரியத்துக்கு ஒவ்வொரு தனிக் கூட்டம் உண்டு.

"அம்மா! ராத்திரி எறும்பு ரொம்பக் கடித்துவிட்டது" என்றான் குப்பு. குழந்தையின் முகம் நன்றாக வீங்கிப் போயிருந்தது.

"ஐயோ பாவம்!" என்று தேங்காய் எண்ணெய் தடவி, "போகட்டும், நான் கண்ட கனவு இத்துடன் போகட்டும்!" என்று மறுபடியும் கோயிலுக்குப் போய்க் கணேசனுக்குத் தேங்காய் உடைத்தாள்.

அதன் பிறகு சுப்பம்மா எறும்பைக் கொன்றதில்லை. வெல்லம், நெய் பதார்த்தங்கள் எறும்புக்குச் சிக்காமல் மூடிச் சரியாகப் பத்திரப்படுத்தி வைப்பாள். வீட்டைச் சுத்தமாகவும் வைக்க ஏற்பாடு செய்தாள். எறும்புகளும் வரவில்லை.





# குழலோசை

குழலோசை கேட்டாயோ கிளியே — ஒரு

மழலை கூறவும் மறுக்கின்றாய்
விழிசோர்ந்திடக் கண்ணீர் உகுக்கின்றாய் — இந்த
ஏழையை ஏனோ வெறுக்கின்றாய் ?

தங்கக் கூண்டை விரும்பாயோ — அந்தத்
தாமரைக் கண்ணனை அறியாயோ
பேதை மங்கையருள்ளக் கள்வனவன் — இங்கு
மையல் தந்துபின் மறைந்திடுவான் — அடி
பைங்கிளியே உன் பவளவாய் திறந்தவன்
பெயர் ஒருதரம் கூறாயோ ? (குழலோசை)



பாலர் தொடர்கதை

# ஊமை ராஜா

துரோணன்

## 15. திக்குத் தெரியாத காட்டில்!

பெரியவர் விஜயனை நெருக்கமான மரங்களினிடையில் ஓடைகளாலும், தழைகளாலும் மூடப்பட்டிருந்த ஒரு சிறு குடிசைக்கு அழைத்துச் சென்றார். அதனுள் அநேக ஓலைச்சுவடிகளும், சிற்சில மண் பாண்டங்களும் இருந்தன. விஜயன் அவைகளைக் கண்டதும் ஆச்சரிய மடைந்தான். பெரியவர் அவனை உட்காரும்படி கூறி விட்டு, அவனது வலது கரத்திலிருந்த ரேகைகளை ஆராயத் தொடங்கினார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் தலை நிமிர்ந்து, "என்னைத் தெரிகிறதா உனக்கு?" என்றார் சைகைகளுடன். அவரது கேள்வியின் பொருள் புரியாமல் அவன் விழித்தான். அவன் முதுகில் அவர் மீண்டும் தட்டிக் கொடுத்தார். பின்னர், அவனுடைய மடியில் இருந்த சாயக்கட்டிகளில் ஒன்றை வாங்கிக் கொண்டு தரையில் எழுதிக் காண்பித்தார். "நீ இன்னும் ஏழு தினங்கள் என்னுடனேயே இருக்க வேண்டும்" என்று அதில் இருந்தது.

விஜயனுக்கு அவரது வேண்டுகோள் மிகவும் ஆச்சரியத்தையும், மகிழ்ச்சியையும் அளித்தது. அவன் பரபரப்புடன் சாயக்கட்டியை எடுத்து, "சுவாமி! ஏழு தினங்கள் என்ன? ஏழு ஜென்மங்கள் வேண்டுமானாலும் தங்களுடன் இருந்து விடுகிறேன்" என்று பதில் எழுதினான்.

பெரியவர் சந்தோஷம் கொண்ட முகத்துடன் எழுந்து நின்றுகொண்டு, அவனைப் படுத்துக் கொள்ளுமாறு கூறி விட்டு வெளியே சென்றார். வெய்யிலின் வேட்கையினாலும், நடந்து வந்த களைப்பினாலும் விஜயன் மெய்ம் மறந்து உறங்கி விட்டான்.

வெகு நேரத்துக்குப் பின் அவன் கண் விழித்தபோது, பெரியவர் அவன் சமீபத்திலேயே உட்கார்ந்திருப்பதை அறிந்தான். அவருடைய கையில் ஒரு மண் கலம் இருந்தது. அதற்குள்ளிருந்த திரவ பதார்த்தத்தை, அவர் விரலினால் கலக்கிக் கொண்டிருந்தார். பின்னர் அவனை அணுகி அதை அருந்துமாறு அவனிடம் கொடுத்தார். அதில் பச்சைப் பசேல் என்ற இலையின் சாறு நுரையுடன் இருந்தது.

கையிலிருந்த மண் பாத்திரத்தையும் பெரியவரின் முகத்தையும் அவன் மாறி மாறிப் பார்த்தான். அது அவனுக்கு விளங்காப் புதிராக இருந்தது. மீண்டும் அவர் அவனைத் துரிதப்படுத்தவும் அவன் தன்



கண்களை இறுக மூடிக் கொண்டு வெறுப்புடன் வாய்க்குள் விட்டுக் கொண்டான்.

'அட கடவுளே! தண்டனைகளில் இப்படி ஒரு ரகமா? எட்டிக்காயை விடக் கசப்பான இந்தப் பச்சிலைச் சாற்றினால் அவனை இவர் என்ன செய்யப் போகிறார்?'

வாயிலிருந்ததை விழுங்கவும் முடியாமல் வெளியே உமியவும் மாட்டாமல் விஜயன் திண்டாடித் தவித்தான். அவன் வயிற்றின் அடிவாரத்திலிருந்து பெரும் குமட்டல்கள் கிளம்பின.

* * *

இளைய ராஜகுமாரனான விமலனைப் பற்றி இதுவரை கூறவே யில்லையல்லவா? அவனைத் தொடர்ந்து செல்லுவோம்.

தாயின் துர் எண்ணங்களை ஒருவாறு அறிந்த விமலனுக்கு அவள் மீது கடுங் கோபம் உண்டாயிற்று. அவள் கூப்பிட்டதைக்கூட லட்சியம் செய்யாமலே அவன் வேகமாக வெளியே வந்து விட்டான். எங்கே போய் அண்ணனைத் தேடுவது என்று அவனுக்கு விளங்கவே யில்லை. தேடி விட்டு வந்திருந்த சேவகர்களையெல்லாம் விசாரித்தான். அவனுக்குச் சரியான விவரங்கள் கிடைக்க வில்லை எப்படியும் அவன் காட்டுக்குள்ளேயேதான் இருப்பான் என்று அவனுக்குத் தோன்றியது. அவனுக்கு எத்தகைய தீங்கும் நேராமல் காப்பாற்ற வேண்டும் என்று கடவுளை வேண்டினான். பின்னர், தன் தந்தையிடம் சென்று, அவருடைய மனத்தையும் ஆராய வேண்டுமென்று அவனுக்கு ஆவல் உண்டாயிற்று. ஆகவே அவன், அரசர் இருக்கும் தனிமையான அறைக்குச் சென்றான்.

அங்கே விக்கிராந்த பூபதி மிகக் கவலையுடன் உட்கார்ந்திருந்தார். விமலனைக் கண்டதும் அவர் வழக்கம் போல் முக மலர்ச்சியுடன் வரவேற்கவில்லை. "அப்பா! அண்ணாவைப்பற்றி ஒரு தகவலும் கிடைக்க வில்லையா?" என்று விமலன் கேட்டான். அவர் மௌனமாகத் தலையசைத்தார்.



"அப்பா! நான் போய் வருகிறேன். தங்களிடம் கூறிக் கொண்டு போகவே வந்தேன்" என்றான்.

அவர் பெருமூச்சு விட்டபடி, "எங்கே யப்பா கிளம்புகிறாய்? கைகேயியைப் போன்று உன்னுடைய தாய் உனக்காக ராஜ்யம் சம்பாதித்து வைத்திருக் கிறாளே?" என்றார்.

"அவள் கைகேயியைப் போன்றே உலகத்தின் பழிச் சொல்லுக்கும் ஆளாகட்டும்! நானும் பரதனைப் போன்று இங்கு ஒருகணமும் இருக்க மாட்டேன். அண்ணனைத் தேடிக் கண்டுபிடித்த பின்னரே, இங்கு வருவேன்." இவ்வாறு கூறிக் கொண்டே அவன் கிளம்பினான்.

விமலன் கையில் ஒரு ஈட்டியையும் எடுத்துக் கொண்டு குதிரை மேலேறிக் காட்டுப் பக்கம் வந்தான். நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் வந்தும், அவனுக்கு ஒன்றுமே புரிய வில்லை. ஏறக்குறைய இருட்டும் சமயத்துக்கு அவன் நடுக் காட்டை அடைந்து விட்டான். அவனது குதிரை பரிதாபத்துடன் தள்ளாடியவாறு நடந்தது. அதற்கு மேல் அதை விரட்டவும் அவனுக்கு மனமில்லை. கீழே இறங்கி, குதிரையைப் பிடித்துக் கொண்டு கால் நடையாகவே நடக்கத் தொடங்கினான்.

எங்கும் இருள் நிறைந்து விட்டது. பயங்கரமான காட்டு மிருகங்களின் கூச்சல் அவனது செவிக்குக் கேட்டன. நாலா புறங்களிலும் இருந்த மரங்களிடையில் பாதையும் புரிய வில்லை. அந்தத் திக்குத் தெரியாத காட்டில், தைரியத்துடன் வந்து கொண்டிருந்தான் விமலன்! (தொடரும்)

# சிமெண்டின் உபயோகம்

'கான்கிரீட்' என்றால் என்ன தெரியுமா? தொழிலாளர்கள் சிமெண்டு மூட்டைகளைக் கொண்டு வந்து அவற்றை மரப் பலகைச் சுவர்களின் மத்தியில் கொட்டிப் பிறகு அவற்றுடன் மணலும் கிராவல் கற்களும் சேர்த்துத் தண்ணீரை ஊற்றிக் கலவை செய்து விடுவார்கள். சில தினங்கள் கழித்து அந்த மரப் பலகைகளை அப்புறப் படுத்தி விட்டுப் பார்த்தால் அங்கே கெட்டியான கான்கிரீட் வார்ப்படம் உருவாகியிருக்கும்.



நாமும் சிமெண்டைக் கொண்டு மேஜைமீது வைத்துக் கொள்ளக்கூடிய பென்ஸில் ஸ்டாண்டு செய்யலாம். இதற்கு வேண்டிய பொருள்களை முதலில் சேகரித்துக் கொள்வோம்.

1. சிமெண்டு அரை பவுண்டு 2. கொஞ்சம் சலிக்காத மணல் 3. தண்ணீர் 4. பேனாக்கத்தி 5. கொஞ்சம் எண்ணெய் 6. ஒரு தட்டு 7. இரண்டு ஸ்பூன் 8. ஒரு அட்டைப் பெட்டி 9. ஒரு ஆணி 10. நாலு பென்ஸில் 11. அகலமான செய்தித் தாள் ஒன்று.

அட்டைப் பெட்டியை நாலு அங்குல உயரத்தில் நாலு சுவர் வருகிற மாதிரி வெட்டிக் கொள்ளவும். இந்த நாலு சுவர்களின் மீது மூடிபோல் வைப்பதற்கு இன்னொரு அட்டையைக் கொஞ்சம் அகலமாக வெட்டிக் கொள்ளவும். இந்த மூடியில் ஆணியினால் நான்கு துவாரங்கள் போட்டு அவற்றுக்குள் பென்சிலைச் செலுத்தவும். இதற்குமுன்னால் பென்சில்கள்மீது எண்ணெய் தடவி விட வேண்டும். எண்ணெய் தடவி விட்டால் பென்சில் கான்கிரீட்டோடு ஒட்டிக் கொள்ளாது.



இப்போது ஒன்பது ஸ்பூன் சிமெண்டை எடுத்துத் தட்டில் போடவும். நடுவில் பள்ளம் செய்து மூன்று ஸ்பூன் தண்ணீர் விடவும். மற்றொரு ஸ்பூனால் தண்ணீரையும் சிமெண்டையும் நன்றாகக் கலக்கவும். மறுபடியும் தண்ணீர் விட்டு மறுபடியும் கலக்கவும். பிறகு பதினெட்டு ஸ்பூன் மணலை இத்துடன் சேர்த்துக் கலக்கவும். மணலைச் சேர்க்கும்போதே நன்றாகக் கலக்க வேண்டும். தட்டில் கலக்கப்பட்ட சிமெண்டை அட்டைப் பெட்டியில் நிரப்பி விடவும். பிறகு மூடியை மேலே வைத்துப் பென்சில்களைச் சிமெண்டுக்குள் ஒரு அங்குலம் உள்ளே அமுக்கி விடவும். அட்டைப் பெட்டியைப் பத்திரமாக ஒரு இடத்தில் வைத்து விட்டால் நாலு தினங்களில் நன்கு உலர்ந்துவிடும். பிறகு அட்டையை அப்புறப் படுத்திவிட்டு அதற்குள் உள்ள சிமெண்டு பென்ஸில் ஸ்டாண்டுக்கு வர்ணம் பூசி மேஜைமீது வைக்கலாம்.








Kolynos
TOOTHPASTE
Kolynos




**உங்கள் புஷ் ஷர்ட் உடம்புக்குப் பொருந்தாதபடி சுருங்குவதைத் தடுக்க, 'ஸான்போரைஸ்ட்' அடையாளத்தைக் கவனியுங்கள்**



சாதாரண துணியில் தைக்கப்பட்ட ஒரு நேர்த்தியான புஷ் ஷர்ட் சிறிது சுருங்கினாலும், அதன் தோற்றம் கெட்டுவிடும். ஆனால் நீங்கள் வாங்கும் ஒவ்வொரு உடையிலும் 'ஸான்போரைஸ்ட்' அடையாளமிருக்கிறதா என்று கவனித்தால், உடைகள் சுருங்கும் என்று நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை.

'ஸான்போரைஸ்ட்' அடையாளமிடப்பட்ட துணிகள் முன்னமேயே முற்றிலும் சுருக்கச் செய்யப்பட்டவை. ஆகவே அனேக சலவைகளுக்குப் பிறகும் உங்களுடைய உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி ஒரு பொழுதும் சுருங்காது.

எப்பொழுதும் 'ஸான்போரைஸ்ட்' அடையாளத்தைக் கவனியுங்கள்!




**ஸான்போரைஸ்ட் ஸர்வீஸ்,** 'பாரத்',
நேதாஜி ஸுபாஷ் ரோடு, மெரீன் ட்ரைவ், பம்பாய் 2

'ஸான்போரைஸ்ட்-கே-மெஹ்மான்' என்ற நிகழ்ச்சியை ரேடியோ ஸிலோனில் கேளுங்கள்: பிரதி ஞாயிறு பகல் 12-45 மணி 13 மீட்டர்; பிரதி செவ்வாய்க்கிழமை இரவு 7-30 மணி, 41 மீட்டர்

ACP. 2826

# பத்தரை மாற்றுத் தங்கம்

ரஸிகமணி டி. கே. சி

பத்தரை மாற்றுத் தங்கத்தை வாங்கிக் கொடுப்போம். அதை அடைகல் மேல் வைத்துக்கொண்டு தட்டார்கள் என்ன பாடு படுத்துவார்கள் என்பது நமக்குத் தெரியும். சுத்தியலால் இப்படி அடிப்பார்கள். அப்படி அடிப்பார்கள். இடை இடையே உலையில் காய வைத்து மறுபடியும் மறுபடியும் தட்டுவார்கள். துவைச்சல் கொடுப்பதற்காக அவ்வளவும் செய்கிறார்கள். அவ்வளவும் செய்தால்தான் தங்கம் பணிக்குதவும்.

இயற்கைக்கு ஒரு நல்ல ஆன்மா கிடைத்து விட்டால் — சரி, நல்ல பணிக்கு உதவும் என்று எண்ண ஆரம்பித்து விடுகிறது அது. அந்த ஆன்மாவை என்ன பாடெல்லாமோ படுத்துகிறது.

ராஜாஜி கிடைத்தார்கள். அவர்களை இயற்கை என்ன எல்லாம் செய்தது என்பதைப் பார்க்கலாம்.

* * *

நல்ல பண்பாடுள்ள பக்தி சிரத்தையுள்ள குடும்பத்தில் ராஜாஜி பிறந்தார்கள். இயற்கையானது தட்டார வேலை செய்ய ஆரம்பித்தது.

உடம்பைப் பலஹீனமாக ஆக்கியது. அதோடு கண்ணை அதிக பலஹீனமாக ஆக்கி விட்டது.

பிள்ளையைப் பள்ளிக்கூடத்தில் போட்டார்கள். 'ஷார்ட் ஸைட்' (Short Sight) காரணமாக உபாத்தியாயர் பிளாக் போர்டில் எழுதும் எழுத்தோ கணக்கோ ஒன்றும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. விஷயத்தையும் கணக்கையும், தானே யோசனை செய்து தெரிந்து கொள்ள வேண்டியதாயிற்று. ஆனால் உண்மையை நேருக்கு நேர் பார்க்க முடிந்தது. அதனால் உண்மையை அநுபவிக்கவே முடிந்தது.

உண்மைக்கும் ராஜாஜிக்கும் இடையே உபாத்தியாயர்கள் நிற்கவில்லை; பள்ளிக்கூடமும் நிற்கவில்லை.

எப்போது உபாத்தியாயரும் பள்ளிக்கூடமும் வந்து இடையூறு செய்யவில்லையோ, அப்போது அறிவுத் தத்துவம் உத்ஸாகமாக வேலை செய்யத்தானே வேண்டும்? புஸ்தகமும் வார்த்தையும் உபாத்தியாயரும் கண்ணுக்குத் தென்படாமல் ஒதுங்கி விட்டபடியால் பாடங்களிலுள்ள விஷயங்கள் யாதொரு கஷ்டமும் இல்லாமல் புலப்படலாயின. மற்றப் பிள்ளைகளுக்கு — அதாவது, நல்ல பார்வையுள்ள பிள்ளைகளுக்கு — உண்மை புலப்படுவதில்லை. உலகமே வார்த்தைகள், பாட புஸ்தகங்கள், உபாத்தியாயர்கள் என்பதாகக் காட்சி அளிக்கிறது. பிறகு அறிவுத் தத்துவத்துக்கு அங்கே வேலை ஏது?

* * *

ராஜாஜி சேலத்தில் வக்கீல் வேலை பார்த்து வந்தார்கள். அபூர்வமான திறமையுடனும் தெளிவுடனும் வழக்குகளை எடுத்து விளக்குவதன் காரணமாகச் சேலம் ஜில்லா மாத்திரம் அல்லாமல் சுற்று வட்டத்திலுள்ள ஜில்லாக்களில் எல்லாமே பெரிய வழக்கு என்றால் ராஜாஜிதான் வக்கீல் என்று ஆகி விட்டது. (அந்தக் காலத்தில் ராஜாஜி என்ற பெயர் ஏற்படவில்லை; ஸி. ராஜகோபாலாச்சாரியார் என்று சொன்னார்கள்.)

அப்படியெல்லாம் மகோன்னத தசையில் இருந்தபோது உடம்பில் நூதனமான ஒரு பலஹீனம் உண்டாயிற்று. ஆனால் அது ஒரு காரியம் அல்ல. உள்ளத்தில் உண்டான துன்பந்தான் பெரியது. ஏழை மக்கள் படும் கஷ்டத்தைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை. போதாக் குறைக்குக் காந்திஜியின் கருணை வெள்ளமும் அந்த உள்ளத்தில் வந்து பாய்ந்தது. அவ்வளவுதான்; வக்கீல் வேலையை விட்டொழிக்கலாயிற்று.

* * *

பிரிட்டிஷ் சர்க்கார் தேசத்துக்குச் செய்துள்ள கொடுமைகள் மனசைப் பிடுங்கித் தின்ன ஆரம்பித்தன. ஜெயிலுக்குப் போக வேண்டியதாயிற்று.

உடம்பு என்ன தொந்தரவு செய்து கொண்டிருந்தால் என்ன, குடும்பக் கவலைகள் மனசை வாட்டிக் கொண்டிருந்தால் என்ன, போய்த் தீரவேண்டியதுதான் ஜெயிலுக்கு.

* * *

ராஜாஜிகள் தமிழ்நாட்டில் பூர்வத்திலும் இருந்திருக்கிறார்கள். இரண்டாயிரம் வருஷத்துக்கு முன் அவர்கள் வளமாய் இருந்திருப்பார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. இதற்குத் திருவள்ளுவர் வாய்மொழியிற் சான்று இருக்கிறது.

புடம் வைக்கப் பொன் நன்றாகப் பிரகாசிக்கும் காரியத்தைத் திருவள்ளுவர் பார்த்திருக்கிறார்.

உயர்ந்த லக்ஷியங்களில் கருத்தை வைத்துச் சாதனம் செய்கிறவர்களுடைய (நோற்கிற்பவர்) உள்ளத்தைப் புடம் போடுவது எப்படி என்பதையும் அறிந்திருக்கிறார். இரண்டையும் ஒப்பிட்டுத் திருவள்ளுவர் சொல்கிறார்.

"சுடச்சுடரும் பொன்போல்,—
ஒளிவிடும், துன்பம்
சுடச்சுட நோற்கிற்
பவர்க்கு"

*[சுட: புடம் போடப் போட; சுடரும்: பிரகாசிக்கும், மாற்று உயரும்; பொன்போல்: தங்கத்தைப் போல்; ஒளி விடும்: உண்மைகள் பிரகாசிக்கும்; துன்பம் சுடச்சுட: துன்பத்தில் வைத்துப் புடம் போடப் போட; நோற்கிற்பவர்க்கு: உயர்ந்த லக்ஷியத்திற்காகச் சாதனத்தை மேற்கொள்பவர்களுக்கு.]*

துன்பத்தின் மூலமாக அரிய ஆழமான உண்மைகள் உள்ளத்தில் பிரகாசிக்கும் என்று திருவள்ளுவர் சொன்னார். அந்தச் சொல்லுக்கு வியாக்கியானம் வேண்டாமா? அதுதான் ராஜாஜி.

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 56

நான் சொன்னதிலிருந்து என்ன ஏற்படுகிறதென்றால் பக்தியும் ஞான நிலையும் ஒன்றே. பக்தி வேறு, ஞானம் வேறல்ல.

பக்தியே முக்தி; ஞானமே முக்தி. ஞானம் அல்லது பக்தி இவற்றைக் கொண்டு வேறொன்றை அதாவது முக்தியை அடைவோமென்று எண்ணலாகாது. ஒரு ரூபாயை எடுத்துக் கொண்டு கடைக்குச் சென்றால் தின்பண்டமோ அல்லது விஷமோ விலைக்கு வாங்கலாம். முத்திரையிட்ட பணத்துக்கு மதிப்பு அதைக் கொண்டு வேறு பொருளைப் பெறுவது தான். அதற்கே தனிப்பயன் இல்லை. பக்தியும் ஞானமும் அம்மாதிரி யல்ல. பண்டமாற்றலுக்கு அல்ல பக்தியும் ஞானமும் பெறுவது. வேறொன்றையும் அவற்றைக் கொண்டு பெறுமலேயே, அவற்றினின்றே ஆனந்தம் பெறுகிறோம். ஞானமும் பக்தியும் சாதனங்கள் அல்ல. அடைய வேண்டிய பயனும் அதற்கு வேண்டிய சாதனமும் ஒன்றாகவே தீர்ந்து போகின்றன. சாதனமே பயனாகிறது. பூரண சாந்தியே நிர்வாண நிலைக்கு வழி. அதுவே நிர்வாணம்.* பக்தியும் ஞானமும் உண்மையான பக்தியும் ஞானமும் ஆக வேண்டுமானால் எந்தப் பயனையும் கருதாத காரியமாக இருக்க வேண்டும்.

எது நல்லது எது தீயது என்று ஒருவன் அறிந்து விட்டால், அதுவே ஞானமாகி விடாது. அதனாலேயே முக்தியடைய முடியாது. புலமை அடைந்தவன் அதனாலேயே ஞானியாகி விடமாட்டான்.

படிப்பு ஏற ஏறச் சோம்பேறித்தனமும் ஏறுகிறது. தன் கையினால் எந்த வேலையும் செய்யத் தகாதவனாகி விடுகிறான். 'நான் சாஸ்திரம் படித்திருக்கிறேன். இந்தச் சின்னக் காரியங்களையெல்லாம் நான் செய்ய வேண்டுமா?' என்று எண்ணுகிறான்.

பக்தியும் சோம்பேறித்தனத்தில் முடிந்து விடுகிறது. ஜெபமாலை கையில் வைத்து எண்ணிக் கொண்டு, கண்களில் நீர் மல்க, யாருக்கும் எந்தவிதமான பணியும் செய்வதற்கு அவகாசமில்லாமல் ஜெபம் நடத்துகிறார்கள். இது என்ன பயன் தரும்? உண்பதிலும் தூங்குவதிலும் செலவழிக்கும் காலம் தவிர எஞ்சிய போதெல்லாம் ஜெபமாலையை விடாமற் பக்தி செலுத்தி நெல் குத்தவோ, மா அரைக்கவோ, நோயாளியைப் பார்க்கவோ சமயம் இல்லாமல் பக்தி நடைபெற்று வருகிறது. இதில் பயனில்லை. கீதையில் சொல்லப்படுவது என்னவென்றால் பணிகளைச் செய்தே முக்தி பெறலாம். ஜனகன் முதலிய பெரியோர்களும் கடமைகளைச் செய்தே வீடு பெற்றார்கள். "நானும் கூடச் செய்யாமை பூண்டு விட்டேனானால் உலகம் அழிந்து போகும். மக்களைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? செய்ய வேண்டிய தொழிலைச் செய்ய வேண்டிய முறையில் செய்து கொண்டு போனால்தான் வீடு பெறமுடியும்." இது கண்ணன் வாக்கு.

எந்தச் செயலும் நம்மைப் பந்தப் படுத்துகிறது என்பது உண்மை. ஆயினும் உயிர் கொண்ட மக்கள் செயலின்றி யிருக்க முடியாது. விரும்பியும் விரும்பாமலும் செயல்களில் சிக்கியே தீர வேண்டும். 'செயல்' என்றால் எண்ணும் எண்ணங்களும் அதனுள் அடங்கும். செயல்களினால் கர்மபந்தத்தில் சிக்கிக் கொள்ளாமலிருக்க நாம் என்ன செய்ய வேண்டும்? இதைத்தான் கீதை நான் கண்ட வேறு எந்த சாஸ்திரத்திலும் சொல்லாத முறையில் நன்றாக விளக்கி யிருக்கிறது.

---

*கீழ்க்கண்ட திருவாய் மொழிப் பாசுரங்களிலும் நம்மாழ்வார் இதையே சொல்லுகிறார்.

நன்றாய் ஞானம் கடந்து போய்,
நல் இந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ்
உலப்புஇல் அதனை உணர்ந்துஉணர்ந்து
சென்(று) ஆங்கு, இன்பத் துன்பங்கள்
செற்றுக் களைந்து, பசைஅற்றால்
அன்றே அப்போதே வீடு:
அதுவே வீடு வீடாமே!

அதுவே வீடு: வீடு பேறு
இன்பம் தானும் அது: தேறி,
எதுவே தானும் பற்று இன்றி
யாதும் இலிகள் ஆகிற்கில்
அதுவே வீடு வீடு பேறு
இன்பம் தானும் அது: தேறாது.
எதுவே வீடு? எது இன்பம்? என்று
எய்த்தார் எய்த்தார் எய்த்தாரே

பகலும் இரவும் பல் விளக்க

டூத் பிரஷ் **டெக்**

உபயோகிக்க!



# ஜெர்மனியில் தீப இசை விழா

லக்ஷ்மி தேவதாஸ் காந்தி

சமீபத்தில் "என்" சுற்றுப் பிரயாணத்தின் போது நான் பல நாடுகளுக்குச் சென்றிருந்தேன். அந்த நாடுகளில் என் கவனத்தை மிகவும் கவர்ந்த தேசம் ஜெர்மனிதான். நாங்கள் ஜெர்மனி தேசம் போயிருந்த போது அங்கே குளிர் அதிகம் இல்லை. கால நிலை மிகவும் ரம்மியமாக இருந்தது. மேற்கு ஜெர்மனியின் தலைநகரான 'பான்' (Bonn) ஆடம்பரமோ, பகட்டோ இல்லாத ஒரு சிறு நகரம். அங்கே பல கலாசாலைகள் உள்ளன. 'ரைன்' நதியோரமாக அமைந்துள்ள நகரங்களில் பான் நகரமும் ஒன்று. 'ரைன்' நதியை ஜெர்மானிய கங்கை யென்று சொல்லலாம். வர்த்தகச் சரக்குகளின் போக்கு வரத்து யாவும் இந்த நதி மார்க்கமாகவே நடைபெறுகின்றன. அழகிய நீண்ட படகுகளின் மூலம் சரக்குகள் கொண்டு போகப் படுகின்றன. இங்கே இரவு பகல் எப்போதும் படகுகள் ஓடிக் கொண்டே இருப்பதைக் காணலாம். நதியில் உல்லாசப் பிரயாணம் செய்வதை ஜெர்மனிய மக்கள் மிகவும் விரும்புகிறார்கள்.

'பான்' நகரத்துக்கு நேர் வடக்கே பிரபல ஜெர்மானிய துறைமுகப் பட்டணமாகிய 'ஹாம்பர்க்' இருக்கிறது. நாங்கள் 'பான்' நகரிலிருந்து ஹாம்பர்க் ரயில் மூலம் சென்றோம். இடையிலுள்ள 'ஆக்ஸ்பர்க்', 'ஸ்டுட் கார்ட்', 'உல்ம்', நகரங்களில் இரண்டொரு நாட்கள் தங்கினோம். கடந்த யுத்தத்தினால் ஏற்பட்ட உயிர், பொருள், மான நஷ்டங்களிலிருந்து தங்களை மீட்டுக் கொண்டு புத்துயிர் பெற்று ஜெர்மானியர்கள் தங்கள் தேசத்துக்குப் புது மெருகு கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அமெரிக்காவின் பொருளுதவி இதற்கு ஓரளவு காரணமாயிருந்த போதிலும் ஜெர்மானியரின் ஊக்கம், உழைப்பு, அறிவுத்திறன் இல்லாமல் இது சாத்தியமாகாது. இடிந்து விழுந்த கட்டடங்கள் அவசியமான இடங்களில் மீண்டும் எழுப்பப்படுகின்றன. அவை புதிய தோற்றத்துடனும் கவர்ச்சியோடும் காணப்படுகின்றன. ஜெர்மன் மக்கள் ஆரோக்கியமான சுக வாழ்வு நடத்தி வருகிறார்கள். அவர்கள் எப்போதும் முகமலர்ச்சியுடன் காணப்படுகின்றனர். நாடெங்கும் பற்பல தொழிற்சாலைகள் ஏற்பட்டுள்ளன. ஜெர்மனியில் தொழிலும் வர்த்தகமும் மிகவும் முன்னேற்ற மடைந்துள்ளன. விஞ்ஞானிகளான ஜெர்மானியர்கள் சிறந்த கலா ரசிகர்களும் கூட என்பதை நேரில் பார்த்த போது அறிந்தேன். இவர்களை மறுபடியும் கடவுள் யுத்த வெறியில் வீழ்த்தாமல் காப்பாற்ற வேண்டும். ஜனங்கள் ஹிட்லரைப் பற்றி எவ்வித அபிப்பிராயமும் வெளியிடாமல் மௌனமாக இருக்கிறார்கள்.

ஹாம்பர்க் நகரில் நாங்கள் நான்கு தினங்கள் தங்கி இருந்தோம். இந்நகரில் நமது தேசத்தின் வர்த்தகப் பிரதிநிதியாக உள்ள ஸ்ரீ சீதாராமன் அவர்கள் எங்களை ஒரு நாள் மாலை சங்கீத நிகழ்ச்சி ஒன்றுக்கு அழைத்துச் சென்றார். இந்த நிகழ்ச்சி நாங்கள் அங்கு



இத்தாலியில் உள்ள பிரசித்திபெற்ற சாய்ந்த கோபுரத்துக்கு முன்னால் ஸ்ரீ தேவதாஸ் குடும்பத்தினர்: மோஹன், ஸ்ரீமதி லக்ஷ்மி தேவதாஸ், ஸ்ரீ தேவதாஸ், கோபு, குமாரி தாரா.

போயிருந்தபோது 'செடிகளும் மலர்களும்' என்று அழைக்கப்படும் பெரிய பூங்காவில் தொடர்ச்சியாக ஒவ்வொரு மாலையிலும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. உயர்தர வாத்திய சங்கீதமும் அந்தச் சங்கீதத்தின் ராகம், தாளம், பாவம் இதற்கேற்றபடி செயற்கை நீர்ச்சுனைகளிலிருந்து பொழியும் நீர்த் திவலைகள் கண்ணைக் கவரும்படியாக வர்ண ஒளியுடன் மேலெழும்பியும் கீழே அடங்கியும் பக்க வாட்டமாகத் திரும்பியும் சுழன்றும் அற்புதமாக நடனமாடும்படி செய்கிறார்கள். இந்தக் காட்சி மிகவும் வியக்கும்படியாக இருந்தது. நமது தேசத்திலும் தீபாவளி நவராத்திரி விழாக்களின்போது இவ்விதம் சில நிகழ்ச்சிகள் நடத்தினால் என்ன என்று தோன்றிற்று.

ஹாம்பர்க் நகரத்தில் நமது நாட்டு மாணாக்கர்கள் சிலரைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. முக்கியமாக, கப்பல் சம்பந்தமான 'எஞ்சினியரிங்' பயிற்சிக்கு அங்கு பலர் வருகிறார்கள். ஹாம்பர்க்கில் மாதந்தோறும் பல ரகக் கப்பல்கள் உற்பத்தியாகின்றன. கப்பல்களைப் பழுதுபார்க்கும் வேலையும் நடைபெறுகிறது. உலகின் பல பாகங்களிலிருந்தும் 'ஆர்டர்கள்' வந்து கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். வியாபார நிமித்தமாகச் செல்லும் பல கப்பல்கள் ஹாம்பர்க்கின் விசாலமான துறைமுகத்துக்கு வருகின்றன. ஒரு குறிப்பிட்ட தேசத்துக் கப்பல் அந்நகரை அணுகும் போது சற்றுத் தொலைவில் அந்தக் கப்பலின் ஊர், பெயர், நிறை முதலியவற்றை ஒலிபரப்பி மூலம் அறிவித்து விட்டு, கப்பல் எந்தத் தேசத்தைச் சேர்ந்ததோ அந்தத் தேசத்தின் தேசிய கீதத்தை வாத்தியம் மூலமாகத் தங்கள் நகர தேசிய கீதத்துடன் வாசிக்கிறார்கள். பிறகு இரு தேசத்துக் கொடிகளையும் பறக்கவிட்டு மரியாதை செய்கிறார்கள். கப்பல்கள் வந்து கொண்டேயிருப்பதும் இந்த நட்புரிமையோடு கூடிய வரவேற்பு நடந்து கொண்டிருப்பதும் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருந்தது.

மறுதினம் சீதாராமன் அவர்கள் குடும்பத்தாருடன் ஹாம்பர்க்கின் மிருகக்காட்சிச் சாலையைப் பார்க்கப் போயிருந்தோம். (மிருகங்களைக் கூட்டிலடைத்து வேடிக்கை பார்ப்பது எனக்கு அவ்வளவாகப் பிடிக்காது. ஆனால் அது வேறு விஷயம்.) இந்த மிருகக் காட்சிச் சாலை ஒரு திறமை வாய்ந்த பயிற்சியாளரின் சொந்தச் சொத்து. சர்க்காரைச் சேர்ந்ததல்ல. இவர் நகரத்துக்கு ஒரு முதல்தர மிருகக் காட்சிச்சாலை அமைத்துக் கொடுத்திருப்பதுடன் சர்க்காருக்கு அவர் அளிக்கும் வரி மூலமாக நல்ல வருமானமும் அடைய உதவி செய்கிறார். மிருகக் காட்சிச்சாலை கூடுமானவரை இயற்கையின் சூழ்நிலையை அனுசரித்து அமைக்கப் பட்டிருக்கிறது.

ஜெர்மனியைத் தவிர நாங்கள் பிரான்ஸ், ஸ்விட்ஜர்லாந்து, இத்தாலி, இங்கிலாந்து, ஸ்காட்லந்து முதலிய நாடுகளுக்குப் போயிருந்தோம். பார்த்த நாடுகளில் எது மிகவும் சிறந்தது, அழகு வாய்ந்தது என்று நிர்ணயிப்பது மிகவும் கடினம். மேல்நாட்டு, கீழ்நாட்டுத் தேசங்கள் எல்லாவற்றுக்குமே அதனதன் தனிச் சிறப்பு உண்டென்று நினைக்கிறேன்.

# கடல் கண்ட கனவு

பத்தொன்பதாம் அத்தியாயம்

## மதுரைமா நகரில்

**வீ**ர விக்கிரமன் கொடும்பாளூரிலிருந்து புறப்பட்டு மதுரைமா நகரத்தை அடைந்த போது, பாண்டிய மன்னனின் அரண்மனையிலே ஒரு முக்கியமான ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. வீர விக்கிரமனுடைய வரவுக்காகச் சித்திரமாயன் மிக்க ஆவலோடு அங்கே காத்திருந்தான்.

வலம்புரித் தீவுக்குச் சென்ற தூதுவர்கள் மதுரைக்குத் திரும்பி யிருந்தார்கள். வீர விக்கிரமனுடைய யோசனைப்படி பாண்டியர்களின் பிரதிநிதியும் வேளிர்களின் தூதுவரும் வலம்புரித் தீவுக்குச் சென்று மகாராணியோடு பேசி விட்டுத் திரும்பி யிருந்தார்கள். வலம்புரி மகாராணியின் மறுமொழி என்ன என்பதைத் தெரிந்த விநாடியிலிருந்து, பாண்டியர்களுக்கு மேற்கொண்டு என்ன செய்வது என்பதாக மிருந்த கவலை ஏற்பட்டிருந்தது. ஏனென்றால் பாண்டியர்கள் அனுப்பிய காவற்படை வலம்புரித் தீவைக் காவல் செய்து கொண்டிருந்த தல்லவா? பாண்டியர்கள் நினைத்தார்கள், அந்தக் காவற்படை உதயசந்திரனால் தாக்கப்படும் என்று! இந்த நிலைமையிலேதான் இப்பொழுது வீரவிக்கிரமன் மதுரைக்கு வந்திருக்கிறான்.



மதுரைக்கு வந்த வீரவிக்கிரமன் சும்மா வந்தானா? இல்லை! எல்லாருக்கும் பேரதிர்ச்சி தரக்கூடிய செய்திகளோடு வந்தான்! சித்திராங்க பூபதியும் யாழ் நங்கையும் பேரியாளோடு குங்கும மாளிகையிலிருந்து தப்பி ஓடி விட்டார்கள் என்ற செய்தியை எல்லையற்ற கவலையோடு மதுரைப் பாண்டிய மன்றத்தாரிடம் தெரிவித்தான் வீரவிக்கிரமன்.

ஆலோசனைக்காகக் கூடியிருந்த அமைச்சர்களும் பிரதானிகளும் வெகுண்டார்கள். எதிர்பாராத இந்த விளைவு பாண்டியர்களுக்கு வியப்பைத் தரவில்லை. ஆவேசத்தையே மூட்டியது!

"வீர விக்கிரமரே! இப்பொழுது நம்முடைய தூதுவர்களோடு வலம்புரித் தீவிலிருந்து ஒரு பிரதானி வந்தார். குங்கும மாளிகையிலே சித்திராங்க பூபதியைச் சந்திப்பதாகச் சொல்லிப் போயிருக்கிறார். நீங்களோ என்றால், பூபதியும் யாழ் நங்கையும் தப்பி ஓடி விட்டதாகச் சொல்கிறீர்கள். இதையெல்லாம் பார்க்கும் போது வீண்



பேச்சுக்களிலும், உறவு ஒப்பந்தங்களிலும் பொழுதைக் கழிப்பது கேடான காரியம் என்று நமக்கு நன்றாகத் தெரிகிறது. இனிமேல் ஒரு விநாடி தாமதிப்பதும் தவறாக முடியும். உதய சந்திரன் ஏதேதோ தந்திரமான வேலைகள் செய்து வருகிறார் என்று சந்தேகத்துக்கு இடமில்லாமல் துலங்குகிறது. நிச்சயம் வலம்புரித் தீவிலே நம்முடைய காவற் படைக்குப் பெரிய இடையூறு நேரப் போகிறது. ஆகையால் நாங்கள் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். அதை நீங்கள் ஒப்புக் கொண்டால் மேலே நடக்க வேண்டிய காரியங்களை உடனே நிறைவேற்ற ஆயத்தமாக இருக்கிறோம்!"

இவ்வாறு பேசினார் பாண்டியர்களின் தலைமை அமைச்சர். வீரவிக்கிரமனுக்கு விரிவான மறுமொழி ஏதும் சொல்ல முடியாதபடி மூளை குழம்பி யிருந்தது.

"பாண்டியப் பிரதானிகளே! என்னுடைய சித்தம் ஒரு நிலையில் இல்லை. அதிகமாக ஆலோசிப்பதற்கு எனக்கு மனம் சரியில்லை. நீங்கள் என்ன யோசித்திருக்கிறீர்களோ, அதுவே என்னுடைய கருத்தும் என்று எடுத்துக் கொண்டு உங்கள் முடிவுகளைத் தெரிவியுங்கள்!"

வீர விக்கிரமன் இப்படிச் சொன்னதும் பாண்டியர்களின் தளபதி கூறுவார்:

"வீர விக்கிரமரே! வலம்புரித் தீவைக் காவல் செய்யும் நமது படைகளுக்குத் துணையாக இப்பொழுது இன்னொரு பெரும் படையை அனுப்பத் தீர்மானித்து விட்டோம். அந்தப் படைக்குத் தலைமைப் பொறுப்பாக நானே செல்வதாக இந்த அரச மன்றம் முடிவு செய்திருக்கிறது. அந்த முடிவை நிறைவேற்றுகிற பணியிலே எனக்கு உங்களுடைய ஒத்துழைப்பு பூரணமாக வேண்டியிருக்கிறது. அதாவது, இப்பொழுது இங்கிருந்து வலம்புரித்தீவை நோக்கிப் புறப்படுகிற படையோடு என்னுடன் நீங்களும் வரவேண்டும். ஏனென்றால், வலம்புரித்தீவை நோக்கிச் சித்திராங்க பூபதியும் யாழ் நங்கையும் இரகசியமாகச் சென்றிருப்பதாக நீங்கள் சொல்வதால், அவர்களைக் கடலின் பரப்பிலேயே சந்திக்கக் கூடிய சந்தர்ப்பம் நேர்ந்தாலும் நேரலாம். அந்த மாதிரிச் சமயங்களில் நீங்கள் இல்லாமல் தீராது. ஒருவேளை நம்மிடமிருந்து தப்பிக் கொண்டு அந்த இருவரும் தீவுக்கே போய்ச் சேர்ந்திருந்தாலும், நமது படைபலத்தோடு நாம் வலம்புரி அரண்மனைக்குச் செல்லும் போது மகாராணியை நீங்கள்தான் சந்திக்க வேண்டும். தண்டனை கொடுப்பதற்கு நானும் என்னோடு வரும் படைகளும் ஆயத்தமாக இருப்போம்! என்ன தண்டனை என்று முடிவு சொல்ல வேண்டியது நீங்கள்தான்!"

பாண்டியர்களின் தளபதி இப்படிப் பேசியதை அந்த ஆலோசனை மன்றத்திலே கூடியிருந்த அத்தனை பிரதானிகளும் மனம் ஒப்பி ஆமோதித்தார்கள். வலம்புரித்தீவுக்குப் போர்ப் படைகள் மட்டும் போனால் போதாது. இத்தனை ஏற்பாடுகளுக்கும் அடிப்படையாக உள்ள வீர விக்கிரமனின் சமயோசித யோசனை இந்தப் படைகளுக்கு மிகவும் அவசியம் என்று ஆலோசனை மன்றத்திலுள்ள எல்லாருமே கருதினார்கள். அதன் பேரில் வீர விக்கிரமனும் இந்த யோசனையை ஒப்புக் கொண்டான்.

**ம**துரைமா நகரிலிருந்து வலம்புரித் தீவை நோக்கி ஒரு பெரும் படை புறப்

படுவதற்கான ஏற்பாடுகள் மின்னல் வேகத்தில் நடைபெற்றன. கொற்கைத் துறைமுகத்திலிருந்து பாண்டியர்களின் படை புறப்பட்டு நேரே வலம்புரித் தீவை நோக்கிச் செல்ல வேண்டும் என்றும், வீர விக்கிரமன் பாண்டியர்களின் தளபதியோடு செல்கிறார் என்றும் அறிவிக்கப்பட்டது. எந்தச் சித்திர மாயனுக்காக இத்தனை பெரிய சிக்கல்கள் ஏற்பட்டனவோ, அந்தச் சித்திரமாயன் தன்னுடைய தாய்வழி உறவினர்களான பாண்டியர்களின் அரண்மனையிலேயே இருக்க வேண்டும் என்று முடிவாயிற்று. மாலை நேரங்களில் தினமும் சித்திரமாயனுக்கு நல்ல படைக்கலப் பயிற்சி அளிக்க வேண்டும் என்று வீர விக்கிரமன் பாண்டியப் பிரதானிகளைக் கேட்டுக் கொண்டான்.

வீர விக்கிரமனும், பாண்டியர்களின் தளபதியும் மதுரையிலிருந்து புறப்பட்டார்கள். வலம்புரித் தீவைக் காவல் காத்துக் கொண்டிருக்கிற படைகளோடு சேர்ந்து கடலின் நீலப் பரப்பிலே வெற்றிக்கொடி நாட்டி விடுவது என்ற திடமான முடிவோடு அவர்கள் சென்றார்கள். உதயசந்திரனுடைய தந்திரத்தை முன்னதாகவே எதிர்பார்த்து இப்படி ஒரு சாமர்த்தியமான ஏற்பாட்டைச் செய்வதாகக் கருதினார்கள் அவர்கள்! ஆனால் இதற்குள் உதய சந்திரன் என்ன செய்தார் என்பது அவர்களுக்குத் தெரியுமா! எந்தச் சித்திராங்க பூபதியும் எந்த யாழ் நங்கையும் வலம்புரித் தீவுக்கு ஓடிப் போய் விட்டதாக வீர விக்கிரமன் நினைத்தானோ, அதே சித்திராங்க பூபதியும்



அதே யாழ் நங்கையும் அதே செந்தமிழ் நாட்டிலேதான் இருந்தார்கள்! ஆனால் இருவரும் ஒரே இடத்தில் இருந்தார்களா? அதுவும் இல்லை! சித்திராங்க பூபதி தஞ்சைமா நகரின் அரண்மனையிலே மந்திரநாயகத்தோடு இருந்தான். யாழ் நங்கை எங்கிருக்கிறாள் என்றே அவனுக்குத் தெரியாது! குங்கும மாளிகையிலிருந்து அவள் தப்பி ஓடிவிட்டாள் என்ற செய்தியே தெரியாத நிலையில், பூபதி யாழ் நங்கையைப் பற்றிய சிந்தனைகளிலே மனத்தை ஓடவிட்டுத் தனது குழப்பங்களையெல்லாம் தெளிவாக்கும்படி மந்திரநாயகத்தைக் கேட்டுக் கொண்டிருந்தான்! மந்திர நாயகம் என்ன மன நிலையில் இருந்தார்? பூபதிக்குப் பேரியாழின் கதை முழுதும் நன்றாகத் தெரிந்து போய் விட்டது என்பதை உணர்ந்து கொண்டு, இனி அவனுடைய மனத்தை எப்படித் திடப்படுத்துவது என்ற யோசனையில் பேச முனைந்தார். அந்தப் பேச்சுத்தான் தஞ்சை அரண்மனையின் சித்திரகூடத்திலே நடந்து கொண்டிருந்தது.

## இருபதாம் அத்தியாயம்
# போர்ப் படைகள்

தஞ்சை அரண்மனையில் உதயசந்திரனும் வல்லத்தரசரும் முத்தரைய மன்னரும், மூவருமாகச் சேர்ந்து ஒரு நாழிகை நேரம் இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த இரகசியமான ஆலோசனையின் பயனாக முத்தரைய மன்னர் அரண்மனை ஆசார மன்றத்தில் அங்குமிங்கும் நடந்து கொண்டே பலத்த சிந்தனையில் ஆழ்ந்தார். வல்லத்தரசரோ முக்கியமான சில பிரதானிகளை அழைத்துக் கொண்டு தஞ்சைமா நகரின் கடகத்துக்கு விரைந்தார்! கடகத்தில் வைக்கப்பட்டிருந்த முத்தரையர்களின் படைகளைப் பற்றித் தமிழ் நாடு முழுதும் நன்கு அறியுமாதலால், வல்லத்தரசர் கடகத்தை நோக்கிச் சென்றதும் தஞ்சை அரண்மனையிலே ஒரு பரபரப்பு உண்டாயிற்று.

வல்லத்தரசர் மிகவும் நேர்மையான மனிதர் என்று புகழ் பெற்றவர். வீரம் நிரம்பிய இதயத்திலே, சத்திய உணர்ச்சி அந்த வீரத்துக்கு அரண் கட்டிப் பாதுகாவல் செய்து வந்தது. தந்திரமும், யுத்த முறைகளும் அவருக்குச் சர்வ சாதாரணம்! எந்த நேரத்திலும் எத்தனை பெரிய யுத்தத்துக்கும் அணிவகுத்து நிற்கக் கூடிய ஆற்றல் அவரிடம் உண்டு. ஆனால் அத்தனைக்கும் மேலாக நியாய உணர்ச்சி ஒன்று மேலெழுந்து நின்று, அவரை இயக்கி வந்தது! எனவே, அவர் அத்தனை ஆத்திரத்தோடு கடகம் என்ற போர்ப் படை வட்டாரத்துக்குச் செல்ல வேண்டும் என்றால், ஏதோ ஒரு தர்ம நியாயமான யுத்தம் நடக்கப் போகிறது என்பதை எல்லாரும் யூகித்து விட்டார்கள். அதிலும் உதய சந்திரனும் முத்தரைய மன்னரும் இவருமாக நீண்ட நேரம் ஆலோசனை செய்து விட்டு அதன் விளைவாக அத்தனை ஆத்திரத்தோடு வல்லத்தரசர் கடகத்தை நோக்கிச் சென்றார் என்பதைப் பார்த்தபோது, தஞ்சை அரசப் பிரதானிகள் எல்லாம் அதன் விளைவு தமிழ் நாட்டின் அரசியலையே மாற்றிவிடக்கூடிய தன்மை வாய்ந்தது என்று கருதினார்கள். ஏற்கனவே வீர விக்கிரமன் காஞ்சிமா நகரத்தின் அரச பீடத்தை மாற்றுவதற்காகச் செய்து வருகிற சூழ்ச்சிகள் பலருக்கும் தெரியுமாதலால், தஞ்சைப் படைகள் வீராவேசத்தோடு புறப்படப் போகின்றன என்று அனைவரும் ஒருமனதாக அபிப்பிராயப்பட்டார்கள். அதற்கு ஏற்றாற்போல் முத்தரைய மன்னரும் மிகுந்த சிந்தனையோடு அரண்மனையின் ஆசார மன்றத்திலே நடக்க ஆரம்பித்ததும் போரைப் பற்றிய எண்ணம் எல்லாருடைய இதயத்திலும் வலிமை அடைந்தது. வலம்புரித் தீவிலிருந்து மந்திரநாயகம் வந்திருப்பதையும், இப்பொழுது சித்தன்ன வாசல் மலையிலிருந்து பூபதியை இங்கே அழைத்து வந்திருப்பதையும் அறிந்திருந்த முக்கியமான சில பிரதானிகள், இனி நடக்கப் போகிற பெரும் போர் எத்தனை வன்மையாக இருக்கும் என்பதை ஒருவாறு மனக் கண்ணால் கண்டார்கள்.



அரண்மனையின் மேல் மாடியில் சித்திர சாலை

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிமிடெட்

B-6, பிளாக் III, டெல்லி-ஆஜ்மீர் கேட் ஸ்கீம், (பெட்ரோல் பங்க் அருகில்) புது டெல்லி-1

போன்: 27035 தபால் பெட்டி நெ. 472 தந்தி: EVERMENS

## குறுகிய கால ஏலச் சீட்டுகள்

3வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள் - 1956 டிஸம்பர் ஸீரீஸ்

சேரக் கடைசி தேதி 13-12-56 ... முதல் ஏலத் தேதி 16-12-56

25 மாதங்கள் 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| C | ரூ. 50/- | ரூ. 1250/- |
| F | ரூ. 25/- | ரூ. 625/- |
| G | ரூ. 20/- | ரூ. 500/- |

## நீண்ட கால ஏலச் சீட்டுகள்

நேயர்களின் கோரிக்கைகளுக்கு இணங்க 'B' & 'D' வகுப்பு சீட்டுகளில் புதிய தொடர்கள் ஆரம்பிக்கிறோம்

சேரக் கடைசி தேதி 20-12-56 - 'B' & 'D' வகுப்பு முதல் ஏலத் தேதி 23-12-56

50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறைந்த தள்ளுபடி |
|---|---|---|---|
| B | ரூ. 50/- | ரூ. 2500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1000/- | ரூ. 100/- |

*விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது*

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

## அரித்து, எரிந்து, கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டுபிடிக்கப்பட்ட பிறகு எக்ஸிமா, முகப்பரு, படை, ரத்தக் கட்டி முதலிய அருவருப்புத் தரக்கூடிய சரும உபாதைகளினால் அவதியுற அவசியமே இல்லை. நோயாளி என நினைத்து நண்பர்கள் விலகக் காரணமான அருவருப்பான சருமத்தை இம் மருந்தினால் குணப்படுத்துங்கள்

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. பிசுக்கற்றது. ஒன்பது மூலப் பொருள்களின் சேர்க்கையால் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை மூன்று வழிகளில் தாக்குகிறது. (1) நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றிச் சுத்தமாக்குகிறது

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதை விடச் சீக்கிரமாகவே நமைச்சல், எரிச்சலைச் சில நிமிஷத்தில் நிறுத்திச் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K.




கூறுகிறார், 12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பின் நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். பத்து நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்

### திருப்திக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (Nexoderm) வாங்கி உபயோகித்து அதனால் ஏற்படும் பலனை கவனியுங்கள். ஒரு வாரத்தில் சருமத்தைச் சுத்தப்படுத்துகிறது. திருப்தி அளிக்கும்படி சருமத்தைச் சுத்தப்படுத்தாவிடில் அதற்கான செலவைப் பற்றிக் கவலையுற வேண்டாம். அதன் காலிபாக்கெட்டைத் திருப்பி அனுப்பினால் உங்களுக்கு முழுப் பணம் வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குச் சிறந்த பாதுகாப்பு

யிலோ என்ருல், கீழே என்ன நடந்து கொண்டிருந்தது என்பதைச் சற்றும் அறியாத முறையில் பூபதி மந்திரநாயகத்தோடு பேசிக் கொண் டிருந்தான். தன் தாய்நாடான வலம் புரித் தீவிலிருந்து புறப்பட்ட விநடியி லிருந்து இதுவரை ஏதேதோ குழப்பங் களுக்கு உள்ளாகிவிட்ட பூபதி, இப் பொழுது மந்திரநாயகத்தைக் கண்ட தும் மனம் விம்மிப் பேச ஆரம்பித் தான். அவனுடைய உள்ளத்தின் குழப்பங்களை உணர்ந்த மந்திர நாயகம் பூபதிக்கு எல்லா விஷயங்களை யும் விரிவாகச் சொல்ல லாம் என்று கருதிப் பேச ஆரம்பித்தார்.

பூபதி கேட்டானல்லவா, தன்னிடம் மந்திரநாயகம் எல்லாச் செய்திகளையும் ஆரம்பத்திலேயே ஏன் சொல்லவில்லை என்று? அந்தக் கேள்விக்கு விடை சொன்ஞர் மந்திரநாயகம். வலம்புரித் தீவின் காவல் தெய்வத்தைப் பற்றியும், பேரியாழைப் பற்றியும் மந்திரநாயகம் சொன்ன செய்திகள் வேருகவும் இசைத் துறவி சொன்ன செய்திகள் வேருகவும் இருப்பது கண்டு பூபதி அதிசயப் பட்டான் அல்லவா, அந்தத் திகைப்பை முதலில் தெளிவித்துவிட வேண்டும் என்று கருதிஞர் மந்திரநாயகம்! பூபதியிடம் சில விஷயங்களைச் சொல்லாமல் மறைத்துப் பேசியதற்குக் காரணம் என்ன என்பதையும் வெளியிட்டுவிடவேண்டும் என்று நினைத்தார் அவர். இந்த நினைவோடு மந்திரநாயகம் பேச ஆரம்பித்தார்.



''பூபதி! ஓர் இரவுமுழுதும் நீ இசைத் துறவியோடு பேசிக் கொண் டிருந்தாய் என்ற செய்தி எனக்குத் தெரிந்ததிலிருந்து என் மன நிலையும் துயரத்திலேதான் நிற்கிறது. ஏனென்ருல், வலம்புரித் தீவின் உண்மையான கதையை நீ இப்பொழுது தெரிந்து கொண்டு விட்டாய்! பேரியாழை நாடி நீ புறப்பட்டுவிடக் கூடாதே என்ற மெய்யான கவலையினுல், நான் எந்த விஷயங்களை உன்னிடம் சொல்லாமல் மறைத்தேனே, அந்த விஷயங்களையெல்லாம் நீ நன்ருக இப்பொழுது தெரிந்து கொண்டு விட்டாய்! அதனுல் எனக்கு ஒரு பக்கம் துயரமும், ஒரு பக்கம் ஆறுதலும் ஏற்படுகின்றன. துயரம் எதற்காக என்ருல், உன்னுடைய இளமையான இதயத்தில் பாரமான கவலைகள் எல்லாம் சார்ந்து விட்டனவே என்று! ஆறுதல் எதற்காக என்ருல், எந்த மனிதரிடமிருந்து நீ அந்தச் செய்திகளையெல்லாம் தெரிந்து கொள்ளவேண்டுமோ அந்த மனிதரிடமிருந்தே எல்லா வரலாற்றையும் தெரிந்து கொண்டு விட்டாய் என்பதிஞல்! இப்பொழுது சொல்கிறேன், நான் உன்னிடம் அந்த விருத்தாந்தங்களைச் சொல்லாததற்குக் காரணம், உன்னிடம் உனது அன்னைக்கு இருந்த அன்புதான்! உன்னைப் பிரிவது என்ருல் அது உன் அன்னைக்கு எத்தனை பெரிய துயரம் என்பதை உணர்ந்துதான் நான் உன்னை ஏதேதோ சொல்லித் தடுக்கப் பார்த்தேன். நீயோ எத்தனை தடுத்தும் இந்தத் தமிழ் நாட்டுக்கு யாழைத் தேடி வந்து விட்டாய். எனவே இனி நான் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான். பெரிய சிக்கலிலே அகப்பட்டுக் கொண்டு விட்ட உன்னை மீண்டும் வலம்புரித் தீவிலே கொண்டு சேர்க்க வேண்டும்! அதைச் செய்கிறவரையில் என் கடமை நிறைவேறியதாகாது!''

மந்திரநாயகம் சொன்ன இந்த வார்த்தைகளிலே எல்லை கடந்த அன்பு இழைந்தது. சித்திராங்கபூபதிக்கு அந்த அன்பான வார்த்தைகளைக் கேட்டு மனத்தில் ஒரு தெளிவு உண்டாயிற்று.



இந்திய விமானப் படையின் தலைவர் ஏர் மார்ஷல் எஸ். முக்கர்ஜீ. சமீபத்தில் அமெரிக்காவுக்கு விஜயம் செய்தார். அவருக்கு அமெரிக்க இந்திய ஸ்தானிகர் திரு ஜீ. எல். மேத்தா அளித்த வரவேற்பில் கலந்துகொண்டவர்களை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

"மந்திரநாயகம்! உங்கள் அன்பை நான் ஒருபோதும் சந்தேகித்ததில்லை. என்னிடம் நீங்கள் சில விஷயங்களை மறைத்தீர்களே என்பதற்காக உங்களைச் சந்தேகப்படவில்லை நான்! அன்பு காரணமாக என்னை ஒரு கோழையாக வளர்க்க நீங்களும் என் அன்னையோடு சேர்ந்து கொண்டீர்களே என்றுதான் வெகுண்டேன்! இனி அதைப் பற்றிப் பேசுவதில் பொருளில்லை. இப்பொழுதாவது என்னிடம் உண்மையை மறைக்காமல் பேசுங்கள்!" என்றான் பூபதி.

"இனி மறைப்பதற்கு என்ன இருக்கிறது? பூரண சந்திரோதயம் ஆனதும் எப்படி இருள் நீங்கி விடுகிறதோ, அப்படி உதயசந்திரனுடைய வரவினால் துயரம் எல்லாம் நீங்கித் தெளிவு உதயமாகி விட்டது! அதில் என்ன சந்தேகம்?" என்றார் மந்திரநாயகம்.

பூபதி கேட்டான்: "மந்திரநாயகம்! இனியும் தெளிவாக வேண்டிய சில செய்திகள் உண்டு. அவற்றை வேறு யாரிடமும் கேட்க எனக்கு நம்பிக்கையில்லை. ஆகையினால் நீங்கள்தான் அந்த விஷயங்களையெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும். ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லுவீர்களா?"

இவ்வாறு ஆவல் பொங்கியவனாகக் கேட்டான் பூபதி. உறுதியோடு மறுமொழி சொன்னார் மந்திரநாயகம்.

"சித்திராங்கா! நீ என்ன கேட்டாலும் மறைக்காமல் விடை சொல்லுகிறேன். தயங்காமல் கேள்!"

பூபதி அந்த அறையிலேயிருந்த சாளரங்களையெல்லாம் ஒரு தரம் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே கேட்டான்:

"மந்திரநாயகம்! எனக்குத் தெரிய வேண்டிய செய்திகளை ஒவ்வொன்றாகச் சொல்லுகிறேன். வரிசையாகச் சொல்லுகிறேன். பிறகு நீங்கள் விடை கூறுங்கள்.

"முதலாவது, சந்திரருடன் பெரியாழோடு வலம்புரித்தீவிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்தவன் இப்பொழுது எங்கே இருக்கிறார்? இரண்டாவது, ஓடத்திலே மிதந்த சாருகேசியின் பெண் குழந்தை இப்பொழுது எங்கே வளர்கிறாள்? மூன்றாவது, தரங்கவல்லியும் பாண்டிய குமாரனும் எங்கே இருக்கிறார்கள்? நான்காவது, சித்தன்ன வாசல் மலையிலே நான் சந்தித்த அந்த இரண்டு சமணத் துறவிகளும் யார்?"

நான்கு கேள்விகளையும் வரிசையாகக் கேட்டு விட்டு, ஐந்தாவது கேள்விக்கு வரும்போது பூபதியின் உடம்பு பதறியது. பதற்றத்தோடு பதற்றமாக அந்த ஐந்தாவது கேள்வியையும் கேட்டான் பூபதி. "ஐந்தாவது, நான் தமிழ் நாட்டுக்கு வந்த பிறகு அடிக்கடி ஒரு சித்தர் என்னை வளைத்து வளைத்துப் பின்தொடர்கிறாரே, அவர் யார்?"

அவ்வளவுதான்! அந்த ஐந்தாவது கேள்வியைக் கேட்டு நிறுத்தினானோ இல்லையோ, 'டக் டக்' என்று தஞ்சை அரண்மனைப் படிகளிலே குமிழ்க் கட்டையின் ஓசை கேட்டது. அதைத் தொடர்ந்து, 'பளார் பளார்' என்று பிரம்பு ஒலி செய்தது.

"என்னப்பா ராஜகுமாரா!" என்று பரிவோடு கூடிய அழைப்பு காற்றிலே மிதந்து வந்தது. சந்தேகம் என்ன? சித்தரே அச்சமயத்தில் அங்கே வந்து கொண்டிருந்தார்! (தொடரும்)

# இதோ ஓர் நல்ல ஆரோக்கியமான குடும்பம்!




உங்கள் குடும்பத்தினருக்கு நல்ல ஆரோக்கியமிருந்தால், அவர்கள் இயற்கையின் மிக அருமையானதொரு வரப்பிரசாதம் பெற்றவர்களாவார்கள். இந்த நல்ல ஆரோக்கியத்தைக் காப்பாற்ற உங்கள் குடும்பத்தினரின் பானமாக 'ஓவல்டின்'னை தவறாமல் வழங்கிவரவும். இது சுத்தமான, ஊட்டமளிக்கும் உணவுப் பொருள்களினால் தயாரிக்கப் பெற்று, அதிகப்படி வைட்டமின்களும் சேர்ந்த ஓர் இனிமையான பானம்.

சாப்பாட்டு வேளைகளில் 'ஓவல்டின்' சாப்பிடுவதால் இதர ஆகாராதிகளை ஜீர்ணிக்க உதவுகிறது. இரவு படுக்குமுன் சாப்பிடுவதால் அயர்ந்த, புத்துணர்ச்சியளிக்கும் நித்திரைக்குத் தேவையான சூழ்நிலையை விருத்தி செய்கிறது. உங்கள் குடும்பத்திற்கு 'ஓவல்டின்'னையே கேளுங்கள்.

ரேடியோ ஸிலோனில் ஓவல்டின் அமெச்சூர் நிகழ்ச்சி (ஹிந்தி 41.72 மீட்டர்கள்) சனி மாலை 8 to 8-30; (ஆங்கிலம்-9520 கிலோசைக்கிள்ஸ், 31 மீட்டர்கள்) ஞாயிறு மாலை 8 to 8-30.

பிரதியொரு தினமும் ஆரோக்கிய மயமான

## ஓவல்டின்



விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

IV.498

## ஷோக்கான காட்சியளிக்க ஸ்போர்ட் ஷர்ட்டுகள்

# பின்னியின் காட்ஸ்வால் துணியில் தையுங்கள்

இலேசானதும், மிருதுவானதும், அணிவதற்குச் சௌகரியமானதுமான பின்னியின் காட்ஸ்வாலைக் கொண்டு செய்த ஷர்ட்டுகள் அணிந்து ஷோக்கான தோற்றமளியுங்கள். காட்ஸ்வால் என்பது பருத்தி மற்றும் ரோமமும் கலந்து செய்த துணியாகும். அது சீதோஷ்ண மாறுதல்கள் சருமத்தை பாதிக்காமல் காக்கும். அதை வீட்டிலேயே சுத்தம் செய்யலாம்—அது சுருங்காது என்ற உத்தரவாதமுள்ளது.

கவர்ச்சிகரமான கட்டங்கள் மற்றும் வர்ணபேதங்கள் உள்ள நூற்றுக்கும் மேற்பட்ட டிஸைன்கள் காட்ஸ்வாலில் உள்ளன. அவைகளை உங்களுக்குப் பிடித்தமான கடையில் இன்றே பார்வையிடுங்கள்!

**குளிர்கால உடைகள், பின்னியின் அங்கோலா துணியில் தையுங்கள்**

வேண்டிய அளவு அதிக பருமன் உள்ள இந்த பருத்தி ரோமக் கலப்புத்துணி குளிர்காலத்திற்கு மிகவும் சிறந்தது. மனங்கவரும் வர்ண பேதங்கள் பல உள்ளன.

ப்ளெயின் நிறங்கள் 29/30"—கெஜம் ரூ. 3/10
பைஜாமா கோடுகள் 29/30"—கெஜம் ரூ. 3/10
ப்ளெயின் நிறங்கள் 35/36"—கெஜம் ரூ. 4/5
ப்ரிண்டுகள் 29/30"—கெஜம் .. ரூ. 4/4
செக் 29/30"—கெஜம் .. ரூ. 4/1

விற்பனை வசி பிரத்தியேகம்



தி பெங்களூர் உல்லன், காட்டன் அண்ட் ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

ஏஜெண்டுகள், செக்ரடரீஸ் அண்ட் ட்ரெஷரர்ஸ்:
பின்னி அண்ட் கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

# ரேக்ளா ரங்கன்

ஜெகசிற்பியன்

கேட்பதற்கு முன்னும் சிரித்தாள், கேட்டுவிட்டும் சிரித்தாள் கண்ணம்மா! "என் கண்ணாலத்தைப் பற்றி நீ ஏன் இத்தனை கரிசனப் படறே?"

புழுதியில் ஒருக்களித்துப் படுத்துக் கிடந்த காளை மாட்டின் நான்கு கால்களையும் சேர்த்துக் கட்டி, அதன் பின்னங்கால் ஒன்றில் லாடம் அடித்துக் கொண்டிருந்த ரங்கன் புன்முறுவலுடன் நிமிர்ந்தான். "கோவிச்சுக்காதே கண்ணம்மா! சும்மாத்தான் கேட்டேன்!" என்றான்.

கண்ணம்மா இதோடு விடவில்லை. குடை சாட்டி வைத்திருந்த வண்டியின் சக்கரத்தை அசைத்துப் பார்ப்பது போல் பாவனை செய்து கொண்டு, "அதெப்படி ஒரு வயசுப் பெண்ணைப் பார்த்து ஓர் மனுசன் அந்த மாதிரி கேட்கலாம்?" என்றாள்.

ரங்கனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. தளர்ந்து அவிழும் நிலையிலிருந்த முண்டாசைக் கட்டியவாறே, "உன்னிடம் கேட்டது தப்புத்தான்! கேட்க வேண்டிய ஆளிடம் அதைக் கேட்டிருக்க வேணும்!" என்றான்.

"ஓகோ! எங்க அப்பாரு குணம் இவருக்கு இன்னும் தெரியாது போல இருக்கு!"

"தெரிஞ்சா என்னவாம்?"

"முதுகிலே டின்னு கட்டிப்பிடுவாரு!"

"என் முதுகிலே டின்னு கட்டினால், உனக்கும் உன் அப்பாருக்கும் சேர்த்து நான் லாடம் அடிச்சுப்பிடுவேன்!"

கண்ணம்மாவுக்கு வெட்கமாகி விட்டது. "மாடு கீழே கிடந்து பெருமூச்சு விட்டுக்கிட்டு இருக்கு! சீக்கிரமா லாடம் அடிச்சு ஆவட்டும்!" என்று அதிகாரக் குரலில் சொன்னாள்.

ரங்கன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவள் தன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள். கீழே உட்கார்ந்து, மாட்டின் கால்களை ஒரு மரத் துண்டின்மேல் இழுத்து வைத்து அவற்றின் லாடம் அடித்த குளம்புகளின் ஓரம் நீட்டிக் கொண்டிருந்த ஆணி முனைகளை அரத்தால் ராவ ஆரம்பித்தான். வாலைச் சுழற்றி தெம்பித் திமிறியது மாடு.

"இதற்கு முன்னாலே லாடம் அடித்துப் பழக்கப்பட்ட மாடாயிருந்தால் இத்தனை ரோதனை பண்ணாது. புது மாட்டுக்கு லாடம் அடிக்கிறதே, பெரிய பேஜார் புடிச்ச வேலை!" என்று சொல்லிக் கொண்டே கண்ணம்மாவை ஓரக் கண்ணால் பார்த்தான் ரங்கன்.

"அப்படீன்னா இதற்குத் தனி 'ரேட்'டு கேட்பாயோ?" என்றாள் கண்ணம்மா.

"சே, சே! மாரிமுத்துவோட செல்ல மாட்டுக்கு லாடம் அடிக்கக் கூலியா கேட்பேன்? இதன் காலைப் பிடிக்கிற பாக்கியம் கிடைச்சுதே. இது ஒண்ணே போதாதா?"

கண்ணம்மா அவன் பேச்சிலுள்ள 'பொடி'யைப் புரிந்து கொண்டு மௌனமாக இருந்து விட்டாள்.

சுத்தமாக லாடம் அடித்து முடித்துவிட்டு மாட்டின் கால் கட்டை அவிழ்த்துவிட்டான் ரங்கன். கடைவாய் வழியே நுரை தள்ளிப் படுத்துக் கிடந்த மாடு ஒரு துள்ளுத் துள்ளி எழுந்து நின்றது. கண்ணம்மா ஓடிப்போய், வண்டியின் உள்ளே ஜமுக்காளத்தின் அடியில் பரப்பி வைத்திருந்த புல்லில் கொஞ்சம் அள்ளி வந்து மாட்டின் எதிரே போட்டாள்.

தன் தொழிற் கருவிகளை ஒரு கோணித் துண்டில் வைத்துச் சுருட்டிக் கொண்டிருந்த ரங்கன் நிமிர்ந்து, "கண்ணம்மா! எங்கே உன் அப்பா?" என்று கேட்டான்.

"பலகாரம் பண்ணப் போனவரு! அங்கே எவனோடாவது வாயாடிக்கிட்டு இருப்பாரு!" என்று சலிப்புடன் சொன்னாள் கண்ணம்மா.

"ரொம்ப நல்லதாகப் போச்சு!"

"எதற்கு?"

"நாம் இரண்டு பேரும் இன்னும் கொஞ்ச நேரம் தனியாக நின்று பேசிக்கிட்டு இருக்கலாமில்லே?"

"ஐய!....ஆசையைப் பாரு!"

புல்லை அசை போட்டுக் கொண்டிருந்த மாட்டின் வயிற்றுப் பக்கமாய் மறைந்து நின்று கொண்டாள் கண்ணம்மா. தூரத்தில், கிழவன் மாரிமுத்து 'லொக்கு லொக்'கென இருமிக் கொண்டே புகை பிடித்த வண்ணம் வந்து கொண்டிருந்தான்.

"என்ன தம்பி, வேலை முடிஞ்சுடுச்சா?" என்று கேட்ட மாரிமுத்து, தன் வண்டி மாட்டின் அருகில் போய் உட்கார்ந்து, அதன் முன்னங்கால் குளம்பைத் தூக்கிப் பார்த்தான். பிறகு, "பலே, பலே! குளம்புக்குத் தோதா லாடம் படிஞ்சமாயிருக்கே! அதோ, ஈ ஓட்டிக்கினு குந்தியிருக்கானே காதர் சாயபு, அவன்கிட்டே கொடுத்திருந்தால், பறங்கிக்காரர் பூட்ஸுக்கு லாடம் அடிக்கிறாப் போலே தூக்கா அடிச்சுக் கொடுத்திருப்பான்! மாட்டை வண்டியிலே கட்டி, இரண்டு சவாரி போய் வர்றதுக்குள்ளே, லாடம் வேறே, குளம்பு வேறேயா கழிஞ்சுடுப்பிடும்!" என்று அவன் கூறிச் சிரித்தான்.

வண்டி ஓட்டும் தொழிலில் முப்பது வருஷ அநுபவஸ்தனான மாரிமுத்து, தன் கைத் திறமையை மெச்சிப் பேசியதைக் கேட்ட ரங்கனுக்கு நெஞ்சு கொள்ளாப் பெருமையாகி விட்டது. அவன் கண்ணம்மாவைப் பட்டும் படாததுமாகப் பார்த்துக் கொண்டே, "உன்னைப்போல வேலைத் திறம் தெரிஞ்ச ஆளுகளை விரல் விட்டு எண்ணிப்பிடலாம். சவடால்த்தனம் பண்ணி, பேச்சுப் பந்தல் போடுகிறவன்களுக்குத்தான் இது காலமாயிருக்கு" என்று பெரிய மனிதத் தோரணையில் சொன்னான்.

"அது கெடக்கட்டும். இதற்குக் கூலி எவ்வளவு?" என்று கேட்டான் மாரிமுத்து.

"கூலியா? எனக்கு ஒண்ணும் வேண்டாம்! நீ வண்டியிலே மாட்டைக் கட்டி ஓட்டிக்கிட்டு போ!" என்றான் ரங்கன்.

"வேணுமா? நல்ல வேடிக்கைதான்! எனக்கு இருக்கிறப்பலே உனக்கும் வயிறு இருக்கே தம்பி!"

"சும்மா இருக்கட்டும்! இன்றைக்குக் காலையிலே, ஒரு ஜதை மாட்டுக்கும், ஒரு குதிரைக்கும் லாடம் அடிச்சேன். மூன்று ரூபாய் கிடைச்சுது. இன்றையப் பொழுதுக்கு அது போதும். தேவைப்பட்டால், மாலையில் கேட்டு வாங்கிக்கறேன். நீ போ மாமா!" என்றான் ரங்கன். அவன் கடைசியாக 'மாமா' என்று சொன்னதைக் கேட்டுக் கண்ணம்மாவுக்குச் சிரிப்பு வந்து விட்டது.

"வம்பு பண்ணாதே தம்பி! லாடம் அடிச்சதுக்குக் கூலி வேணும்னு சரி; கருமாங்கிட்ட வாங்கின லாடத்துக்காவது கிரயம் வாங்கிக்கணுமில்லே? அது கூடவா சும்மா வருது?"

"உனக்குத் தெரியாதா? லாடப்பட்டறை தங்கவேலு, எனக்குச் சும்மாத்தான் லாடம் கொடுக்கிறாரு! வாரத்துக்கு எட்டு ஜதை மாட்டு லாடம், நாலு ஜதை குதிரை லாடம் கொடுத்திடுவாரு!"

"சும்மாவா?"

"ஆமாம்."

"அது ஒரு தமாசு மாமா! அந்தத் தங்கவேலுவுக்கு ஒரு பொண்ணு இருக்கு. அந்தப் பொண்ணை என் தலையிலே கட்டிட்டனும்னு திட்டம் போட்டிருக்கிறாரு!"

"ஓகோ!" என்று வாய்விட்டுச் சிரித்தான் மாரிமுத்து. ரங்கனும் பலமாகச் சிரித்து விட்டான். ஆனால் கண்ணம்மாவின் முகம் மட்டும் வாடித் துவண்டது.

"உன்பாடு யோகம்தான், தம்பி!" என்று எழுந்தான் மாரிமுத்து.

"அட, நீ ஒண்ணு மாமா! அந்த அழுகை மூஞ்சிப் பெண்ணை எவன் கட்டிக்குவான்? குதிரை லாடம்போல வாயும், மாட்டு லாடம் போலப் பல்லும் பார்க்கச் சகிக்காது!.... சும்மா, கிடைச்ச வரைக்கும் உதவி பெறலாம் என்று 'கம்'முன்னு இருக்கேன்!"

"அப்போ, நீ பெரிய ஆளுதான்!"

மாரிமுத்து சிரித்தான். கண்ணம்மாவின் முகம் இப்போது கொஞ்சமாக மலர்ந்தது.

"ஏன் மாமா! இந்த மாட்டை எப்போ பிடிச்சே?" என்று கேட்டான் ரங்கன்.

"இப்பத்தான்; ஒரு வாரமாவுது."

"இந்த ஊரிலே இதுமாதிரி ஜாதி கிடைக்காதே! இது நாகப்பட்டினம் மோழி மாடு இல்லையா?" என்றான் ரங்கன்.

"ஆமாம்! ரொம்ப நாளாக இந்த மாதிரிக் கன்று ஒண்ணு வாங்கணும்னு இருந்தேன். அகஸ்மாத்தாக மைலம் சந்தையிலே கிடைச்சுது. விலை என்ன தெரியுமா? நூற்றைம்பது ரூபாய்?"

"எத்தனை பல்லு போட்டிருக்கு?"

"மூணும் பல்லு இப்பொழுதுதான் மூனா கட்டியிருக்கு!"

"நல்ல அதிர்ஷ்டம்தான்!"

"எல்லாம் இந்தப் பெண்ணின் அதிர்ஷ்டம் என்று சொல்லு!"





கண்ணம்மா ரங்கனைப் பார்த்துக் கொண்டே மெல்லச் சிரித்தாள்.

'' ஆமாம் தம்பி! தாயில்லாப் பெண்ணை வீட்டிலே வைச்சுக்கிட்டு எவ்வளவு காலம் காபந்து பண்ண முடியும்? எவன் கிட்டேயாவது பிடிச்சுக் கொடுக்கறப்போ இந்த மாட்டையும் வண்டியையும் அவனுக்குச் சீதனமா கொடுத்துடலாம்னு இருக்கேன்! எதுக்கும் காலம், நேரம் வரணுமில்லையா ?''

'' கவலைப்படாதே, மாமா! சீக்கிரமா ஒரு நல்ல சேதி கிடைச்சுடும்!'' என்று கண்ணம்மாவைப் பார்த்தவாறு சொன்னான் ரங்கன். அவள் கன்னஞ் சிவக்கத் தலையைக் குனிந்து கொண்டாள்.

''உன் வாக்குப்படியே ஆகட்டும், தம்பி!'' என்று சொல்லி விட்டு மாட்டின் மூக்கணாங் கயிற்றைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் வண்டியில் பூட்டுவதற்கு ஆரம்பித்தான் மாரிமுத்து.

இப்படிப்பட்ட கவலையற்ற வாழ்க்கை நடத்திக் கொண்டு வந்த ரங்கனிடம் ஒரே ஒரு பழக்கம் மட்டும் ஆழமாகப் பதிந்து போயிருந்தது. அந்தப் பழக்கம் அப்படி ஒன்றும் கேடானதல்ல. ரங்கன் ஒரு 'ரேக்ளா ரேஸ்' பிரியன்.

வருஷா வருஷம் சென்னையில் நடக்கும் பார்க்பேர் கண்காட்சியிலும், வேறு பல கொண்டாட்டங்களிலும் ரங்கன் ரேக்ளா வண்டிப் பந்தயத்தில் கலந்து கொள்வான். இந்தப் பந்தயங்களில் இரண்டொரு முறை ஜெயித்துப் பரிசும் வாங்கியிருக்கிறான். இதுதவிர, தனிப்பட்டமுறையில்சில ரேக்ளா நிபுணர்களைத் தோற்கடித்தும் இருக்கிறான். அவனிடம் இதற்காகவே ஓர் அருமை ரேக்ளா வண்டியும், நல்ல ஜாதி காளைமாடு ஒன்றும் இருந்தன. போன வருஷம்தான் அந்த மாடு திடீரென்று கோமாரி நோய் கண்டு செத்து விட்டது. ரங்கனுக்கு இது பேரதிர்ச்சியாகவே ஆகி விட்டது. மீண்டும் ஒரு மாடு வாங்குவதற்கு அவன் எவ்வளவோ முயன்றான். ஆனால் இன்று வரையில் அம்முயற்சி கைகூடவில்லை.



ஒரு மாதம் ஓடி மறைந்தது.

தினமும் கண்ணம்மா தன் தந்தையிடம், '' அப்பா! மாட்டுக்கு லாடம் அடிக்கலாமா! அது தேய்ஞ்சு போய், மாடு நொண்டியடிக்குதே!'' என்று நச்சரித்துக் கொண்டே இருந்தாள். இந்தச் சாக்கிலாவது ரங்கனைக் கண்டு பேசலாமே என்பது அவளுடைய ஆசை. ஆனால் மாரிமுத்து இதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே போய் விடுவான்.

ஒரு நாள் மாரிமுத்து தன் மகளிடம் சிரித்தவாறு சொன்னான்: '' என்ன கண்ணம்மா! இன்னும்கூட நீ சிறு பிள்ளைத்தனமாகவே பேசறே! அந்த ரங்கனோட ஆத்தாள் என் கிட்டே வந்து பெண் கேட்டிருக்கா! கொடுக்கிறதாக வாக்களிச்சுட்டேன்! இனிமேல் அவன்கிட்டே லாடம் அடிக்கப் போகலாமா? என்ன இருந்தாலும் அவன் என் மருமகனாக வரப் போறவனாச்சே!... இன்னைக்கு அந்தக் காதர் சாயபு கிட்டேதான் நம்ப வண்டி மாட்டுக்கு லாடம் அடிக்கணும்னு இருக்கேன்!''

கண்ணம்மாவுக்குத் தன் தந்தையின் எதிரே நிற்க வெட்கமாகிவிட்டது. அவள் துள்ளிக் குதித்தபடி உள்ளே ஓடி விட்டாள்.

தாயின் சந்தோஷம் அதன் வாயில் இருக்கிறது; பெண்ணின் சந்தோஷம் அவள் முகம் பார்க்கும் கண்ணாடியில் இருக்கிறது— கண்ணம்மா இப்போது ஒரு சிறிய கண்ணாடியில் தன் முகத்தை அப்படியும் இப்படியுமாகச் சாய்த்து அழகு பார்த்துக் கொண்டாள்!....

இந்தச் சம்பவம் நடந்த மறு வாரம் அதாவது, பார்க்பேர் ரேக்ளா பந்தயத்துக்கு முந்திய தினம்.

மாரிமுத்துவும் ரங்கனும் ஒரு டீக்கடையில் உட்கார்ந்து டீ குடித்துக் கொண்டிருந்தனர். ரங்கனுடைய அன்றையப் போக்கே ஒரு தினுசாக இருந்தது.

மாரிமுத்து, '' ஏன், அப்பா! ரேக்ளா ரேஸிலே கலந்துக்குவாயல்லே ?'' என்றான்.

''பின்னே கலந்துக்காமல் இருப்பேனா?'' என்றான் ரங்கன் அலட்சியமாக.

''அதுதானே பார்த்தேன்!.... மாலையில் மறக்காமல் வண்டி ஸ்டாண்டுக்கு வா! நம்ப மாட்டைத் தருகிறேன்.''

''அந்தச் சோப்பளாங்கிச் சொத்தை மாட்டை நீ எனக்குச் சும்மா கொடுத்தால் கூட வேணும்!'' என்றான் ரங்கன்.

''அப்போ....''

''உனக்கு விஷயம் தெரியாதாக்கும். எங்க லாடப்பட்டறை தங்கவேலு எனக்குன்னு ஒரு ரேக்ளா மாடு புடிச்சுக் கொடுத்திருக்கிறாரு!''



## முக்கியமாக நான் கவனிப்பது...

...'' 'ஹாஸலீன்' ஸ்னோ'' வாங்கும்பொழுது,
அதைச் சுற்றியிருக்கும் வெள்ளி நிற
அலுமினியத் தகடு, மற்றும் மேற்பாகத்தில்
காணப்படும் நீல நிற யூனிகார்ன் சின்னம், இவை
ஒழுங்காக இருக்கின்றனவா என்று சோதித்தே
வாங்குகிறேன். இதுவே நேர்த்தியான
சுத்தத்தன்மைக்கு உத்திரவாதம்
அளிக்கும் அசல்'' 'ஹாஸலீன்' ஸ்னோ''
என நான் தீர்மானிக்கிறேன்.

# "'HAZELINE' SNOW"

(TRADE MARK)



"'ஹாஸலீன்' ஸ்னோ" (டிரேட் மார்க்)

பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.

பி. ஓ. பாக்ஸ், 290, பம்பாய்

மாரிமுத்து அவனை வியப்புடன் பார்த்து, ''ஓகோ!'' என்று இழுத்தான். ரங்கன் மறுபடியும் அதே அலட்சியச் சிரிப்புடன் சொன்னான்: ''தங்கவேலு வாங்கிக் கொடுத்த மாட்டுக்கு மட்டும் நான் சொந்தமில்லே; அவருடைய பொண்ணையும் நான் தான் கட்டிக்கப் போறேன்!''

இதைக் கேட்டதும் கல்லாய்ச் சமைந்து விட்டான் கிழவன். ''நிசந்தானா, ரங்கா?'' என்று சற்று உரக்கவே கேட்டான்.

''பின்னே உன்கிட்டே வந்து விளையாடறேனா?'' என்று சொல்லிக்கொண்டே எழுந்து போய் விட்டான் ரங்கன்.

இந்த விஷயம் இப்படியே விடுபட்டிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். ஆனால், இந்த உலகத்தில் அப்படித்தான் நடப்பதில்லையே! கடுகளவு நிகழ்ச்சியாயினும் அதுவே சில சமயம் கர்ண கடூர வடிவம் எடுத்து விடுவது சகஜமல்லவா?

ரங்கன் தன் பெண்ணை மணந்து கொள்ளாமல் போனது பற்றிக்கூட மாரிமுத்துவுக்கு ஒரு பெரிய விஷயமாகத் தோன்றவில்லை; தனது அருமை மாட்டைச் 'சோப்பளாங்கிச் சொத்தை மாடு' என்று சொல்லிவிட்டானே? இதுதான் அவனுக்குப் பெருத்த அவமானமாகப் போய் விட்டது!

கண்ணம்மாவுக்கு இந்த விஷயம் மறுநாள் காலை வரை தெரியாமல்தான் இருந்தது. பிறகு தன் தந்தையின் வாயிலாகவே ஒருவாறு கேட்டுத் தெரிந்து கொண்டாள். அவள் மனம் அதிர்ந்தது. கண்கள் ஆறென நீரைப் பெருக்கின. அன்று மத்தியானம் அவள் கேட்ட செய்தி இன்னும் அதிர்ச்சியைக் கொடுத்து விட்டது!

அந்தச் செய்தி இதுதான்:

மாரிமுத்து இன்று ரேக்ளா பந்தயத்தில் கலந்து கொள்ள முடிவு செய்திருந்தான்! இதுமட்டுமல்ல, ரங்கனும் மாரிமுத்துவும், நான்கு வண்டிக்காரர்களைச் சாட்சியாக வைத்துக் கொண்டு, ஒரு விசித்திரமான பந்தயம் கட்டிக் கொண்டனர். இந்த ரேக்ளா வண்டிப் பந்தயத்தில் மாரிமுத்து ஜெயித்து ரங்கன் தோற்றால், அவன் கண்ணம்மாவைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்; ரங்கன் ஜெயித்து மாரிமுத்து தோற்றால், அவன் இந்த ஊரிலேயே இல்லாமல் தன் மகளுடன் எங்கேயாவது ஓடிவிட வேண்டும்!

இருவரும் இந்தத் திட்டத்தை மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டனர்.

அன்று மாலை மூன்று மணி.

மூர்மார்க்கெட் பின்புறமுள்ள பார்க்பேர் எக்ஸிபிஷன் மைதானத்தில் ஏராளமான ஜனங்கள் குழுமியிருந்தனர்.

விசாலமான அந்த மைதானத்தின் நடுவே, பந்தயத்துக்கென ஒழுங்காக இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. சுமார் பதினைந்து ரேக்ளா வண்டிகள் வரிசையாக நின்று கொண்டிருந்தன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான வர்ணம் பூசப்பட்டுப் பளபளத்துக் கொண்டிருந்தன. மாரிமுத்துவின் வண்டியும், ரங்கனின் வண்டியும் ஒன்றன் பக்கத்தில் ஒன்றாக நின்று கொண்டிருந்தன!

ரங்கன் அன்று ரொம்பவும் குஷியாகக் காணப்பட்டான். அவன் உடுத்தியிருந்த உடையும் அப்படித்தான் இருந்தது. உண்மையில் அவனுடைய வண்டி மாடு மிகவும் கம்பீரமாகவே இருந்தது. மாரிமுத்துவின் மோழி மாட்டை அதனுடன் ஈடு சொல்ல முடியாது!

மாரிமுத்து சர்வ ஆக்ரோஷத்துடன் முகத்தைச் சுளித்து வைத்துக் கொண்டு தன் மாட்டைத் தட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தான். இந்தப் பந்தயத்தில் கலந்து கொள்ள வந்திருப்பவர்களில் இவன்தான் வயதான கிழவன்! மற்றவர்களெல்லாம் சரியான பருவக் காளைகள். இதைப் பார்க்க ஜனங்களுக்கு ரொம்பவும் வேடிக்கையாக இருந்தது. பந்தயம் துவங்கும் நேரம் நெருங்கியது.

இந்தச் சமயத்தில், கூட்டத்திலிருந்து கண்ணம்மா வெகு வேகமாகத் தன் தந்தையை நோக்கி ஓடிவந்தாள். அவள் கையில் ஒரு சிறு செம்புப்பாத்திரம் இருந்தது.

கண்ணம்மா, ரங்கனின் வண்டிக்கும், மாரிமுத்துவின் வண்டிக்கும் நடுவே வந்து நின்று கொண்டு, ''அப்பா! இந்தக் காப்பியைக் கொஞ்சம் குடிச்சிடு. காலையிலேயிருந்து ஒண்ணுமே சாப்பிடாமல் இருக்கிறியே!'' என்று பரபரப்புடன் சொன்னாள். அவள் முகம் ஒருவிதப் பீதியால் வெளுத்து விட்டிருந்தது. மாரிமுத்து சிரித்துக் கொண்டே அதை வாங்கிக் குடித்தான். கண்ணம்மா இங்கே









வேதாரண்யம் கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம் ''நசிகேத நிவாஸ்'' மாணவியர் விடுதியைக் கல்வி மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியம் 18-11-56 தேதியன்று திறந்து வைத்தபோது எடுத்த படம்.

வருவதைக் கண்டதுமே, ரங்கன் தன் வண்டியின் மறுபுறம் போய்த் திரும்பி நின்றுகொண்டான். மனச்சாட்சியின் சித்திரவதையை அவனால் தாள முடியவில்லை.

காலில் ஏதோ முள் குத்தியதை எடுப்பது போல் சட்டெனக் கீழே குனிந்தாள் கண்ணம்மா. ரங்கனின் வண்டி மெள்ள அசைந்தது. அவன் திரும்பினான். அதற்குள் அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு நிமிர்ந்தாள். மாரிமுத்து காப்பி குடித்து விட்டுக் கொடுத்த பாத்திரத்தை வாங்கிக் கொண்டு கண்ணம்மா அங்கிருந்து ஓடியே விட்டாள்!

பந்தயத்தைக் கண்காணிப்பவர் வந்தார். இரட்டைக் கமண்டலங்கள் போல் வண்டிகளின் நடுவில் இருந்த குந்துமணைகளில் பந்தயச் சாரதிகள் ஏறி உட்கார்ந்தனர். பாண்டு வாத்தியம் முழங்க ஆரம்பித்தது. மத்தியஸ்தர் 'ரெடி' என்றார். ரேக்ளா வீரர்கள் அவரவர் வண்டி மாட்டின் மூக்கணாங் கயிற்றை இழுத்துப் பிடித்தனர். வேட்டுச் சத்தம் மட்டுமே கிளப்பும் ரிவால்வரை மேலே உயர்த்திப் படீரெனச் சுட்டார்.

பதினைந்து ரேக்ளாக்களும் குபீரெனக் கிளம்பி ஓடின! ரங்கன் தன் வண்டிச் சக்கரத்தின் இடையே சாட்டைக் கோலை விட்டுக் 'கடகட' வென்ற ஒலியை எழுப்பி, 'ஹாய்...' என்று ஹுங்காரக் குரலெடுத்துக் கூவினான். மாரிமுத்துவோ தன் மாட்டின் வாலை மடக்கி வாயில் வைத்துக் கடித்து 'ஹோய்...' என்று பெருங்குரல் கூட்டிக்கர்ஜித்தான். மைதானம் எங்கும் புழுதிப்படலம் கிளம்பி, உற்சாக கோஷமும் ரேக்ளா ஓட்டிகளின் ஆவேசக் கூச்சலும் ஒன்றாகக் கலந்து அந்தப் பிரதேசத்தையே கிடுகிடுக்க வைத்தது....

சிட்டாகப் பறந்த வண்டிகளின் வேகம் இப்போது கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்தது. நாலுகால் பாய்ச்சலில் ஓடிய மாடுகளுக்கெல்லாம் நுரை தள்ளி விட்டது! ஆனால், ரங்கனின் வண்டியோ?...அது எல்லா வண்டிகளுக்கும் முன்னால் வெறியாவேசத்தோடு பறந்து கொண்டிருந்தது! அதன் பின்னே, மாரிமுத்துவின் வண்டி, சுமார் ஒரு கஜ தூர வித்தியாசத்தில் காற்றெனக் கடுகிக் கொண்டிருந்தது!....

ரங்கனுக்கு வெற்றியா? மாரிமுத்துவுக்கு வெற்றியா? இரண்டு பேருடைய வண்டிகளும் சரிநிகர் அளவில் வந்து விட்டன! எந்த நிமிஷமும் ஒன்றை ஒன்று முந்தலாம்; அல்லது இரண்டுமே வெற்றி, தோல்வி இன்றி 'வின்னிங்போஸ்டை'த் தாண்டலாம்! இதோ வெற்றிக் கம்பம் நெருங்கிவிட்டது!...

'படார்! —

ஹா என்ற பேரொலி எங்கும் எழுந்து எதிரொலித்தது. ரங்கனின் வண்டிச் சக்கரம் ஒன்று படீரெனக் கழன்று தெறித்துச் சாய்ந்தது! அவன் அந்தச் சக்கரத்தோடேயே தூக்கியெறியப்பட்டுப் பத்தடிக்கு அப்பால் போய் விழுந்தான்! வண்டியும் மாடும் ஒர்ரென்று சுழன்று கீழே கவிழ்ந்தன!....

கிழவன் மாரிமுத்து ஜெயித்து விட்டான்!

இரண்டு நாட்கள் வரை பிரக்ஞையே இன்றிக் கிடந்த ரங்கன், இப்போதுதான் மெள்ளக் கண் திறந்து பார்த்தான். அவன் அருகில் அவனுடைய தாயாரும், மாரிமுத்துவும் சோகமே உருவாய் அமர்ந்திருந்தனர். கண்ணம்மா அவன் தலைமாட்டில் உட்கார்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள்.

''கண்ணம்மா! உனக்கு நான் பெரிய துரோகம் செய்ய இருந்தேன்! அதற்குக் கடவுளாகப் பார்த்துத்தான் எனக்கு இந்தத் தண்டனையைக் கொடுத்திட்டாரு!...'' என்று கனவு கண்டு உளறுபவனைப் போல் முணுமுணுத்தான் ரங்கன்; அவன் கண்கள் கலங்கின.

இதைக் கேட்டதும் கண்ணம்மாவின் உடலும் உள்ளமும் ஒரு குலுங்குக் குலுங்கின.

அவன் சொல்வதற்கு முன்னும் அழுதாள்; சொல்லிவிட்டும் அழுதாள்: ''நீ எனக்கு ஒரு துரோகமும் செய்யல்லே மச்சான்! நான் தான் உனக்குப் பெரிய துரோகம் செய்தேன்!...உன்மேலே கொண்ட ஆசையாலே, உன்னையே கண்ணாலம் பண்ணிக்கணும்னு, நான்தான் யாருக்கும் தெரியாமல் உன் ரேக்ளா வண்டிச் சக்கரத்தின் கடை ஆணியைப் பாதியிலே பிடுங்கி வைச்சேன்!''

இருவர் கண்களிலும் பெருகிய கண்ணீர் இரு உள்ளங்களையும் சேர்த்து வைத்தது.

# வாழ்க்கை லக்ஷியத்தின் முக்கியமான தருணத்தில்...



ஸ்திரீகளின் வாழ்க்கையின் முக்கியமான தருணம் பிரசவ சமயமே. இச்சமயத்தில் அவர்களுக்கு ஓய்வும் ஒழுங்கான போஷாக்கும் மேலும் விஷ நோய்களின் அபாயத்திலிருந்து சரியான பாதுகாப்பும் தேவை. பிரசவ சமயத்தில் சருமத்தின் மேலோ அல்லது கர்ப்பாசய மார்க்கத்திலோ உண்டாகும் மிகச் சிறிய வெட்டுக்காயம் பிரசவ ஜுரம் மற்றும் இதர கொடிய துன்பங்களை விளைவிக்கக்கூடும் என்பதை எல்லோரையும் விட டாக்டர்களே நன்கு அறிவார்கள். அவர்களுடைய ஆலோசனையைப் பின்பற்றுங்கள். பிரசவ சமயத்தில் மிகவும் பத்திரமானதும், சிறந்த பாதுகாப்பளிக்கக்கூடிய கிருமிநாசினியான 'டெட்டால்' உபயோகியுங்கள்.




**நோய் வரும் முன்பே பாதுகாத்துக் கொள்ள—**




**இலவசம்**

'மாடர்ன் ஹைஜீன் பார் விமென்' என்ற புத்தகத்தை இலவசமாகப் பெற அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட், இலாகா FB-4, தபால் பெட்டி நெ. 664 கல்கத்தா-1 விலாசத்திற்கு எழுதுங்கள்

DI-4 AEL 193

---







# பேர்ல் பிராண்ட் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்



உத்தரவாதத்துடன் கூடிய பேர்ல் பிராண்ட் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் மிக உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை. சிறந்த வேலைப்பாடுடன் நேர்த்தியான அமைப்பும் கண்ணாடி போன்ற பளபளப்பும் கொண்டவை. அதிக உறுதியும், அந்தமும் கொண்ட இப் பாத்திரங்கள் ஆயுட்காலம் வரை நீடித்து உழைக்கக் கூடியவை. விலையும் குறைவு.



உங்களது உள்ளூர் வியாபாரியிடம் கேளுங்கள் அல்லது எங்களுக்கு நேரிட எழுதுங்கள்.

எல்லாக் கடிதங்களையும் ஆங்கிலத்தில் எழுதவும்






பேர்ல் மெட்டல் ஒர்க்ஸ், 20, வடி பந்தர் ரோடு, மஸகான், பம்பாய்-10

உள்ளத்திலே எழுந்த ஒரு வேகத்தில் அந்தக் கடிதத்தை எழுதி முடித்தான் சிங்காரம். தன் தந்தையை வஞ்சம் தீர்த்துவிட்ட பாவம் அவன் முகத்திலே பிரதிபலித்தது.

மீண்டும் ஒரு முறை தான் எழுதிய கடிதத்தின் வாசகத்தைப் படித்துப் பார்த்தான்.

'' சாமிக் கவுண்டர் அவர்களுக்கு,

முன்பின் அறியாத தங்களுக்கு ஒரு துயரச் செய்தியை அனுப்பும்படியான நிலை எனக்கு ஏற்பட்டதற்காக வருந்துகிறேன். தங்கள் மகன் சிங்காரம் சில தினங்களாக நோயுற்று அவஸ்தைப்பட்டு, நேற்று இரவு காலமானுன். இந்தக் கடிதம் தங்கள் கைக்குக் கிடைக்கும் போது, அவன் பிடி சாம்பலாகி யிருப்பான்.

முத்துசாமி ''

சிங்காரம் பேய்ச் சிரிப்பு ஒன்று சிரித்தான். அந்தக் கடிதம் தன்னுல்தான் எழுதப்பட்டது என்று தன் தந்தை அறிந்து கொள்ள முடியாதபடி, கோணலாகக் கிறுக்கி எழுதியதைக் கண்டு அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. நிச்சயம் இந்தக் கடிதத்தைத் தன் தநதை நம்பத்தான் வேண்டும்!

சிங்காரத்தின் வாய் முணுமுணுத்தது. 'என் தந்தை இந்தக் கடிதத்தைப் படிக்கட்டும். நான் மாண்டு போய் விட்டேன் என்று கதறட்டும். என் விருப்பத்தின்படி நடக்கச் சம்மதம் அளிக்கத் தவறியவர்கள் என் பெற்றோர்களாயிருந்தால் என்ன? வேறு யாராய் இருந்தால்தான் என்ன? என் விருப்பப்படி நான் யாரை மணக்கவிரும்பினேனே, அவளை மணக்கக் கூடாதாம். அவள் குடும்பத்திலே யாரோ ஒரு பெண் இளம் வயதில் தூக்குப் போட்டுக் கொண்டு தற்கொலை புரிந்து கொண்டாளாம். அதற்காக இந்தப் பொல்லாத உலகம் அந்தக் குடும்பத்துக்கே ஒரு களங்கத்தைக் கற்பித்து விட்டது! அப்படிப்பட்ட குடும்பத்தில் தோன்றிய பெண்ணை நான் மணப்பது கூடாது என்ற தடை எனக்கு.'




கடிதம் தபாலில் சேர்க்கப் பட்டது. சிங்காரத்தின் மனத்திலே சற்று அமைதி ஏற்பட்டது. தன் விருப்பத்தைப் பாழாக்கிய தன் பெற்றோரைச் சரியானபடி வஞ்சம் தீர்த்துக் கொண்ட மன அமைதிதான்.

மாணிக்கக் கவுண்டரின் பெண் ருக்மிணியை முதன் முதலில் கண்ட சிங்காரம் சொக்கிப் போனுன். உள்ளூர் உயர்நிலைப் பள்ளியில் முதல் படிவத்தின் ஆசிரியனான சிங்காரம், ஒருநாள் தன் வகுப்பில் ஒரு புது மாணவன் வந்து உட்கார்ந்ததைக் கண்டான். அவனுடன் சுமார் பதினெட்டு வயதுள்ள ஒரு பெண்ணும் வந்தாள். அந்த வகுப்பின் ஆசிரியர் ஒரு கிழவராக இருப்பார் என்று கற்பனை செய்து வைத்திருப்பாளோ என்னவோ அவள்! சிங்காரத்தைக் கண்டு, அதிசயத்தால் அவள் புருவங்கள் உயர்ந்தன. நாணம் கவ்விக் கொண்டது. ''ஸார்! இவன் என் தம்பி. இன்றுதான் பள்ளியில் சேர்த்தோம்'' என்றுள் அந்தப் பெண்.

சிங்காரத்துக்கும் அவளை அரை விநாடிக்கு மேல் நோக்க முடியாமல் வெட்கம் பிடித்துக் கொண்டது.

அன்று தொடங்கி, பிரதி தினமும் அவளை அவன் தன் வகுப்பறை வாசலில் சந்திக்கத் தவறுவதில்லை. அவள் பெயர் ருக்மிணி என்றும் இன்னும் திருமணம் நடைபெறவில்லையென்றும் அறிந்து கொண்டான். அவள் வாயிலாகத்தான் இன்னெரு விஷயமும் அறிந்தான். அவளுடைய அத்தை ஒருத்தி, இளம் வயதில் கல்யாணம் ஆகாத நிலையில் தூக்குப் போட்டுக் கொண்டு தற்கொலை புரிந்து கொண்டாள் என்றும், அது காரணமாகவே, தன்னை யாரும் மணக்க விரும்பவில்லையென்றும் ஒருநாள் கண்ணீர்விட்டபடியே கூறினுள் ருக்மிணி.

'' உன் அத்தை ஏன் தூக்கிட்டுக் கொண்டாளாம்?'' என்றுன் சிங்காரம்.

'' காரணம் எனக்குத் தெரியாது ஆனல் ஒன்று மட்டும் நிச்சயம். என் தந்தையே கூறினர், என் அத்தையின் ஒழுக்கத்தின் குறையில்லை என்று.''

ருக்மிணியின் கள்ளங் கபடமற்ற பேச்சைக் கேட்ட சிங்காரம் அவளிடம் இரக்கம் கொண்டான். ''ருக்மிணி! எனக்கும் மணமாகவில்லை. உன்னையே மணப்பேன், கவலைப் படாதே'' என்று அவளுக்கு அபயப் பிரதானமும் தந்தான்.

'' ஆமாம்! இம்மாதிரி எத்தனையோ பேர்கள் என் தந்தையிடம் கூறினர்கள். ஆனல் விஷயம் கேள்விப் பட்டதும்....''

'' ருக்மிணி! மற்றவர்கள் உன் அத்தையின் விஷயம் அறிவதற்கு முன் உன்னை மணப்

பதாய்க் கூறி, அறிந்த பின்பு, மறுத்தார்கள். ஆனால் நான் அதை அறிந்த பின்பு, உன்னை மணப்பதாய்க் கூறுகிறேன். தெரிகிறதா?'' என்றான் சிங்காரம்.

'' உங்கள் தாய் தந்தையர் இதற்கு...!''

'' உனக்கு ஏன் அந்தக் கவலை?''

*                *                *

''உனக்கு என்ன துணிச்சல்?'' என்று அவன் மீது பாய்ந்தார் சாமிக் கவுண்டர்.

'' அப்பா! நான் ருக்மிணியைத் தவிர வேறு யாரையும் மணக்க முடியாது. நீங்கள் என்ன வேணுமானாலும் செய்யுங்கள்!''

'' குழந்தை! அந்தக் குடும்பத்தின் விஷயம் உனக்குத் தெரியாதடா!'' என்று கெஞ்சினாள் தாய் காமாட்சி.

# கவலையும்

## ''சரஸன்''

'' அதைப்பற்றிஅக்கறையில்லை, அம்மா! மணக்கப் போகும் பெண் ஒழுங்கானவளா என்றுதான் பார்க்க வேண்டும். மற்றதெல்லாம் அவசியமில்லை. ருக்மிணி தங்கமானவள்'' என்று அடித்துப் பேசினான் சிங்காரம்.

அன்று பள்ளியில் தன் தம்பியை வழக்கம் போலக் கொண்டுவிட வந்த ருக்மிணியைச் சந்தித்தான் சிங்காரம். அவள் முகம் சோக முற்றுக் காணப்பட்டது.

'' என்ன ருக்கு? ஏன் வாட்டமுற்றிருக்கிறாய்?'' என்று கேட்டான்.

'' உங்களுக்கும் உங்கள் தகப்பனாருக்கும் என் பொருட்டு நேற்று வாக்குவாதம் நடந்ததை அறிந்தேன். ஏன் என்னால் உங்களுக்குச் சங்கடம்? என் தலையெழுத்தைப் போல நடக்கட்டும். என் தந்தை என்னைச் சிறிது காலம் என் சிற்றன்னையின் வீட்டுக்கு அனுப்பத் தீர்மானித்து விட்டார். இன்று மாலை புறப்படுகிறேன். தயவுசெய்து என்னை மறந்து விடுங்கள்.'' ருக்மிணியின் விகப்பல் சிங்காரத்தின் உள்ளத்தையே உலுக்கி விட்டது. பேசக் கூடச் சக்தியற்ற நிலையில் இருந்தான் சிங்காரம்.

ருக்மிணி யில்லாமல் அவனால் இனி ஒரு கணம் அங்கு இருக்க முடியாது என்று தோன்றியது. உடனே தலைமை ஆசிரியரைக் காணச் சென்றான். தன்னை வெளியூருக்கு மாற்றி விடுமாறு வேண்டினான். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலிருந்தது. அவன் தலைமை ஆசிரியரை மாற்றல் கேட்டது. ஏனெனில், மேலிருந்து, அன்று காலைதான் தன் பள்ளியிலிருந்து ஒரு ஆசிரியரை மற்றொரு ஊரில் உள்ள பள்ளிக்கு மாற்றுமாறு தலைமை ஆசிரியருக்கு உத்தரவு வந்தது. எனவே சிங்காரம் வேறு ஊருக்கு மாற்றப்பட்டான். ருக்மிணி தன் ஊரைவிட்டுப் போய் விட்டது ஒன்று. தன் பெற்றோர் தன் விருப்பத்துக்கு இணங்க மறுத்தது மற்றொன்று. இவ்விரண்டும்சேர்ந்துசிங்காரத்தைஅவ் வூரின் மீதேவெறுப்புக்கொள்ளச் செய்து வெளியூருக்கு மாற்றலாகிச் செல்லுமாறு தூண்டியது. தன்பெற்றோரிடம்சொல்லிக் கொள்ளாமலேயே புறப்பட்டான் புது ஊருக்கு. அவன் தந்தை சாமிக் கவுண்டரும் மிருந்த பிடிவாதத்துடன் சற்று விறைப்பாகவே இருந்தார்.

சிங்காரத்துக்கு எத்தனையோ பேர் பெண் கொடுக்க முன் வந்தார்கள். ஒன்றுக்கும் அவன் பிடி கொடுக்கவில்லை. அவனுடைய தாய் மட்டும் பல தடவைகள் கெஞ்சினாள். அவன் அசையவில்லை. '' அம்மா! ருக்மிணியைத்தான் மணக்கப் போகிறேன். நீ போய் வா!'' என்று கூறிவிட்டான்.

மறுமுறை தாயுடன் தந்தையும் வந்தார். ''சிங்காரம்! நீ ஆசைப்படும் ருக்மிணிக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. யாரோ ஒரு வயதானவனுக்கு அவளை மணம் செய்து கொடுத்து விட்டார்கள். நம் தூரபந்து ஒருவர் உனக்குப் பெண்ணைக் கொடுக்க விரும்புகிறார். என்ன சொல்கிறாய்?'' என்றார்.

தூக்கிவாரிப் போட்டது அவனுக்கு. 'ஆ! ருக்மிணிக்கு மணம் முடிந்துவிட்டதா? கிழவனுக்கா அவளை மணம் முடித்தார்கள்?' முகம் சிவந்தது அவனுக்கு. ''அப்பா! ஐயோ! ஒரு கபடமற்ற இளம் பெண்ணின் வாழ்வைக் கெடுத்து விட்டீர்களே!'' என்று கத்தினான். நிதான புத்தியை இழந்து விட்ட நிலையில் தந்தையென்றும் பாராமல் வார்த்தைகளை அடுக்கி விட்டான்.

சாமிக் கவுண்டரின் முகம் வெடித்து விடும் போல் சிவந்து விம்மியது. ''துரோகி! உனக்குக் கல்யாணம் இல்லா விட்டால் போகட்டும். நீ என் மகன் அல்ல. நீ செத்து விட்டாய் என்று இப்போதே முழுக்குப் போடுகிறேன்'' என்று படபடப்புடன் கூறிவிட்டுப் புறப்பட்டு விட்டார், காமாட்சியையும் அழைத்துக் கொண்டு. அதன் பிறகு சிங்காரத்துக்கும் அவனுடைய பெற்றோர்க்கும் தொடர்பே இல்லாமற் போயிற்று.

சிங்காரத்துக்கு மட்டும் தன் தந்தையின் பேரில் ஏற்பட்ட கோபம் அடங்கவே யில்லை.

தன் கல்யாண விஷயத்தில் தன் விருப்பத்துக்கு மாறாக நடந்ததுமன்றி, ஒரு பெண்ணின் வாழ்வையும் பாழாக்கிய முழுப் பொறுப்பையும் அவர் மீது சுமத்தினான். "பாவம், எத்தனை மனம் உடைந்து போயிருந்தால், ருக்கு அந்தக் கிழவனை மணக்கச் சம்மதித்திருப்பாள்? ஐயோ! அவளுக்குக் கொடுத்த வாக்கையும் அல்லவா காற்றில் பறக்க விட்டேன்! என் தந்தையைச் சும்மா விடக்கூடாது. ஒரு பேதைப் பெண்ணின் மனம் தவிப்பதைப் போல அவர் மனமும் தவிக்க வேண்டும். அதற்கு ஒரு வழியையும் கண்டேன். நான் இறந்து விட்டது



போல ஒரு செய்தியைத் தந்தைக்கு அனுப்புவது. அவரும் தாயாரும் கதறும்படி செய்வது. என்னதான் அன்று தந்தை கோபத்தில் 'நீ என் மகன் அல்ல; நீ செத்து விட்டாய் என்று முழுக்குப் போடுகிறேன்' என்றுகூறினாலும் முற்றிலும்உண்மையில் அம்மாதிரி நடப்பதைப் பெற்ற மனம் விரும்புமா? சகிக்கத்தான் செய்யுமா...?" இவ்விதம் முடிவுக்கு வந்தான். அதன்படியே அவருக்குக் கடிதமும் எழுதித் தபாலில் சேர்த்தாவிட்டது.

அன்றிரவு எட்டு மணி இருக்கும். அவன் வீட்டின் கதவு தட்டப்பட்டது. திறந்து பார்த்த சிங்காரம் அயர்ந்து நின்றான். "ஆ, ருக்மிணி!" என்று கூவினான்.

ருக்மிணியுடன் அவள் தந்தையும் இருந்தார். எல்லாரும் உள்ளே வந்தார்கள்.

"ருக்மிணி! நான் பாவி! என் வாக்கை நிறைவேற்றத் தவறியவன். உன் நிலையில் நீ அந்தக் கிழவரை மணப்பதைத் தவிர வேறென்ன செய்திருக்க முடியும்?" என்றான் சிங்காரம் கம்மிய குரலில்.

ருக்மிணி, "என்ன? கிழவரா? இது என்ன விபரீதம்?" என்றாள் வியப்புடன்.

"ருக்கு, நீ ஒரு கிழவரை மணந்து கொண்டதாக என் தந்தை கூறினாரே!" என்றான் அவன் பரபரப்புடன்.

"அத்தனை அவசரபுத்தி எனக்கு இன்னும் ஏற்பட்டு விடவில்லை. தங்கள் வாக்குறுதியிலே இன்னும் நம்பிக்கை வைத்திருக்கிறேன். ஒரு வேளை, தங்கள் மனத்தை மாற்றுவதற்காகத் தங்கள் தந்தை கையாண்ட கற்பனையாயிருக்கலாம் இந்தச் செய்தி!" என்று கூறினாள் ருக்மிணி.

அடுத்து ருக்மிணியின் தந்தை சொன்னார்: "சிங்காரம்! உன் தகப்பனாரின் மனம் மாறி விட்டது. என் தங்கை தற்கொலை செய்து கொண்டதன் உண்மைக் காரணத்தைத் தமக்கு நம்பிக்கையுள்ள ஒருவர் மூலம் அறிந்து கொண்டாராம். 'மாணிக்கக் கவுண்டரே! என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் தங்கை தீராத வயிற்று நோயின் காரணமாகவே தூக்குப் போட்டுக் கொண்டாள் என்ற விவரம் அறிந்தேன். ருக்மிணியை என் மருமகளாக ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருக்கிறேன்' என்று கூறினார். உனக்கும் அவர் கடிதம் எழுதியிருக்கிறார். நாளை உனக்கு அந்தக்கடிதம் கிடைக்கும். ருக்குவுக்கு விஷயத்தைக் கூறி அழைத்துச் செல்லவே வந்தேன். ருக்குவின் சிற்றன்னை இந்த ஊரில்தான் இருக்கிறாள். ருக்குவும் உன்னை இங்கு பல தடவைகள் பார்த்திருக்கிறாளாம். வேணுமென்றேதான் அவள் உன் கண்ணில் படாமல் இருந்தாளாம்."

இந்த விவரங்களையறிந்த சிங்காரம் வியப்படைந்தான். 'ஆ! தன் விருப்பம் நிறைவேறப் போகிறது!' அடுத்தகணம் பேயறைந்தவன் போலச் சிலையாய் நின்றான். 'ஐயோ! தன் கடிதம் நாளைக் காலை தன் தந்தையின் கையில் கிடைத்தால், அதனால் அவர் துடிப்பாரே! தந்தி கொடுக்கலாமென்றால் ஐந்துமைல்கள் நடந்து சென்றால் அல்லவா முடியும்? இந்த இரவு வேளையில் என்ன செய்வது? அப்படித்தான் போய்த் தந்தி கொடுத்தாலும், தந்திக்கு முன்பு கடிதம் போய் விடுமே! திருமணச் செய்தியைத் தனக்கு அனுப்பிய தன் தந்தை, தன் மரணச் செய்தியை அறிந்தால் எப்படித் துடிதுடிப்பார்!

அந்த அதிர்ச்சியில் தன் பெற்றோரில் யாராவது மரணமடைந்து விட்டால்?....'

அவன் முகத்திலே ஏற்பட்ட மாறுபாட்டைக் கண்ட ருக்மிணி "என்ன ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?" என்றாள். தான் செய்த அசட்டுத்தனமான காரியத்தை அவளிடம் சொல்லச் சிங்காரத்தின் மனம் ஒப்புமா? "ஒன்றுமில்லை, ருக்கு! என் தந்தையின் பேரில் ஏற்பட்ட கோபம் தணியவில்லை" என்று கூறிச் சமாளித்தான்.

ருக்மிணியையும், மாணிக்கக் கவுண்டரையும் அனுப்பிவிட்டுப் படுக்கையில் புரண்டான் சிங்காரம். அவன் மனம் இப்போது தன் திருமணத்தில் இல்லை. பெற்றோர் படப் போகும் துயரத்தைக் கற்பனை செய்வதில் இருந்தது. எந்த மனம் அன்று மாலை பெற்றோர் அனுபவிக்கப் போகும் துயரத்துக்காகக் கும்மாளம் போட்டதோ, அதே மனம் இப்போது வேறொரு சூழ்நிலையில் துடித்தது. தன் அசட்டுத்தனத்தையும் அவசர புத்தியையும் எண்ணி அவன் வருந்தினான்.

சட்டென்று ஒரு யோசனை புலனாயிற்று. அன்று மாலை தான் கடிதத்தைத் தபாலில்







orhan's

சேர்த்தபோது மாலை சுமார் ஐந்தரை மணி இருக்கும். ஒருவேளை அதற்கு முன்பே பெட்டியிலிருந்து தபால்களை எடுத்து அன்றைய பக் கட்டில் சேர்த்திருந்தால், தன் கவர் பெட்டிக்குள்ளேதான் இருக்கும். இனி மறு நாள் தபாலில்தான் போகும். எனவே போஸ்ட்மாஸ்டரிடம் சென்று, கெஞ்சிக் கூத்தாடி, தன் கவர் இருந்தால், எடுத்துக் கொண்டு வந்து விடலாம் என்ற எண்ணத்துடன் விடுவிடு என்று புறப்பட்டுச் சென்றான்.

''ஸார்! ஒரு உதவி செய்ய வேண்டும்! தவறுதலாய் இன்று மாலை தபால் பெட்டிக்குள் ஒரு கவரைப் போட்டு விட்டேன். தயவு செய்து பெட்டியைத் திறந்தீர்களானால், என் கவர் அதற்குள்ளிருந்தால், எடுத்துக்கொண்டு விடுவேன். உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு'' என்று கெஞ்சினான் சிங்காரம்.

''உங்கள் கவர் இன்று மாலை கட்டிலேயே சேர்ந்திருக்குமே. நீங்கள் பெட்டியில் தபாலைப் போட்டவுடன் பார்த்தேன். அதற்குப் பிறகு தானே பெட்டியைத் திறந்தான் வேணு!'' என்று கூறினர் போஸ்ட்மாஸ்டர்.

மனம் உடைந்து விடு திரும்பினான் சிங்காரம். அன்றிரவு முழுதும் உறக்கமில்லாமல் படுக்கையில் புரண்டான். ''சரி! நடப்பது நடக்கட்டும். விடியற்காலை முதல் பஸ்ஸைப் பிடித்து, சீக்ரமாக ஊர் போய்ச் சேருவோம்'' என்று தீர்மானித்தான்.

மறுநாட் காலை சீக்கிரமாகவே புறப்பட்டான் சிங்காரம் ஊருக்கு. தெய்வத்தின் சோதனைபோல, ஆறரை மணிக்குக் கிளம்ப வேண்டிய பஸ், ஏதோகோளாறு காரணமாகப் புறப்படத் தாமதமாயிற்று. தாமதம் ஆன ஒவ்வொரு வினாடியும் ஒரு யுகமாயிருந்தது. அவன் கற்பனையில். தன் தந்தை தனது கடிதத்தைக் கண்ணுற்று, ஓவென்று கதறுவது போலவும், தாய் துயரத்தினால் துடிப்பது போலவும் தோன்றியது.

இன்னும் ஐந்து நிமிஷத்தில் பஸ் புறப்பட்டு விடும் என்று அறிவிக்கப்பட்டது. அப்போது தபால்காரன்வேணு, தபால்களைப்பட்டுவாடா செய்ய அவ் வழியே போய்க் கொண்டிருந்தவன், பஸ்ஸில் முன் ஸீட்டில் உட்கார்ந்திருக்கும் சிங்காரத்தைக் கண்டதும், ''வாத்தியார் ஐயா! உங்களுக்குத் தபால் இதோ!'' என்று இரண்டு கவர்களைக் கொடுத்தான்.



அவசரம் அவசரமாக இரு கவர்களின் விலாசங்களையும் பார்த்தான். ஒன்று அவன் தந்தையின் கையெழுத்து: சந்தேகமில்லை. மாணிக்கக் கவுண்டர் சொன்னபடி அவன் தந்தைதான் அவனுக்குஎழுதியிருக்கிறார். சரி, இதைப் பிறகு பிரித்துப் பார்க்கலாம். மற்றொன்று? என்ன! என்ன! முதல் நாள் அவன் தனது தந்தைக்கு எழுதிய கடிதமல்லவா? கவரின்பேரில் தன் தந்தையின் விலாசம் எழுதுவதற்குப் பதிலாக, ஞாபக மறதியாய்த் தன் விலாசத்தையே அல்லவா எழுதி விட்டான்!

''நல்ல வேளை! தலைக்கு வந்தது தலைப் பாகையுடன் போயிற்று!'' என்று ஒரு நீண்ட பெருமூச்சு விட்ட மறுகணம், ''சிங்காரம்! சிங்காரம்!'' என்று யாரோ தன்னைக் கூப்பிடுவதைக் கேட்டுத் திரும்பினான். அப்போதுதான் வந்து நின்ற ஒரு பஸ்ஸிலிருந்து சாமிக் கவுண்டர் அவசரமாக இறங்கி அவன் பக்கம் பரபரப்புடன் வந்தார்.

''சிங்காரம்! என் கடிதம் கிடைத்திருக்குமே! அந்தக் கடிதத்தை நான் உனக்கு அனுப்பியது தவறு. அதைச் சொல்லத்தான் ஓடிவந்தேன்'' என்றார் படபடப்புடன் சாமிக் கவுண்டர். தான் அதல பாதாளத்தில் போவதைப் போல் உணர்ந்தான் சிங்காரம்.

''அப்பா! நீங்களும் ஒரு மனிதரா! கடைசியாய், என் விருப்பம் நிறைவேறப் போகிறது என்ற குதூகலத்தில் இருக்கையில், இப்படித் தலையில் கல்லைப் போட்டு விட்டீர்களே!'' என்றான் ஆத்திரத்துடன்.

''அட, பைத்தியக்காரா! கடிதத்தை இன்னும் பார்க்கவில்லையா! நல்லதாய்ப் போயிற்று. நேற்று நான் உனக்குக் கடைசி முறையாய் ஒரு கடிதம் எழுதினேன். அதில் நமது முத்து கவுண்டரின் மகளை நீ மணக்க வேண்டும் என்று கெஞ்சிக் கடிதம் எழுதி முடித்ததும், தற்செயலாய் என் பழைய நண்பர் நம் வீட்டுக்கு வந்தார். பேச்சுப் போக்கில் மாணிக்கக் கவுண்டரின் குடும்பத்தைப் பற்றிப் பேச்சு வந்தது. 'சாமிக் கவுண்டரே! மாணிக்கக்கவுண்டரின் குடும்பம் உயர்ந்தது. நல்ல மனிதர். ஆனால் அவரது தங்கை பொருந்தி தற்கொலை செய்துகொண்டதை, ஊரார் பலவாறு அவதூறாய்ப் பேசுகிறார்கள். உண்மையில் அந்தப் பெண் தற்கொலை புரிந்து கொள்ளக் காரணம் அவளுடைய தீராத வயிற்று நோய்தான்' என்றார். உடனே நான் உனக்குக் கடிதம் எழுதி அதில் நான் ருக்மிணிக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று உன்னிடம் கூறியது வெறும் கற்பனை யென்றும் குறிப்பிட்டிருந்தேன். ஆனால் கடிதத்தை உறையில் போடும்போது இரண்டாவது கடிதத்தை உறையிலிடுவதற்குப் பதில், முதல் கடிதத்தைப் போட்டு அனுப்பி விட்டேன். தவறை நேற்று இரவுதான் அறிந்தேன். இரண்டாவது கடிதம் மேஜைமீது கிடந்தது. எங்கே நீ அந்தக் கடிதத்தைக் கண்டு துடிப்பாயோ என்று ஓடி வந்தேன்'' என்றார் சாமிக்கவுண்டர்.

# படித்துப் பாருங்கள்

## பத்மினி

தமிழ் வாசகர்களுக்கு இப்பொழுது மிகவும் நல்ல காலம். ஏராளமான புதுப் புதுப் புத்தகங்கள் வெளி வருகின்றன. சிறு கதைகள், நாவல்கள், கட்டுரைகள் இப்படிப் பலவிதமான புத்தகங்கள் எழில் உருவங்களோடு கண்ணைக் கவர்கின்றன.

நாவல்களில் பெரும்பாலும் காதல் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டவைதான் அதிகமாக வருகின்றன. சில நாவல்கள் சரித்திரத்தைப் பின்னணியாகக் கொண்டவை; ஆனால், நடந்துகொண்டே யிருக்கும் அரசியல் நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டு, அதி பயங்கரமான அரசியல் சதிகளை உருவாக்கி அவற்றுடன் சுவை குன்றாத கதைப் பகுதியையும் அமைத்து ஒருநாவல் எழுதுவது அரிய சாதனை.

''பத்மினி'' மேற்படி சாதனைக்கு ஒரு எடுத்துக் காட்டு. ஈழநாட்டின் பிரபல பத்திரிகையான ''வீரகேசரி''யின் செய்தி ஆசிரியராகப் பணியாற்றி வரும் ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் எம். ஏ., இந்த நாவலை 1952-ம் ஆண்டு ஆந்திர ராஜ்யப் பிரிவினைக்காகக் கிளர்ச்சி நடந்த காலத்தில் 'வீரகேசரி'யில் தொடர் கதையாக எழுத ஆரம்பித்தார். ஆந்திர ராஜ்யம் உருவாகும் போது நாவல் பூர்த்தியாயிற்று. உணர்ச்சி ததும்ப எழுதப் பட்டிருக்கும் இந்த நவீனத்தில் காதலுக்கும் கடமைக்கும் இடையில் நடந்த போராட்டத்தைப் பத்மினி, ரமேஷ்பாபு இருவர் மூலமாக நன்கு காண முடிகிறது. கடமை உணர்ச்சி காதலை வெல்லும் தருணத்தை அழகாக உருவாக்கிக் கதையை முடித்திருக்கிறார்.

இப் பெருங்கதையில் பத்மினி ஓர் அபூர்வமான பாத்திரம்; சதிகாரியாகத் தோன்றிய அவள் கதை முடிவில் மாபெரும் வீராங்கனையாகத் தோற்றமளித்து வாசகர் மனத்தில் நிரந்தர ஸ்தானத்தைப் பெற்று விடுகிறாள். கதையின் இன்னொரு முக்கிய பாத்திரம் சம்பத் குமார்; ஆதர்ச தேசபக்தரின் வாழ்வை எடுத்துக் காட்டும் ஓர் இணையற்ற குண சித்திரம்.

சுதந்திர நாட்டின் மக்களைப் பொறுப்புள்ள பிரஜைகளாக மாற்ற வேண்டியது மிக மிக இன்றியமையாததாகும். அந்த ஒப்பற்ற பணியை, புரட்சியும் புதுமையும் கொண்டு நல்ல முறையில் உருவாகி யிருக்கும் இந் நவீனம் சிறப்பாக ஆற்றுகிறது: அலுப்புத் தட்டாத அழகிய நடையையும், சுவை குன்றாமல் விறு விறுப்பாக அமைக்கப்பட்டிருக்கும் சம்பவக் கோவைகளையும் கொண்டு அழகாக அமைந்திருக்கிறது.

ஆசிரியரின் கவர்ச்சி நிறைந்த தமிழ் நடைக்கு ஒரு உதாரணம்:

''....வெள்ளி மணியோசையைப் போல் காற்றில் மிதந்து வந்த அந்தச் சிரிப்பொலியில் கள் வெறி யூட்டும் போதை நிறைந்திருந்தது. ரமேஷ் பாபு இருந்த இடத்துக்குப் பின்புறத்தைக் காட்டிக் கொண்டு நின்ற அப்பேரழகியின் முக விலாசத்தை அவன் பார்க்க முடியவில்லை. அதற்குப் பதில் கணைக்காலளவு வளர்ந்து தொங்கிய கேசம்தான் அவனுக்குத் தெரிந்தது. ஒடிந்து விழும் துடியிடையையும், அதில் ஒய்யாரமாக வைத்துக் கொண்டிருக்கும் பூங்கரத்தையும் அவன் கண்டான். அவன் இருந்த இடத்திலிருந்து தெரிந்ததெல்லாம் அவ்வளவுதான். அதற்கே இத்தனை வசிய சக்தியிருந்தால், அவள் எதிரில் வந்து நின்று, ஒரு மோகனப் புன்முறுவலை வீசி, இரண்டு வார்த்தைகளும் பேசிவிட்டால்....ரமேஷ் பாபுவின் சரீரம் புல்லரித்தது.''

இந்த மாதிரி இனிமையான நடையில் சுவை குன்றாமல் செல்லும் ஒரு நவீனம் 786 பக்கங்கள் இருப்பதை யார்தான் அதிகம் என்று நினைப்பார்கள்?

எழுதியவர்: கே. வி. எஸ். வாஸ் எம். ஏ., கிடைக்குமிடம்: ''வீரகேசரி'' லிமிடெட், தபால் பெட்டி எண். 160, கொழும்பு; பாகங்கள் 2. விலை: ரூ. 5—0—0

## ஐம்பதாண்டுப் பணி

சென்ற ஐம்பதாண்டுகளாகத் திரு வி. எம். அப்பாத்துரை முதலியார் அவர்கள் மைசூர் ராஜ்யத்தில் பட்டுத் தொழிலுக்காகச் செய்துள்ள அருந் தொண்டுகளை விவரிக்கும் நூலாகும். பட்டு உற்பத்தி செய்யும் தொழில் நமது நாட்டுத் தொழில். ஆனால் இத் தொழில் எவ்வளவு பிற்போக்கு அடைந்திருந்தது என்று இன்று கற்பனை செய்யவும் முடியாது. அத்தகைய நாட்களில் இத் துறையில் திரு முதலியாரவர்கள் ஈடுபட்டுப் பல எதிர்ப்புகளையும் கஷ்டங்களையும் சமாளித்து ''மைசூர் சில்க்'' என்றால் தேசம் முழுதும், ஏன், உலக முழுவதும் பிரபலமடையச் செய்து விட்டார். அவர் இத் தொழிலுக்காகப் பலவித ஆராய்ச்சிகள் நடத்தி யிருக்கிறார். பல நாடுகளுக்குச் சென்று அவர்கள் அனுபவங்களையெல்லாம் அறிந்து மைசூர் பட்டு உற்பத்தியில் பயன்படுத்தி யிருக்கிறார். இரவும் பகலும் கண் விழித்து அவர் நிகழ்த்திய ஆராய்ச்சிகளைப்பற்றிப் படிக்கும்போது மெய் சிலிர்க்கிறது. பட்டுப் பூச்சி வளர்ப்பிலிருந்து பட்டுத்துணி நெய்வது வரையுள்ள பலப்பல கட்டங்களிலும் முதலியார் அவர்கள் தமக்கே உரிய முறையில் ஆராய்ச்சிகள் நடத்திப் பல சீர்திருத்தங்கள் செய்திருக்கிறார். பல ராஜ்ய சர்க்கார்கள் இவரிடம் யோசனைகள் கேட்டபோது நல்ல பயனுள்ள யோசனைகள் பலவற்றைக் கூறி, அங்கெல்லாம் பட்டு உற்பத்திக்குப் பெரும் ஆக்கம் தேடித் தந்திருக்கிறார்.

இப்படி அருந் தொண்டு புரிந்த முதலியார் அவர்களைப் பாராட்டி ஒரு பொதுக் கூட்டம் போட்டு, தமது கடமை முடிந்தது என்று திம்மதியாக இருப்பதற்குப் பதிலாக அவரது ஐம்பது வருடத் தொண்டை அப்படியே வரலாறாக ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். இதைவிடச் சிறந்த பாராட்டு வேறு என்ன இருக்க முடியும்?

கிடைக்குமிடம்: Appadhorai's Sericultural Academy, Bangalore. விலை; ரூ. 1—8—0.

# புத்தம்புதியது போன்ற தோற்றம்!



## டாடாவின் 501 ஸ்பெஷல்

### சோப்பினால் சுத்தம் செய்யப்பட்டது




விசேஷ குணங்கள் பொருந்திய இந்த உன்னத சோப்பினால் சுத்தம் செய்தால், உங்களுடைய விலையுயர்ந்த துணிகள் புத்தம்புதிய தோற்றத்துடன் நீடித்தகாலம் உழைக்கும். சுத்தமானதும், மிருதுவானதுமான டாடாவின் 501 ஸ்பெஷல் சோப்பு துணிகளுக்குப் பாதுகாப்பு அளிப்பதோடு, மிகுந்த சிக்கனமும் அளிக்கவல்லது.

**நூற்றுக்கு நூறு இந்திய** : மூலதனம் • நிர்வாகம் • உழைப்பு

# குறைக்கப்பட்ட

**சில்லறை விலைகளில் கிடைக்கும்**
**பிரசித்திபெற்ற ஜெர்மன் நிவாரணிகள்**

## ஹெடன்ஸா

(மூலநோய்க்கு)

&

## லிச்சென்ஸா

(சரும நோய்களுக்கு)

| | |
|---|---|
| ஹெடன்ஸா | — சிறிய டியூப் ரூ. 3–6–0 |
| ஹெடன்ஸா | — பெரியடியூப் ரூ. 4–8–0 |
| லிச்சென்ஸா | — சிறிய டியூப் ரூ. 3–0–0 |
| லிச்சென்ஸா | — பெரியடியூப் ரூ. 4–0–0 |

DCZ-6TM

---

### உங்கள் வாழ்க்கையை

# மலச் சிக்கல்

### ஒரு பாரமாக்க வேண்டாம்.



தலைநோவுகள், உடம்பெரிச்சல், பசி மந்தம், ஜீவசக்தியின்மை, மேனியழகு மங்குதல், இவையெல்லாம் ஜீரண உறுப்புகளில் அசுத்தமிருப்பதன் கோடியான விளைவாகும். மலச் சிக்கல் உங்கள் வாழ்க்கையே ஒரு சுமையாகக் கருதும்படி செய்ய விடக்கூடாது. ப்ரூக்லாக்ஸை உட்கொண்ட மாத்திரத்தில் புதிய ஜீவசக்தியுண்டாகும். ருசிமிகுந்த இந்த சாக்லேட் பேதி மருந்து குடலின் வேலையை சகஜமாக்கி கழிவுப் பொருள்களை நிச்சயமாக வெளியேற்றுகிறது. இன்றிரவே ஒரு சாக்லேட் சாப்பிட்டு, காலை எவ்வளவு புத்துணர்ச்சியுடனும் சக்தியுடன் விளங்குகிறீர்களென்பதை பாருங்கள்.

ஆதல் ப்ரூக்லாக்ஸ் என்று
கேட்டு கவனித்து வாங்குங்கள்!




## ப்ரூக்லாக்ஸ்

### ஒரே இரவில்

உங்களை குணமாக்கும்
(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர்
லாபரேட்டரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜண்டுகள்: ஓரியண்டல்
மார்க்கண்டைல் ஏஜன்ஸி
99.A, அரமனைக்காரத் தெரு,
மதராஸ்–1

BMA.19




# கவிதைப் பட்டறை

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

கொல்லனுடைய உலைக்கூடத்தில், கனகன வென்று தீ கொழுந்து விட்டு எரிகிறது. கீழே கிடக்கும் இரும்புத் துண்டு ஒன்றை எடுத்து, அதைப் புரட்டிப் பார்க்கிறான் கொல்லன். சில்விட்டு விறைத்துப் போன இந்தப் பழைய இரும்பை என்ன செய்வது? துருச் சொறி ஏறிய அதை எப்படி வளைப்பது? 'ஏதோ பார்க்கலாம்' என்று சொல்லிக் கொண்டே, இருப்பை நெருப்பில் இட்டு, சம்மட்டியைக் கையில் எடுத்துக் கொள்கிறான்.

'ஏலே, என்ன தூங்குதே, துருத்தியைப் போடுலே, கழுதே.'

துருத்தி 'புஸ்' என்று பெருமூச்சு விடுகிறது. பொறிகள் பறக்கின்றன. தீயின் நாக்கு சுழல்கிறது. தாவித் தாவி இரும்பை நக்கிக் கொடுக்கிறது.

செத்த இரும்பின் உடம்பில் சிறிது சூடு ஏறுகிறது. கொல்லன் அதை வெளியிலே இழுத்து, பட்டறையிலே வைத்து, சூடு ஆறுவதற்குள் சம்மட்டியால் அடிக்கிறான். உடனே தீயிலே இடுகிறான், சூடு ஏறியதும் எடுக்கிறான், அடிக்கிறான். இப்படி இடைவிடாமல், தீயிலே முழுகி முழுகி, சம்மட்டியின் அடிகளை ஒன்றன் மேல் ஒன்றாக வாங்கி வாங்கி, அந்தத் துருப் பிடித்த இரும்பு மெல்லக் கனல்கிறது. துருவும், கருமையும், விறைப்பும் கொஞ்சம் கொஞ்சமாக மறைகின்றன. செக்கச் செவேல் என்று ஆகிறது, ஒன்றுக்கும் உதவாமல் இருந்த இரும்புத் துணுக்கு. மறுபடியும் நெருப்பிலே பாய்கிறது, பட்டறைக்கும் சம்மட்டிக்கும் இடையிலே மெல்ல வளைகிறது. அதன் செந்நிறம் கனிந்து வெண்ணிறமாக, தீயோடு தீயாக ஒன்றி, தீப் பிழம்பைப் போல ஒளி வீசுகிறது. கடைசியில், இந்த யோக சாதனை நிறைவேறியதும், தண்ணீரில் குதித்து மங்கள ஸ்நானம் செய்து கரையேறுகிறது. இப்போது அது உதவாக்கரைத் துணுக்கு இல்லை. கொல்லன் மனத்திலே முதலில் உருவான வண்டிப் பட்டையாகவோ, லாடமாகவோ, வேறு ஏதோ பொருளாகவோ, அது வடிவெடுத்து விட்டது. தீயும் சம்மட்டியும் மாறி மாறி ஓயாமல் அதை முறுக்கின; கொல்லன் மனத்தில் இருந்த எண்ணத்தின் சாயலை, அந்த உயிரற்ற இரும்புக்குத் தந்துவிட்டன.

கவிஞனுடைய உலைக் கூடத்திலும் இதே கதைதான். என்னுடைய நெஞ்சு துரு ஏறிய இரும்பைப் போல ஒன்றுக்கும் உதவாமல் கிடக்கிறது. அதற்கு உயிரில்லை, உணர்ச்சியில்லை. அதற்காக, கவிஞன் அதைத் தூக்கி எறிந்து விடுகிறானா? பயனற்றது என்று ஒதுக்கி விடுகிறானா? இல்லை. பிறகு? அதைத் தான் கொஞ்சம் பார்ப்போமே!

கலியாண மண்டபத்துக்கு நடந்து வரும் சீதையின் ஒப்பற்ற பேரழகைக் கவிச் சக்கரவர்த்தி கம்பர் பார்க்கிறார்,



எல்லாம் மனக் கண்ணால்தான். அவருடைய மனத்தில், சௌந்தர்யம் பெருங் கடலில் இரண்டு எழுந்த அமுதமாக, சீதையின்எழில் காட்சி அளிக்கிறது. கவிஞன் தொழுகின்ற தெய்வங்கள் இரண்டு: ஒன்று சத்தியம், மற்றொன்று சௌந்தர்யம். இவற்றில், சௌந்தர்யம், இப்போது கம்பர் முன் சீதையாக வடிவெடுத்து உலவுகிறது. இதை, எனக்கு, போயும் போயும் எனக்குச் சொல்லவருகிறார்கவிஞர். என்னைத் திரும்பிப் பார்க்கிறார். துருப் பிடித்து, உணர்ச்சியற்று, சில் விட்டுப் போன என் உள்ளம் அவர் கண்ணிற்படுகிறது. என்ன செய்வார், பாவம்! அவருடைய இதயம் முழுவதையும் நிறைத்து, அலைமோதுகின்ற அழகொளிக் கடலை என்னுடைய சிறு மனத்தில் எப்படிப் பெய்வது? அவருடைய எல்லையற்ற அனுபவத்தின் முத்திரையை எப்படி இந்த இரும்புத் துணுக்கின் பேரில் பதிப்பது? எளிதான காரியமா இது?

ஆனால் கம்பருடைய முகத்தில், கவலை எதுவும் காணோம். நாள்தோறும் அவர் செய்கின்ற காரியந்தானே, தம்முடைய அனுபவத்தை அப்படியே மற்றவர் மனத்தில் பொழிவதுதானே அவருடைய தொழில், இதைச் செய்வதில் அவருக்கு என்ன கவலை வரப் போகிறது? தம்முடைய உலைக்கூடத்தில் கற்பனை என்னும் கனலை மூட்டுகிறார் அவர். ஆமாம், இங்கே இந்த உலைக்கூடத்தில் கற்பனை என்பதுதான் நெருப்பு.

என்னிடம் பேசுகிறார்: 'தம்பி, பொன்னின் பளபளப்பு தெரியுமல்லவா?'

இதுதான் அவருடைய கற்பனைத் தீயின் முதல் நாக்கு.

'தெரியாமல் என்ன?' என்கிறேன். தங்கத்தின் ஒளியை என்னுடைய மனம் எண்ணுகிறது.

'பூவின் நறுமணம், அதுவும் தெரிந்திருக்குமே' என்கிறார் கவிஞர்.

பொன்னின் பிரகாசத்தைப் பார்த்துக் கொண்டே, மலரின் மணத்தையும் நினைத்துப் பார்க்கிறேன். பொன்னின் ஒளி, பூவின் வெறி, இவ்விரண்டும் ஒன்றாக வந்ததும் என் மனத்தில் மெல்லச் சூடு ஏறுகிறது.

கவிஞர் விடவில்லை. 'சந்தனத்தின் இதயத்தில் வளரும் குளிர்ச்சியைத் தொட்டுப் பார்த்திருப்பாயே?' என்கிறார்.

கற்பனை நெருப்பின் மூன்று பிழம்புகளாக, பொன்னையும் மலரையும், சந்தனத்தையும் கவிஞர் என் மனத்தின் மேல் வீசுகிறார். ஏன்? இதைக் கேட்பதற்குக்கூட நேரமில்லை. அதற்குள் கவிஞர் இன்னொரு அழகுப் பொருளைக் கொண்டு வந்து கண்முன் நிறுத்துகிறார்.

'மின்னல் அசைந்து துள்ளுகிறது, அதைப் பார்' என்கிறார் கம்பர்.

'பார்த்திருக்கிறேன், பார்த்திருக்கிறேன்' என்று சொல்லும் போதே, இந் நான்கு பொருள்களின் அழகும் ஒரே காலத்தில் என் முன் வந்து நிற்பதால், என் மனத்தில் புதிய துடிப்பு தோன்றுகிறது. இந்தத் துடிப்பு ஓய்வதற்குள், வேறு மூன்று அழகு வடிவங்கள் வருகின்றன, கம்பருடைய பேச்சின் மூலமாகத்தான்: அன்னம், அரம்பையர், அமுதம். ஒவ்வொன்றும் ஓர் உலகம். ஒவ்வொன்றையும் என் நெஞ்சு தொடுகிறது. அன்னம்,-வெண்மை, தூய்மை, மிதப்பது போன்ற நடை,-அரம்பையர்,- அழகு, நடனம், நளினம், கலை மெருகு,-அமுதம்,—இனிமை, தெவிட்டாத அளவற்ற இனிமை, சாகாவரம்,—இப்படியாக மூன்று பொருள்களால் ஆன சௌந்தர்ய ஒளி ஒன்று என் முன்னே விரிகிறது. பொன்னிலும், பூவின் மணத்திலும், சந்தனத்தின் குளிர்ச்சியிலும், மின்ன



# தேநீர் கொண்டு களைப்பை வெல்லுங்கள்

சோர்வையகற்றுவதன் மூலம்,
உங்கள் சக ஊழியர்களுடன் பழகு
வதற்குரிய சிறந்த மனோ நிலையை
உங்களிடம் உண்டாக்குவது
தேநீரின் நல்ல குணம் என்று.
உலக முழுவதிலும் மேலும் மேலும்
அதிக மக்கள் அறிந்து வரு
கிறார்கள். அதனால் தேநீர்
ஒரு சாதாரண பானம் மட்டுமல்ல-
அது நட்பின் பாலமாகும்.



**நான்தான் டீ** - ஊழியர்களின் நண்பன்



லின் அசைவிலும் தோய்ந்து, அழகை எட்டிப் பிடிக்கச் சென்ற என் மனம், இப்போது கற்பனைக் கனல் ஏறி, உவமைப் பிழம்புகளின் மூலமாக, எல்லையற்ற அழகைத் தொடுகிறது.

கம்பர் ஏழு பொருள்களைத் தம்முடைய கற்பனையால் சிலையின் அழகோடு தொடர்புபடுத்துகிறார். பாட்டைப் பாருங்கள், தெரியும் :

**பொன்னின் ஒளி, பூவின் வெறி, சாந்து
பொதி சீதம்,
மின்னின் நிழல் அன்னவள்தன் மேனி
ஒளி மான,
அன்னமும், அரம்பையரும் ஆரமுதும்
நாண
மன்னவர் இருந்த மணிமண்டபம்
அடைந்தாள்.**

***(வெறி—வாசனை : சாந்து—சந்தனம் ; மின்னின்—மின்னலுடைய : நிழல் — ஒளி ; அன்னவள்தன்—அந்தச் சிலையின் : மான— ஒத்திருக்க.)***

இவ்வேழு பொருள்களில் ஒவ்வொன்றும் ஓர் அழகிய பொருள். ஒவ்வொன்றும் தனித் தனியே அழகுணர்ச்சி கனலை மனத்திலே தூண்டும் சக்தி பெற்றது. இவை ஏழும் ஒரே சமயத்தில், கம்பருடைய கற்பனைத் தீயின் ஒளி நாக்குகளாக என் நெஞ்சைத் தடவுகின்றன. என்னுடைய நெஞ்சிலும் அழகுக் கனல் பிறக்கிறது.

பல உவமைகளை ஒன்றன்பின் ஒன்றாக வீசி, என் உள்ளத்தில் அழகுணர்ச்சி மூட்டிய இந்தக் கற்பனைதான் கவிதை உலைக் கூடத்துத் தீ. சரி, அப்படியானால் கவிதைக் கொல்லனுடைய சம்மட்டி எது ?

இருங்கள். கவிஞருடைய கற்பனை என்னிடம் எப்படி வந்து சேர்ந்தது ? 'இதுகூடத் தெரியாதா, கவிஞருடைய சொற்களின் மூலமாகத்தான்' என்கிறீர்கள். நல்லது. அச்சொற்களும், அவை ஒன்றாகக் கைகோத்து நின்று நடனமாடுகின்ற சந்தமுந்தான், கவிஞர் கையிலே சுழன்று, நம்முடைய சிறுமை நெஞ்சை அவருடைய ஒப்பற்ற அனுபவத்தை வளைக்கும் சம்மட்டி.

அப்படியா ?

ஆம், கம்பருடைய பாட்டை மறுபடியும் பாருங்கள், படித்துப் பாருங்கள், முடிந்தால் பாடிப் பாருங்கள்.

'தீம் தகிட, தீம் தகிட' என்று துள்ளும் சத்தமும், பாட்டில் ஒளிந்து விளையாடி மின்னுகின்ற மோனையும்,

---

## பிரபல திருமணம்



பம்பாய் தேனு பாங்க் லிமிடெட்டின் காரியதரிசி ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி அவர்கள் குமாரன் ஸ்ரீ கே. ராமஸ்வாமி அவர்களுக்கும், சென்னை, அட்வகேட் ஸ்ரீ டி. எஸ். ராகவாச்சாரியார் அவர்கள் குமாரி சௌ. வேதவல்லி சகுந்தலாவிற்கும் மயிலாப்பூர், பிலாத் தோப்பில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

**வாழ்க, மணமக்கள் !**

---

பாட்டின் தாளத்தை நிமிர்த்திக் காட்டும் எதுகையும், இத்தனைக்கும் இடம் தந்து குழையும் சொற்களும், பாட்டைப் பாடும்போது நம்மை எங்கேயோ தூக்கிச் செல்கின்றன.

கற்பனைத் தீயிலே தோய்த்துத் தோய்த்து, நமது நெஞ்சைச் சொல், சந்தம் என்ற சம்மட்டி கொண்டு அடித்து உருவாக்குகிறான் கவிதைக் கொல்லன். துருப் பிடித்த 'இரும்பு நேர்' நெஞ்சு சூடு பிடித்துக் கனல்கிறது. சேற்றிலே உயிரற்றுக் கிடந்த அது, உணர்ச்சி பெற்று, சௌந்தர்ய உலகைத் தொடுகிறது : அதுவேயாய் ஆகி விடுகிறது.

'இதன் பெயர் சீதை' என்கிறார் கவிஞர். இந்த அழகுத் தெய்வந்தான் கலியாண மண்டபத்துக்கு வந்தது என்று பாடுகிறார்.

**'மன்னவர் இருந்த மணிமண்டபம்
அடைந்தாள்.'**

ஆம் என்கிறோம். ஆனால் இருங்கள், மண்டபத்தை அடைந்தது சீதையா, இல்லை, சீதையாக முதலில் கவிஞன் மனத்திலும், இப்போது நம் நெஞ்சிலும் வடிவெடுத்த எல்லையற்ற அழகு.

# வட்ட மேஜை

## "என்னுடைய கருத்து"

ஜனாப் எம். எம். ஏ. அஜீஸ் என்பவர் மிக அழகிய தமிழில் அடியில் கண்ட கடிதத்தை ராஜாஜிக்கு எழுதியிருக்கிறார் :—

மகாகனம் தங்கிய பெரியார் அதிகௌரவ ராஜாஜி அவர்கள் சமூகத்துக்கு, என் பணிவான வணக்கம்.

வேண்டாத விஷயத்தைக் கூறித் தங்கள் மணியான நேரத்தைப் பாழ்படுத்துகிறேன் என்று எண்ணினாலும் சந்தேக நோயைத் தீர்க்கவல்ல மருந்து தங்களிடமே உண்டு என்று அறிந்து அதைத் தெளிவுபடுத்திக் கொள்ளவே இதை எழுதுகிறேன்.

"மகனே! புராணங்களைப் படித்துப் பயனடைந்துகொள். புராணங்களை வேதங்களாக நினைத்து மடமை பேசி விலங்குகள் போல் நடந்து கொள்ளாதே!" என்று மகாகவி பாரதியார் கூறியிருக்கிறார் என்று படித்த ஞாபகம். 'கம்ப ராமாயணம்', 'பாரதம்' இவைகள் புராணங்கள்—கற்பனைகள் என்று எண்ணினேன். அதற்குச் சாதகமாக 4-11-56 'கல்கி'யில் "முத்தின் கதை" என்ற தங்களின் சிறுகதையில் "பறவை கொல்லப்பட்ட கொடுமையைப் பார்த்து வால்மீகி அடைந்த சோகம் அழகிய ராமாயணம் ஆயிற்று" என்று எழுதியது என் கருத்துக்குச் சாதகமாக இருப்பது போல் தோன்றியது. மகிழ்ச்சியடைந்தேன்.

ஆனால் 11-11-56 'கல்கி'யில் "என்னுடைய கருத்து" என்ற கட்டுரையில் "சீதையும் ராமனும் லட்சுமணனும் பரதனும் இந்த நாட்டு மக்கள். வெறும் கதாபாத்திரங்கள் அல்ல. என் மூதாதைகளைப் போல் இவர்களும் இந்த நாட்டின் மண்ணிலிருந்து உண்டாகி உயிர் கொண்டு வாழ்ந்தவர்களாவார்கள்" என்ற வசனங்கள் புதிய கருத்தைத் தருவதால் நான் கொண்ட கருத்து பிழையா, அல்லது விளங்கியது பிழையா என்பதைக் தெரிவித்தால் நான் அறிந்து பெரு மகிழ்ச்சி கொள்வேன் என்பதை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிலோன்
16—11—56 எம். எம். ஏ. அஜீஸ்

இதற்கு ராஜாஜி அவர்கள் எழுதியுள்ள அருமையான பதில் கடிதத்தை மிக்க பெருமையுடன் கீழே வெளியிட்டிருக்கிறோம்.

**அன்பும் ஆசியும்.**

**உங்களுடைய 16ந் தேதி கடிதம் படித்தேன். உங்களுடைய பெயரிலிருந்து நீங்கள் முஸ்லிம் என்று எண்ணுகிறேன்.**

**புராணங்கள் இந்துக்களுக்குப் புண்ணிய கதைகளாகும். மசூதி எப்படிப் புண்ணிய ஸ்தலமோ அப்படிக் கதை புண்ணிய கதையாகிறது. புராணங்களை வெறும் கதையாகப் பாவித்தல் தவறு. மசூதியை வெறும் கட்டடமாகப் பாவித்தல் தவறு. அதைப் போலவே சரித்திர புருஷர்களைப் பற்றி மக்கள் பல்லாயிர ஆண்டுகளாகச் சொல்லியும் பாடியும் வந்த பிறகு ராமாயணமும் மகாபாரதமும் காவியங்களாக எழுதப்பட்டன. ஒவ்வொரு வரியும் உண்மையாகவே நடந்த நிகழ்ச்சியாக வைத்துக் கொள்ளக் கூடாது.**

**புராணங்கள் எல்லாம் வேதங்களைப் போலவே புண்ணிய நூல்கள். இந்துக்களுக்குப் புராணங்கள் சாதாரண கதைப் புத்தகங்கள் அல்ல. முஸ்லிம்களுக்கு மசூதியும், பிரயாணிகள் தங்கும் சத்திரமும் எப்படி ஒன்றாகாதோ அப்படியே புராணங்களையும் கதைகளையும் ஒன்றாக எண்ணுவது கூடாது.**

**கரியும் வைரமும் ஒரே பொருள். ஆனாலும் பல்லாண்டுகளாக இயங்கிய இயற்கை வேகங்களால் ஒன்று கரியாக இருக்கிறது. மற்றொன்று வைரமாகிறது. சாதாரண மக்களுக்கும் ராமன், சீதை முதலியவர்களுக்கும் இதைப் போன்ற வித்தியாசம், இந்துக்கள் கருத்தில்.**

**இதுவெல்லாம் இந்துக்களுக்குத் தான் பொருள் படும். இஸ்லாம் மதத்தில் பழகி வந்தவர்களுக்குச் சரியாகப் பொருள் படாது; பட வேண்டியதுமில்லை.**

**அவரவர்கள் மதத்தில் அவரவர்கள் பயனும் பொருளும் காண்பார்கள்.**

**சிறுகதையில் தாங்கள் கண்ட விஷயத்துக்கும் 'என்னுடைய கருத்து' என்கிற கட்டுரையில் நான் சொல்லியதற்கும் பேதம் இருந்தால் கட்டுரையில் சொல்லப்படுவதாக நீங்கள் காணும் விஷயமே என்னுடைய கருத்து என்று வைத்துக் கொள்ளவும்.**

**தியாகராயநகரம் அன்புடன்,**
**24—11—56** ராஜகோபாலாச்சாரி

## அழகப்பருக்கு நன்றி!

'கல்கி'யில் பிரசுரமாகும் 'அழகப்பரின் அற்புத சாதனை'கள் என்ற கட்டுரை மூலம் திரு பகீரதன் எல்லாரையும் 'காரைக்குடி'க்கே அழைத்துச் சென்று அங்கு நடைபெற்று வரும் பல முன்னேற்றங்களைக் காட்டுகிறார்.

தமிழ்த் தாயகத்தை விட்டுப் பல வருஷங்களாக வெளிநாடுகளில் இருக்கும் அன்பர்களுக்குத் தாயகத்தின் முன்னேற்றத்தைக் 'கல்கி'யின் மூலமாகத் தெரிந்து கொள்ளும் படி செய்து வருகிறார்.

'டாக்டர் அழகப்பருக்குத் தமிழ் நாடே நன்றி கூற வேண்டும்' என்று கட்டுரை ஆசிரியர் சொல்லி விருப்பது போதாது. வெளிநாடுகளிலுள்ள தென்னாட்டவரும் நன்றி கூற வேண்டும். கட்டுரை ஆசிரியர் சொல்லாததை நான் சொல்லுகிறேன்.

இலங்கை
26—11—56 உதயன்

## பேரன்பே காரணம்

இந்தியாவில் உள்ள இன்றையத் தலைவர்களில் முதன்மையானவர்கள் ராஜாஜியும், நேருஜியும் ஆவர். நேருஜியும் ராஜாஜியும் எதைச் சொன்னாலும் அதை நான் அப்படியே ஒப்புக் கொண்டு விடுவேன். ராஜாஜி இரண்டு சந்தர்ப்பங்களில் "இந்தியா காமன்வெல்த்திலிருந்து விலகிவிட வேண்டும்" என்று கூறியதைப் பத்திரிகை மூலம் அறிந்து முதலில் திடுக்கிட்டேன். பின்பு யோசித்தேன். ராஜாஜி சொன்னது நூற்றுக்கு நூறு சரியென ஒப்புக் கொண்டு

விட்டது என் மனம். அதை ஆமோதிப்பது போல் 25-11-56 'கல்கி'யில் ''தண்டனையா? உதவியா?'' என்று மகுடமிட்ட உப தலையங்கத்தைப் படித்தேன். இதில் கூறி இருப்பது போல, ராஜாஜி அவர்கள் பிரிட்டிஷ் மக்களிடம் கொண்ட பேரன்பே காமன்வெல்த்திலிருந்து விலக வேண்டும் எனக் கூறுவதற்குக் காரணமாகும் என்பதை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன்.

இரத்தினபுரி
25—11—56

அ. பிலிப்

## "கடைசிக் கனவு"

"வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு" "இளமையும் நில்லா, யாக்கையும் நில்லா" என்பன போன்ற தமிழ்ப் பொருளைப் பொதிந்துள்ளது, 'கடைசிக் கனவு' என்னும் கட்டுரை. இன்றைய ஆங்கிலக் கவிஞன் வேறு நாட்டில் வேற்று மொழியில் கூறிய கருத்தை இந்நாட்டில் தமிழில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே தமிழ்க் கவிஞர் கண்டுணர்ந்துள்ளார்கள். இது தமிழரின் பழம் பெருமைக்கோர் சான்றாகும்.

ஒப்புவமை காட்டும் தமிழ்ப் பாடல்களைப் பேராசிரியர் மூலப் பகுதி எங்கு எந்நூலில் உள்ளது என்று குறித்தாரானால், அது என் போன்ற நுனிப்புல் மேய்வார்க்குச் சால உதவும் என நம்புகிறேன்.

இக் கட்டுரைக் கருத்துடன்,

"கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே"

என்ற தமிழ் மூவாயிரப் பாடல் ஒத்துள்ளதென எண்ணுகிறேன்.

சேலம்
26—11—56

அறவணன்

## அரசினர் கவனத்துக்கு

ஆரம்ப, உயர்தர ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களின் சம்பள உயர்வு அமுலுக்கு வந்து விட்டதை அறிகிறேன். இதில் நெசவு ஆசிரியர்களின் சம்பளப் பிரச்னை மட்டும் இன்னும் அரசினர் கவனத்துக்கு வராதது ஏனோ தெரியவில்லை. சில ஆண்டுகளுக்கு முன்பு ஆரம்ப ஆசிரியர்களின் சம்பளம் ரூபாய் இருபத்தைந்திலிருந்து முப்பது ஆக உயர்ந்தபோது நெசவு ஆசிரியர்களின் சம்பளப் பிரச்னை கவனிக்கப்படும் என நினைத்தோம். கவனிக்கப்படவில்லை. மீண்டும் ஆரம்ப ஆசிரியர்களின் சம்பள உயர்வு அமுலுக்கு வந்திருக்கும் இந்நேரத்திலும் நெசவு ஆசிரியர்கள் பெரிய ஏமாற்றத்துக்கு ஆளாகி யிருக்கிறார்கள்.

கைத்தொழில் பயிற்சி (T. T. C.) பெற்ற ஒரு ஆசிரியர் உயர்நிலைப் பள்ளியில் வேலை பார்த்தால் அவருக்கு ஆரம்பச் சம்பளம் ரூ. 45+22. அதே யோக்கியதாம்சம் பெற்ற உயர்தர ஆரம்பப் பாடசாலையில் வேலை பார்க்கும் ஒரு ஆசிரியரின் சம்பளம் ரூ25+19. இது ஒரு ஆரம்ப ஆசிரியர் வாங்கும் சம்பளத்தை விடக் குறைவு. இந்த வித்தியாசம் ஏன்?

குணசேகரன்பட்டினம்
22—11—56

எஸ்.டி. நவமணி
(நெசவு ஆசிரியர்)

# அபலை அஞ்சுகம்

## 23. மேகத்திரைக்குள் மறைந்திடும் - வெண்ணிலா!

இரவு நடுநிசி வேளை; மீனாச்சி ஆழ்ந்த நித்திரையில் இருந்தாள். விஜயரங்கனும் அஞ்சுகமும் மீனாச்சி எப்பொழுது தூங்குவாள் என்று காத்துக்கொண்டிருந்தவர்கள் போல் மெதுவாக எழுந்து பதுங்கிப் பதுங்கித் தாழ்வாரத்துக்கு வந்தனர். அஞ்சுகத்தின் கையில் தணிவாக எரிந்து கொண்டிருக்கும் ஒரு சிம்னி விளக்கு இருந்தது. அஞ்சுகம் விளக்கை ஒருபுறமாக வைத்துவிட்டு அங்கிருந்த ஒரு துணிப் பையை எடுத்துப் பிரித்தாள். பலவிதமான கந்தல் துணிகளுடன் ஒருசிறு துணிமூட்டை இருந்தது. அதை எடுத்து அவசரம் அவசரமாகப் பிரித்தாள். அதில் பல விதமான ஆபரணங்கள் இருந்தன. அந்த நகைகளில் பதிக்கப் பெற்றிருக்கும் ரத்தினங்கள் அந்தக் கைவிளக்கின் மங்கிய ஒளியிலும் கண்ணைப் பறிக்கும் வண்ணம் பிரகாசித்தன. சங்கிலிகள், வளையல்கள், தலையில் அணிந்து கொள்ளக்கூடிய ஆபரணங்கள் எல்லாம் புராதனமானவைகளாகவும் விலை உயர்ந்தவைகளாகவும்தான் இருந்தன. விஜயரங்கன் அந்த நகைகளை ஒவ்வொன்றாக எடுத்து விளக்குக்குச் சமீபமாகக் கொண்டு வந்து புரட்டிப் புரட்டிப் பார்த்தான். நீண்ட ஹாரத்தோடு கூடிய மகரகண்டிப் பதக்கம் ஒன்றை எடுத்துப் பார்த்து விட்டு அதில் ஒரு பக்கம் 'விஜய' என்று பொறிக்கப்பட்டிருந்த முத்திரையை அஞ்சுகத்துக்குக் காட்டினான். ''இதோ பார்த்தாயா? இது எவ்வளவுகாலமாக எங்கள் வீட்டில் இருக்கிறது, தெரியுமா? இதோ பார் முத்திரையை. இவைகளெல்லாம் எங்கள் வீட்டு நகைகள்தான்'' என்றான்.

''சரி! இவற்றை என்ன செய்வது?'' என்றாள் அஞ்சுகம்.

''இவைகளை அப்படியே கட்டி முன்பு இருந்தபடியே பையில் வைத்து விடு. என் சந்தேகம் நிவர்த்தியாகி விட்டது. இனி என்ன செய்யலாம் என்பதைப் பற்றி யோசிக்கலாம், வா!'' என்றான்.



அஞ்சுகம் அந்த நகைகளையெல்லாம் அந்தத் துணியிலேயே வைத்து முன்பு இருந்தது போலவே கட்டி வைத்து விட்டு வந்தான். அவர்கள் இருவரும் அந்தக் கட்டடத்தின் பின்புறமுள்ள முற்றத்தில் போய் அமர்ந்தனர்.

பின்னிலவுக் காலம். மேகக் குழப்பமில்லாத தெளிவான வானத்திலே சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். இரவு வேளையில் நிலவொளியில் காதலர்கள் அமர்ந்து உல்லாசமாக இருக்கவே அமைந்தது போல் இருந்தது அந்த அழகான முற்றம். இந்த முற்றத்திடையே ஒரு பளிங்கு மேடை... தான் கண்ட காதலர்களின் இன்ப வாழ்வெல்லாம் எப்படி முடிந்தது என்று சோகக் கதையை மிகவும் துக்கத்தோடு சொல்வதுபோல் காட்சியளித்தது.



விஜயரங்கன் அந்த மேடை மீது வந்து அமர்ந்தான். அவன் பக்கத்தில், அவனை ஒட்டினாற்போல் அஞ்சுகம் வந்து அமர்ந்தாள்.

''எல்லாம் விளங்கி விட்டது. அஞ்சுகம்! இனி உனக்கு ஒரு ஆபத்தில்லை. அப்படி ஏதேனும் ஏற்பட்டாலும் நான் பார்த்துக் கொள்கிறேன். இனிமேலும் நாம் ஏன் இங்கு இருக்க வேண்டும்? நாம் இனிமேல் பாமபில்லானம் மேகராஜபுரத்துக்குப் போய்ப் போலீசாரின் துணையை வைத்துக் கொண்டு இந்தக் குறவர்களைப் பிடிக்கச் சொன்னால் உண்மை விளங்கி விடும். அப்புறம் நிர்மலாவும் சொக்கனும் செய்த திருவிளையாடல்களெல்லாம் அம்பலத்துக்கு வந்துவிடும். இப்பொழுதேகூட நாம் புறப்பட்டு விடலாம். இனிமேல் நாம் எதற்காக இருக்க வேண்டும்?'' என்றான் விஜயரங்கன்.

''அவசரப்படாதீர்கள். பொறுத்த வரையில் பொறுத்தோம். இன்னும் கொஞ்சம் பொறுப்போம். நாளை வரையில் இந்த வேளையில் கிளம்புவதைவிட நாளைய தினம் மாலையில் ஆற்றங்கரைக்குப் போவது போல் கிளம்பி விடுவோம். அதற்கு முன்னால் மறுபடியும் உங்களை வேண்டிக்கொள்கிறேன். சொக்கனை மாத்திரம் மன்னித்து விடுங்கள். அவருக்கு எவ்வித ஆபத்தும் நேராமல் அவரை எங்கேயாவது தலைமறைவாக ஓடிப் போய்விடச் சொல்லிவிட வேண்டும். எனக்கு அவரை நினைத்தால் தான் பரிதாபமாக இருக்கிறது. கொலை பாதகத்தனத்துக்குக் கூடத் துணிந்த நிர்மலாவின் இனிமையான பேச்சிலும் நடிப்பிலும் அவர் மயங்கி ஏதேதோ அசட்டுக் காரியம் செய்யத் துணிந்து விட்டார். நான் நாளைய தினம் முன்னதாகச் சென்று அவரைப் பார்த்து எல்லாவற்றையும் சொல்லி அவரை ஆபத்திலிருந்து விடுவிக்கப் பார்க்கிறேன்.. தயவு செய்து....''

''அதை அனுமதிக்க வேண்டும் என்கிறாயா? உனக்கென்ன அந்த மனிதனிடம் அவ்வளவு பாசம்...?'' என்றான் விஜயரங்கன், அஞ்சுகத்தை ஏதோ சந்தேகக் கண்களுடன் பார்த்துக் கொண்டே. அவன் முகக்குறியைப் பார்த்த அஞ்சுகம் சிறிது கோபமும் வருத்தமும் கொண்டவள்போல், ''உங்களுக்கு என்மீது ஏதோ சந்தேகம்......இல்லையா? அவருக்காக நான் எதற்காகப் பரிந்து பேசுகிறேன் என்றால் கொஞ்ச நாட்கள் அவரோடு பழகிய தோஷம். அவருடைய குணம் எப்படிப்பட்டது என்று அறிந்து கொண்ட தோஷம். நீங்கள் சந்தேகப்படவே வேண்டாம். இதைத் தவிர எனக்கும் அவருக்கும் வேறு எவ்விதமான சம்பந்தமும் இல்லை. நான் மிகவும் மோசமான ஜனங்களிடையே வாழ்ந்தவள் என்று உங்களிடம் சொல்லி விட்டேனே...? என்னை உலகம் திருடி என்கிறது. நான் தகாதவர்களோடு வாழ்ந்ததினால் உலகம் அதை நம்பும். ஆனால் நீங்கள் நம்புகிறீர்களா? நீங்கள் நம்புவதானால் என்னை உங்களோடு கூப்பிடாதீர்கள். நான் எங்கேயாவது போய்விடுகிறேன். நீங்கள் உங்கள் அபிப்பிராயப்படி ஏதாவது செய்து கொள்ளுங்கள்...'' என்றாள் மிகுந்த துயரத்தோடு.

விஜயரங்கன் அஞ்சுகத்தின் கரத்தைப் பற்றிக் கொண்டே, ''என்ன, அஞ்சுகம், உனக்கு இவ்வளவு கோபம்? உன்னை நம்பாமல் இந்த உலகத்தில் வேறு யாரை நான் நம்பப் போகிறேன்? உன்னை நம்பித்தானே இந்த உயிர் பிழைத்திருக்கிறது? என் பெயரைத் தன்னுடைய பெயராக்கிக் கொண்டு என் உடைமைகளை ஒருவன் அடைய நினைக்கிறான் என்றால் அது பெரிய மோசடி தானே? அவன்மீது எனக்கு ஆத்திரம் ஏற்படுவது சகஜந்தானே? நீ அவனுக்கு இவ்வளவு பரிந்து பேசியது எனக்குச் சிறிது சந்தேகத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது. அதனால் கேட்டேன். உனக்கு அவன் உபகாரம் செய்தவன்; நல்லவன் என்கிறாய். அதனால் அவன் எனக்கு எத்தகைய தீங்கு நினைக்க எண்ணியவனாயிருந்தாலும் அவனை நான் மன்னித்து அவனுக்கு உபகாரம் செய்யச் சித்தமாய் இருக்கிறேன். உன்னுடைய வார்த்தைகளில் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. நீ என்ன சொல்கிறாயோ, அப்படியே செய்யச் சித்தம்'' என்றான்.

''என்னுடைய ஆத்திரமெல்லாம் நிர்மலாவின் பேரில்தான். அவள் தான் இதற்கெல்லாம் காரணம். அவள்தான் அந்த வீட்டிலிருந்த நகைகளையெல்லாம் திருடியிருக்க வேண்டும். அவன்மீது சந்தேகப்பட்டு அவளிடம் உளவறிய வேண்டுமென்று சென்ற சொக்கனை, அவரால் தனக்கு ஆபத்து ஏற்படும் என்பதை உணர்ந்து அவரை மயக்கித் தன் வலையில் சிக்க வைத்து விட்டாள். 'நான்தான் நகைகளைத் திருடியவள்' என்று எப்படிச் சாமர்த்தியமாகச் சூழ்ச்சிகள் செய்து என்மீது பழியைச் சுமத்தினாளோ, அப்படியே ஏதாவது சூழ்ச்சிசெய்து, 'உங்களைக்கொலைசெய்ய அவர்தான் ஏற்பாடு செய்தார்' என்று பழியை அவர்மீது சுமத்தித் தான் தப்பித்துக் கொண்டு விடுவாள் அந்த வஞ்சகி. அவள் படித்தவள், அழகி, யுவதி. பேச்சிலேயே பிறரை மயக்கக் கூடியவள். அவள் வார்த்தைகளை உலகம் நம்பும். அவளுக்கு உலகத்தில் நல்ல பெயரும் இருக்கிறது. ஆனால் சொக்கன் அப்படியில்லை. தீய செயல்கள் புரியும் ஒதுக்கப்பட்ட ஜனங்களிடையே வாழ்ந்தவர். சிறுசிறு திருட்டுக் குற்றங்களெல்லாம் செய்து சில நாட்கள் ஜெயிலிலிருந்தவர். அவருக்கு எப்பொழுதும் போலீஸ் கண்காணிப்பு உண்டு. இதையெல்லாம் பார்த்தால் அவர்தான் குற்றவாளியாவார்...இதைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அவசரப்பட்டுத் தீர்மானிக்கக் கூடாது'' என்றாள்.

''ஆம்! நீ சொல்வதும் வாஸ்தவம் தான்'' என்றான் விஜயரங்கன்.

''இன்னொரு விஷயம் நாம் யோசிக்க வேண்டும். உங்கள் வீட்டு நகைகள் எல்லாம் குநத்தி மீனாச்சியிடம் எப்படி வந்தன...? நான் மீனாச்சியிடம் அடைக்கலம் புகுந்தபின் அவளைப் பூரணமாக நம்பி என் கதைகளையெல்லாம் சொல்லி விட்டேன். அதற்குமேல் அவளுக்கும் நிர்மலாவுக்கும் தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. ஏனென்றால் அதற்குப் பின்தான் ஒரு நாள் மீனாச்சி இந்த நகைகளையெல்லாம் எங்கிருந்தோ கொண்டு வந்து தன் பைக்குள் வைத்தாள். நிர்மலா மீனாச்சிக்கு இந்தநகைகளைக் கொடுத்து, அவளையும் கைக்குள் போட்டுக் கொண்டு உங்களைக் கொன்று விடுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறாள்..''



''அப்படியானால் மீனாச்சி என்னைக் கொன்றிருக்க வேண்டுமே...?'' என்றான் விஜயரங்கன் சந்தேகத்தோடு.

''நிர்மலா கெட்டிக்காரி. தான் சாமர்த்தியமாக ஏதோ செய்து விட்டோம் என்று அவள் நினைத்துக்கொண்டிருக்கலாம். ஆனால் மீனாச்சி அவளைவிட மகா கெட்டிக்காரி. உங்களை மீனாட்சி கொல்லாமல் வைத்துக் கொண்டிருந்தது, அடிக்கடி நிர்மலாவிடம் மிரட்டிக் காசு பறிக்கலாம் என்கிற எண்ணத்தினால்தான். நீங்கள் பழைய நினைவோடு இருந்தால் எங்கேயாவது போய் விடுவீர்களோ, ஏதேனும் ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சி உங்கள் பெயரைக் கூட நீங்கள் மறந்துவிடும் வண்ணம் ஏதோ பச்சிலை

உங்களுடைய குடும்பத்திற்கேற்ற பொழுது போக்கு சாதனம்!

# ஒரு ரேடியோ இருப்பதால் உங்கள் வீட்டில் குதூகலம் நிலவுகிறது!

ரேடியோ மூலம் வரும் சங்கீதத்தை ரஸிப்பதால் உங்களுக்கு பொழுது போவதே தெரிவதில்லை. ஒரு சிறு விசையைத் திருப்புவதால், பலவித புது நிகழ்ச்சிகளை நீங்கள் கேட்டு ஆனந்திக்க முடிகிறது.

மேலும் ஞாபகமிருக்கட்டும்—நீங்கள் மின்சார சக்தியில்லாத இடத்திலிருந்தாலும், பாட்டரி சக்தியால் இயங்கும் ரேடியோ மூலம் நீங்கள் அதே ஆனந்தத்தை அடையலாம்.

இன்றே உங்கள் ரேடியோ வியாபாரியிடம் இதைப்பற்றி கேளுங்கள்

"NINE LIVES"
TRADE-MARK

EVEREADY
TRADE-MARK

'எவரெடி' ரேடியோ பாட்டரிகள்

நாஷனல் கார்பன் தயாரிப்புகள்

NCM 881



அக்டோபர் 5-ந் தேதி முதல் 20-ந் தேதி வரை சென்னை மயிலாப்பூரில் ஆங்கிரஸ ஆசிரமம் பிரும்மஸ்ரீ பந்தங்கி நாகேசுவர ஸ்ரௌதிகளால் நவராத்திரி மகாயாகம் சிறப்பாக நடைபெற்றது. இந்த யாகத்தின் கடைசி தினமாகிய ஸ்ரீஸூக்த ஹோமத்தன்று பக்தர்கள் புடைசூழ ஸ்ரீ பந்தங்கி நாகேசுவர ஸ்ரௌதிகள் நிற்பதைப் படத்தில் காணலாம்.

மருந்தை உங்களுக்குக் கொடுத்திருக்கிறான். தெய்வாதீனமாக உங்கள் தாத்தாவின் படத்தை நீங்கள் பார்க்கா விட்டால் உங்களுடைய பூர்வீக ஞாபகம் உங்களுக்கு ஏற்பட்டிருக்காது. இந்தக் குறத்திகளால் முடியாத காரியமில்லை. இப்பொழுது உங்களுக்குப் பழைய நினைவுகள் திரும்பி வந்து விட்டன என்பதைத் தெரிந்து கொண்டு விட்டால் கூட உங்களுக்கு ஏதேனும் பச்சிலை, மை ஏதாவது வைத்து உங்கள் புத்தியையே மாற்றி விடுவாள்.''

''ஆமாம்! அவளிடம் இதைக் காட்டிக் கொள்ளக் கூடாது. என்னுடைய பூர்வீகத்தைத் தெரிந்து கொள்ளாதவன் போலவேதான் நடிக்க வேண்டும். அஞ்சுகம்! நீ ரொம்ப அப்பாவிப் பெண்ணுன்னு நினைத்துக் கொண்டிருந்தேன். இவ்வளவு விஷயம் தெரிந்து கொண்டிருக்கிறாயே. கெட்டிக்காரி!''

''எவ்வளவு நாளைக்கு ஒருத்தி அப்பாவிப் பெண்ணாகவும், அபலைப் பெண்ணாகவும் இருக்க முடியும்? அனுபவப் பட்டால்தானே புத்தி வரும்? முதலில் எல்லோரையும் நம்பினேன். ஏமாந்தேன். மனத்திலும் தைரியம் இல்லை.... உலகத்தில் என்னைப் போல அபலைப் பெண்ணும் இருக்கிறார்கள். நிர்மலாவைப் போல நெஞ்சுத் துணிவும் குரூர சுபாவமும் கொண்ட பெண்களும் இருக்கிறார்கள். இதைத் தெரிந்து கொள்ளாமல் பெண்களை வெறுக்கிறவர்களோ, பெண்களிடம் மயங்குகிறவர்களோ மூடர்கள். சொக்கன் அன்பின்னைதான். பேசும்போதெல்லாம் பெரிய வீரனைப் போலத்தான் பேசுவார். ஆனால் தைரியமில்லாதவர்; இளகிய மனசு உள்ளவர். மிகவும் கோழை. சில காரியங்களைச் செய்ய மிகவும் பயப்படுவார். அவர் மீது கொஞ்சம் இரக்கம் வைத்து அவரைப் போலீசாரிடம் சிக்காமல் செய்ய வேண்டியதுதான். பாவம்! அவர் எங்கேனும் சென்று உண்மையோடு பிழைத்துக் கொள்ளட்டும்...'' என்றாள்.

''தாராளமாய்ப் பிழைத்துக் கொள்ளட்டும். நீயே அவனுக்கு நல்ல புத்தி சொல்லி அனுப்பு. எப்படியும் நாளைய தினம் மாலையில் நாம் கட்டாயம் இந்த இடத்தை விட்டுக் கிளம்பிவிட வேண்டும். என்னுடைய அதிருஷ்டம் தான் என்னுடைய முன்னோர்கள் வாழ்ந்த இந்த இடத்துக்கு என்னைக் கொண்டு வந்து சேர்த்தது. இங்கு நான் என்னுடைய பாட்டனாரின் படத்தைப் பார்க்காவிட்டால் என்னுடைய பூர்வீக ஞாபகம் எனக்கு வருமா? எல்லாவற்றையும் விட உன் நட்பு எனக்குக் கிடைத்தது பார் அஞ்சுகம், அதுதான் பெரிய அதிருஷ்டம்; பாக்கியம். உன்னைப் பார்த்ததும் உனக்கும் எனக்கும் இன்று நேற்றல்ல, ஏழெட்டு ஜன்மங்களாக ஏதோ தொடர்பு இருந்திருக்க வேண்டுமென்று தான் தோன்றியது!'' என்றான்.

''இருக்கும், அப்படியே இல்லா விட்டாலும் இந்த ஜன்மத்தில் நாம் சேர்ந்து விட்டோமல்லவா?'' என்றாள் அஞ்சுகம் வெட்கத்தோடு.

''அஞ்சுகம்! என் பாட்டனார், என் பாட்டனாருக்குப் பாட்டனார் எல்லோரும் தங்கள் இளமைப் பருவத்தில் தங்கள் காதலியுடன் இப்படிப்பட்ட உல்லாசமான நிலவொளியில், இந்த அழகான முற்றத்தில்தான் பவனி வருவார்கள்... அந்தக் கதைகளையெல்லாம் இந்த மேடையைக் கேட்டால் சொல்லும்... அந்த முற்றத்தில்தான் இன்று நானும் நீயும்...'' என்று சொல்லி விஜயரங்கன் அஞ்சுகத்துக்குத் தன்னுடைய இதய அந்தரங்கத்தைத் திறந்து காட்டினான்.

காதலர்களின் காதல்கனி மொழிகளை இனிமேலும் கேட்டுக் கொண்டிருப்பது உசிதமல்ல என்பதை உணர்ந்தவன் போல் தனக்குச் சமீபமாக இருந்த கருமேகத் திரைச் சீலையை இழுத்துத் தன்னை மூடி மறைத்துக் கொண்டான் சந்திரன்.

(தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited. Managing Editor: T. Sadasivam.

# உங்கள் வீட்டுக்கு வேண்டியது விம்

# அப்பழுக்கின்றி விரைவில சுத்தம் செய்யும்!



உங்களுடைய சமையல் பாத்திரங்களை மினுக்கச் செய்தால் மட்டும் போதாது — சுகாதார ரீதியாக அவை சுத்தமாக வேண்டும்! விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட, துலக்கும் பவுடராகிய விம் உபயோகியுங்கள்; அழுக்கு, பசை யாவையும் நொடிப் பொழுதில் விரட்டிவிடலாம்! ஒரு ஈரத்துணியில் விம் தூவி, தேய்த்தலம்பி, உலர விட வேண்டியது தான் தாமதம் ... எல்லாம் ஒளி மயமாகக் காண்பீர்கள்! எவர்சில்வர், சாதாரண பீங்கான், கண்ணாடி சாமான்கள், வாஷ் பேஸின்கள், பாத்திரங்களைக் கழுவும் பேஸின்கள், தரைகள், ஓடுகள் ஆகியவற்றைத் துலக்குவதற்கும் விம் பயன்படும். அது சிக்கனமானது என்பதும் உங்களுக்குத் தெரியவரும் — சிறிதளவு விம் உபயோகித்தாலும் அதிகமான அளவு பரிசுத்தம் காணலாம்.




இந்தியாவில் தயாரித்தது



**விம் — விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட, துலக்கும் பவுடர்**

